லடங்கிய ஸகல பொருள்களிலும், அந்தக்கரண பேதமாகிய புத்தியைப் போல சுத்தமானபொருள் வேறொன்றுமில்லை. சுத்தமான பதார்த்தத்தில் அருகிலுள்ள பொருள் பிரதிபிம்பிக்குமென்பது மறுக்கக்கூடியதல்ல. ஆகையால் பரம்பொருள் அந்தக்கரணத்தில் நிச்சயம் பிரதிபிம்பிக்கும் என ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வுலக நியாயயுக்தியை எப்படி மறுக்க இயலும்?

ஆதலால் அனுபவப் பிரமாணயுக்திகளால் பரம்பொருளின் பிரதிபிம்பமே ஜீவாத்மா என நிர்ணயிக்கப்படுகின்றது.

## பிம்பப்ரதிபிம்பங்களுக்கு பேதாபேத விசாரணை

இனி பிரதிபிம்பம் பிம்பத்திலும் அந்நியமா? அல்லது பிம்பமேயா என்பதைச் சற்று கவனிப்பாம். பிம்பமிருந்தால் பிரதிபிம்பமுளது. பிம்பமிராவிடில் பிரதிபிம்பமில்லை. ஆதலால் பிரதிபிம்பம் பிம்பத்திலும் வேறல்ல. வேறுதான் எனின் ஆகாசத்தில் ஸூர்யன் இல்லாதபோதும் தடாகத்தில் பிரதிபிம்பம் காணப்படவேண்டும். ஆனால் அப்படி இல்லை. அன்றியும் முகம் கண்ணாடியில் பிரதிபிம்பித்திருக்கின்றது. கண்ணாடியிலுள்ள அந்தப் பிரதிபிம்பம் உண்மையெனின் கண்ணாடியின் கனம் எவ்வளவு? முகத்தின் கனம் எவ்வளவு? என்பதை யோசிக்கவேண்டும். அவ்வளவு பெரிய முகம் சிறிய கண்ணாடியில் இருத்தல் எப்படி உண்மை என்பது ஒவ்வும்? ஆதலால் பிரதிபிம்பம் தோற்றமாத்திரமே. அதன் உண்மை பிம்பத்தைத் தவிர வேறல்ல என்பதே நிர்ணயமாகும். ஆயினும் வ்யவஹாரத்தில் பிரதிபிம்பம் பிம்பத்திற்கு அன்யமாகவே இருக்கின்றதெனவும் பரமார்த்தத்தில் பிம்பத்திற்கு அன்யமல்ல எனவும் நிச்சயமாகின்றது. வ்யவஹாரத்தில் அன்யமாகவும் பரமார்த்தத்தில் ஒன்றாகவும் இருக்கும் வஸ்துக்கள் உலகில் ஏராளமாய் உள்ளன. பரமார்த்தத்தில் பிம்பமாகிய பரம்பொருளைக் காட்டிலும் ஜீவாத்மாவாகிய பிரதிபிம்பமானது வேறல்லவாதலால் "தத்வமஸி", "அது நீயாகின்றாய்" என மஹாவாக்யங்கள் ஐக்கியத்தைக் கூறுகின்றன. ஒரே நிலைமையில் பேதாபேதங்களிரண்டையும் கூறினால் விரோதமுள்ளதெனலாம். பரமார்த்த தசையில் அபேதமும் வ்யவஹார தசையில் பேதமுமாகிய இவ்விரு வகைகள் சிறிதும் விரோதமாகாதென்றறிக. ஆதலால் சாஸ்திர வாக்யங்களில் சிறிதும் விரோதமில்லை.

ஜீவாத்ம ஸ்வரூபம் முதல் அத்தியாயம் முற்றிற்று.



இரண்டாம் அத்தியாயம்

## மனிதப் பிறவியும் அதன் பயனும்

---

இதற்குமுந்திய அத்தியாயத்தில், ஸச்சிதானந்த ஸ்வரூபனும் சரீரத்திற்குள்ளும் வெளியிலும் வியாபகனுயுள்ள பரமாத்மாவின் பிரதிபிம்பமே ஜீவாத்மா வெனவும், எல்லா மறிவோனுன பரம்பொருளின் பிரதிபிம்ப மாதலால் ஜீவாத்மாவும் ஞானப் பொருளேயன்றி அசேதனனல்ல எனவும் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஜீவாத்மா தனது ஆதாரத் தலைவனுகிய பரமாத்மாவை அறிந்து சித்தத்தை அவனிடமே செலுத்துவானுயின் ஜனனமரண ஸம்ஸாரத்தினின்றும் விடுபடலாம். அஃதின்றி மனம்போன போக்கில் புத்தியைச் செலுத்தி, அம்மனத்தை இந்திரியங்களின் வழிவிட்டு, இந்திரியங்களையும் வெளி வஸ்துக்களாகிய உலகப் பொருள்களில் செலுத்திக்கொண்டு, உலகப் பொருள்களையே நாடிக் கொண்டிருப்பானுயின் ஜனன மரணம் ஒருபோதும் நீங்காது. ஜீவாத்மா வெளிப் பொருள்களாகிய விஷயங்களையும், அவைகளிலேயே ஸதா சென்று அப்பியாஸத்தில் ஊன்றிய வாஸனைகளோடு கூடிய இந்திரியங்களையும், அவ்விந்திரியங்களையே அனுஸரித்து ஸதா உலகவிஷய ஸங்கல்பங்களைச் செய்துகொண் டிருத்தலாகிய அப்பியாஸம் ஊன்றப்பெற்றுள்ள மனத்தையும், அம்மனத்தையே அனுஸரித்து புத்தியையும் செலுத்திக்கொண் டிருத்தலால் எப்போதும் உலக வ்யவஹாரத்திலேயே ஈடுபட்டு மூழ்கி இருக்கின்ருன். ஆதலால் பிம்பமாகிய பரம்பொருள் விளங்குகின்றதில்லை. அவிவேகியாகிய மனிதனை நோக்கி நாம் 'உனக்குப் பரம்பொருள் தெரிகின்றதா' வென வினவுமோமாயின், 'அவ்விதம் ஓர் பொருள் இல்லவேயில்லை; இருந்தால் எனக்குத் தெரியாதா' எனக் கூறுவான். ஐயோ! இவன் என்ன செய்வான். பிரபஞ்சப் பொருள்களிலேயே இந்திரிய மனே புத்திகள் சென்றுகொண் டிருந்தால் பரம்பொருள் எப்படி விளங்கும்?

ஒருவன் தேவ பாஷையாகிய ஸம்ஸ்கிருதத்தில் ஞானத்தை ஸம்பாதித்துக்கொள்ள விரும்புகிருன். ஆனல் தமிழ்ப்பாஷா நூல்களையே ஸதா படித்துக்கொண்டு ஸம்ஸ்கிருத பாஷையில் புத்தியைச் செலுத்தாமலே இருந்தானுயின், ஸம்ஸ்கிருத பாஷையின் ஞானம் உண்டாகுமா? அங்ஙனமே ஒருவன் வடதிசையிலுள்ள ஓரிடத்துக்குப்

போக விரும்புகின்றான். அவன் தென் திசையையே நோக்கி சென்று கொண்டிருந்தால் விரும்பிய இடத்தை எப்படி அடையக்கூடும்? அது போல எப்பொழுதும் உலக விஷயங்களிலேயே உழன்றுகொண் டிருப்பவருக்குப் பரம்பொருள் விளங்காதன்றோ? பள்ளம் கண்ட வாக்கில் சென்றுகொண்டிருக்கும் நதியின் ஜலத்தை அணைக்கட்டினால் தடுத்து மேட்டிலுள்ள பூமியில் செலுத்தினால், நெல் கோதுமை முதலிய சாகுபடிகளைச் செய்து தான்ய லாபத்தை அடையலாம். அதுபோலவே வெளி வஸ்துக்களிற் செல்லவிடாமல் தடுத்து, சித்தத்தைப் பரம்பொரு ளிற் செலுத்தினால் பரமானந்தத்தை அடையலாம்.

## மனிதப்பிறவியானது பரமாத்மாவை அறிவதற்கே

மனிதப்பிறவி ஒன்றே பரம்பொருளை யறிந்துகொள்ளத் தக்க ஸ்தானமாயுள்ளது. பசு பக்ஷ்யாதி மற்ற ஜீவராசிகளுக்கு சித்தத்தைப் பரம்பொருளினிடம் செலுத்த இயலுகின்றதில்லை. ஆதலால் பரமாத்ம சுகத்தை பெறுதற்கெனவே நமக்கு இந்த ஜன்மத்தை இறைவன் அருளி இருக்கின்றான். அதனை நாம் வீணாக்கிக் கொண்டோமாயின், மற்ற ஜந் துக்களைக்காட்டிலும் எவ்விதத்தில் உயர்ந்தவராவோம்? பரம்பொருளி னிடம் சித்தத்தைச் செலுத்தாத மனிதரைக் காட்டிலும் பசு பக்ஷ்யாதி ஜீவன்களே மேலானவை என்பதும் பொருந்தும். எப்படியெனின், மற்ற ஜந்துக்கள் செய்யும் கார்யங்கள் பாபபுண்யங்களாவனவல்ல. பரம்பொருளை அறியாத மனிதரின் செய்கைகள் பாப புண்யங்களாகும். மனிதப்பிறவி யில் ஸம்பாதிக்கப்படும் பாப புண்யங்களின் பயன்களே மற்றப் பிறவி களைப் பெற்று அனுபவிக்கப்படுகின்றன. பசு பக்ஷ்யாதிகளோ வெனின், முன்னர் ஸம்பாதித்த பாப புண்யங்களின் பயனை அனுப விப்பவை மாத்திரமேயன்றிப் புதிதாக வினைகளை ஸம்பாதிப்பனவல்ல. ஆதலால் அவைகளின் செய்கை மீண்டும் பிறவிகளுக்கு ஹேதுவாகாது. மனிதரின் செய்கைகளே பாபபுண்ய வினைகளாகின்றமையால் மீண்டும் ஜன்மங்களுக்கே காரணங்களாகின்றன. இவ்விஷயத்தைக் கவனித்தால் பரம்பொருளினிடம் சித்தத்தைச் செலுத்தாத மனிதரை ஏனைய ஜந்துக் களைக்காட்டிலும் இழியவர் எனக் கூறுவது முற்றும் உண்மையேயாகும்.

பாப புண்யங்களை அறிந்துகொள்வதற்காவது, பரம்பொருளி னிடம் சித்தத்தைச் செலுத்துவதற்காவது வேண்டிய பரிபாகம் இதர ஜந்துக்களுக்கு இல்லை. மனிதப் பிறவிக்கோ எனின் பரமாத்மாவினிடம் சித்தத்தைச் செலுத்த வேண்டிய பரிபாகம் உள்ளது. பூர்வ ஜென் மங்களில் மனிதப் பிறவியும் ஸம்பவித்திருக்கக் கூடுமன்றோ? அந்தப் பிறவியில் ஸம்பாதித்திருக்கும் பாப புண்யங்களுக்குத் தக்கவாறு ஜீவான்

மாக்களுக்குப் பிறவி வந்துகொண்டிருக்கின்றது. அவ்வாறுள்ள பூர்வ வினைத் தொகுதிகளுள் அடங்கிய ஏதோ ஓர் பாப வினையின் பயனை அனுபவிப்பதற்காகப் பசு பக்ஷியாதி ஜென்மங்கள் ஏற்பட்டிருக்கின்றன. குறிப்பிட்ட அவ்வினை அந்த ஜென்மத்தினால் ஒழியவே வரிசைக்கிரமத்தில் அதற்கடுத்தாற்போல் பயன்தர வரும் வினையின்படி மறு பிறவி ஏற்படும். ஒருக்கால் அவ்வினையானது புண்யமாய் நேர்ந்திருப்பின், அச் செந்துக்களுக்கு அடுத்தபடியாக உத்தம ஜென்மம் கிடைக்கலாகும். ஆனால் மனிதருக்கு மாத்திரம் அவ்வாறின்றாம். முன் வினைத்தொகுதிகளில் ஓர் வினையின் பயனாக வந்த இம்மனிதப்பிறவிக்கு அடுத்ததாக இழிய பிறவியும் வரலாம். ஏனெனின் இம்மனித ஜென்மத்தில் ஏற்பட்டுள்ள புதிய வினைகளுக்குத் தக்கவாறே இதற்கு அடுத்த ஜென்மம் வருவதாகும். ஒருக்கால் இந்த ஜென்மத்தில் புதிதாகக் கடும்பாபங்களைச் செய்திருப்போமாயின், இதற்கு அடுத்தாற்போல் நாகலோகம் சென்று கொடும் யாதனைகளை அனுபவிக்கும்படி ஏற்படும். ஆகையால் பாபபுண்யங்களைப் பகுத்தறிந்து பாபங்களைச் செய்யாமல் புண்யங்களையே இப்போது செய்தலால் பூர்வ ஜென்மங்களில் ஏற்பட்டுள்ள பாபங்களை ஒழித்து, பரமாத்மாவினிடம் சித்தத்தைச் செலுத்தும் மனிதரையே மனிதப்பிறவியின் பயனை அடைந்தவர் என்று கூறுவது தகும். அவ்விதமல்லாத மனிதரை மிருகங்களிலும் இழிய இருகால் மிருகங்களெனவும், பக்ஷிகளிலும் இழிய இறெக்கை அற்ற பக்ஷிகளெனவும் கூறவே தகும். நிற்க, மேல்விஷயத்தை நாடுவோம்.

மனிதர் உலக வஸ்துக்களையே இன்பத்திற்கு ஹேதுக்களெனத் தீர்மானமாய் எண்ணி இருத்தலால், விஷயங்களையே நாடிக்கொண்டு இந்திரிய ஆராமர்களாய் மனம்போன வழியே சித்தத்தைச் செலுத்திக்கொண்டு ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி எனும் அவஸ்தாத்ரயங்களிலும் உழன்று அல்லற்படுகின்றனர். ஜாக்ரத் என்பது ஜீவான்மா வெளிப்பொருள்களை நாடி அவைகளில் உழலுதலாம். இதனை 'நினைவு' எனக் கூறலாம். வெளிப்பொருள்களை விடுத்துத் தானாக புதிதாகிய உலகத்தைத் தாறுமாறாக சிருஷ்டித்துக்கொண்டு அதனில் மனோமாத்திரத்தினால் கிடந்துழலும் 'கனவே' ஸ்வப்னமெனும் அவஸ்தையாம். இவ்விரண்டு அவஸ்தைகளிலும் உழன்று அலுத்துப்போய், ச்ரமத்தினால் ஒன்றும் செய்யமுடியாமல் ஓய்வு பெறும்போது, தேஹேந்திரிய மனோபுத்திகளாகிய காரணங்கள் தமோகுணம் மூண்டு நிற்பதாகிய அவித்யை எனும் அஞ்ஞானத்தில் லயித்து அடங்கவே, புத்தியில் பிரதிபிம்பித்திருந்த (சிதாபாஸனை) ஜீவாத்மாவும் அந்த அவித்யையில் மூழ்கி, அந்த அவித்யாப்பிரதிபந்தகத்தோடு கூட பரமாத்மாவில் ஒடுங்கி அந்தப் பேரின்பத்

தில் மூழ்கி இருத்தலே ஸுஷுப்தி என்பதாம். அந்த அவஸ்தையில் ஜீவாத்மா பரமாத்மாவையே அடைகின்றானாயினும், அவித்யையெனும் பிரதிபந்தகத்தோடு கூடியிருக்கின்றமையால் பரம்பொருளை உள்ளபடி யறியாமல் சிறிது நேரத்திற்கெல்லாம் அதனினின்றும் வெளிப்பட்டு மீண்டும் ஸ்வப்ன ஜாக்ரதவஸ்தைகளில் சிக்கிக்கொண்டு முன்போல் பிரபஞ்சத்திலேயே யுழலுகின்றான்.

ஜீவாத்மாவுக்குள்ள நினைவு, கனவு, ஸுஷுப்தி யெனும் இம் மூன்றவஸ்தைகளுள் ஸ்வப்னாவஸ்தையைப்பற்றி இன்னமும் சற்று விசாரணை செய்வோமாகில் பரம்பொருளை நாடாத மனிதப் பிறவியின் இழிவு இதனிலும் நன்றாக விளங்கும். அதாவது ஜாக்ரத் எனும் நினைவினில் இந்த மனிதன் உலகிலுள்ள சிறந்த பொருள்களெல்லாம் தனக்கே சொந்தமாக வேண்டுமென விரும்பி அவைகளைச் சம்பாதிக்க முயலுகின்றான். அளவிலடங்கா ஆசையினால் இவன் எப்படிப்பட்ட அரிய முயற்சிகளைச் செய்தழன்றாலும், தனது விருப்பத்தின்படி அப் பொருள்கள் கிடைப்பதில்லை. நத்தையெனும் ஊரும் ஜந்துவானது தனது மேலோடாகிய எலும்பினால் கீறிக்கொண்டிருத்தல் ஓர் ஸமயம் எழுத்தாக அமைவது போல், பூர்வ புண்யவசத்தால் விரும்பிய பொருள் கிடைப்பினும் அம்மட்டோடு இவனது ஆசை அடங்குகின்றதில்லை. விரும்பியவாறு ஸகல போகங்களையும் பெற்று ஜாக்ரதவஸ்தையில் அனுபவிக்கின்றானாயினும் ஆசை அடங்காமல் கனவிலும் தானாகவே புதிய உலகை சிருஷ்டித்து அதனிலும் உழல்கின்றவனாகின்றான். ஆச்சர்யம்! ஈச்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட இவ்வளவு விரிந்த உலகப் பொருள்களில் சென்றும் ஆசையடங்காதவனாய், தனது துர்ப்புத்திக் கேற்றவாறு தானாகவே பல பொருள்களை ஸ்வப்னத்தில் சிருஷ்டி செய்கின்றவனாகிய இவனது ஆசாபிசாசத்தின் வலிமையை என்னென்றுரைப்பது? இதற்கு ஒரு உதாஹரணம் காட்டுவோம். யாத்திரை செய்துகொண்டிருக்கும் மனிதனொருவன் பசியினால் வருந்தி போஜனத்திற்கு இடம் தேடித் திரிந்தபோது, பிரபு ஒருவர் அவனைத் தனது வீட்டிற்கு அழைத்து அறுசுவையுடன் கூடிய சிறந்த விருந்து போஜனத்தை யளித்து மிகவும் உபசரித்தனர். யாத்ரிகன், பிரபு அன்புடன் உதவிய போஜனத்தை அளவுமீறிப் புஜித்தான். அவ் வுணவினால் உதரம் பூர்த்தியாகி கண்டமும் நிறைந்துவிட்டது. அவ்வாறு புஜித்து அவ்வீட்டை விட்டு வெளிவந்து தெருவை நோக்கவே அங்குள்ள எச்சிலிலைக் குவியல்களில் மிஞ்சியிருக்கும் எச்சில் பதார்த்தங்களைக் கண்ணுற்று அவைகளையும் புஜிப்பவனானாயின் அந்த விஷயம் இங்கு திருஷ்டாந்தமாகப் பொருந்தும். ஏனெனின் ஈச்வரனால் படைக்

கப்பட்ட இவ்வெளியிலுள்ள பொருள்கள் போதாமல், தானும் புதிய உலகை சிருஷ்டித்து அதனிலும் இன்புற விரும்பும் நிலைமையாகிற ஸ்வப்னவஸ்தையின் கொடுமையே விந்தை.

இவ்வாறே இனித் தினந்தோறும் ஸுஷுப்தியில் தனது ஸகல துக்கங்களும் நீங்கி "நான் சுகமாய்த் தூங்கினேன்" என விழித்த வுடன் நிகழும் நினைவைக் கவனித்தால் இதற்குக் காரணமாகிய சுக வஸ்துவின் அனுபவம் ஸுஷுப்தியில் ஏற்பட்டிருக்க வேண்டுமென நன் ருய் நிச்சயிக்கலாம். ஆயினும், மனிதர் அதைப்பற்றிச் சிறிதும் யோசித் துப் பார்க்கின்றதில்லை. ஸுஷுப்தியில் அனுபவிக்கப்படுகின்றதான அந்த ஸுகம் யாது? அது எதனுல் வந்தது? எனக் கவனிப்போமாயின் அது உலகப் பொருள்களுள் ஒன்றும் விளங்காதபோது ஏற்படும் ஸுகமாகையால் பிரபஞ்சவஸ்துவினுல் கிடைக்கும் ஸுகமல்ல எனவும் நிச்சயித்துக் கொள்ளலாம். ஸுஷுப்தி ஸமயங்களெல்லாவற்றிலும் ஒரே விதமாகவும், நிமித்தமாகிய விஷயமொன்று மிராமல் ஸ்வயமாகவே அனுபவிக்கப் படுகின்றமையாலும், ஆதியந்தமிராத நித்திய ஸுகப் பொருள் ஒன்று அந்த ஸமயம் மிஞ்சியிருக்கின்றதெனவும் அதுவே ஸுஷுப்திதோறும் அனுபவிக்கப்படுகின்றதெனவும் திடமாக நிச்சயித் துக் கொள்ளலாம். அந்த ஸுகம் ஒப்புயர்விரா்த தாகையால் நிரதிசயா னந்த வஸ்துவெனவும்,அதுவே சிதாபாஸனுகிய ஜீவாத்மாவுக்கு பிம்பமும் ஆதாரத்தலைவனுமா யுள்ளதெனவும், அதனைப் போதிப்பதற்கென ஸகல உபநிஷதங்களும் பிரவர்த்தித்துள்ளன எனவும் சாஸ்திரம் கூறுகின்றது.

இப்படிப்பட்ட நித்தியஸுகவஸ்து தேகத்திற்குள்ளிருக்க, அத னிடம் சித்தத்தைச் செலுத்தி இன்புறுதற்கு வழியைத் தேடாமல், வெளி யிலுள்ள துன்பப்பொருள்களாகிய உலக வஃதுக்களையே இன்பம்தரும் பொருள்களென்று மதிமயங்கி எண்ணிக்கொண்டு உலக பதார்த்தங்களி லேயே சித்தத்தைச் செலுத்திக்கொண்டு திரிவோர்களாயுள்ள மனிதரின் வாழ்க்கையைக் காட்டிலும் சோக ஹேது வேறு யாதுளது?

ஸுகத்திற்காக உலகப்பொருள்களை நாடிக்கொண்டிருக்கும் மனிதர்களின் எண்ணப்படி பிரபஞ்ச வஸ்துக்களின் போகத்தினுல் ஸுகம் சிறிதேனும் கிடைக்கின்றதா? எனச் சற்று ஆலோசித்துப் பார்ப் போமாக.

விஷயபோகங்களால் இன்பம் காலத்ரயத்திலு மில்லை. துன்பமே அவைகளின் பயன். விஷயங்களை யனுபவித்தலினு லேற்படுகின்ற துன் பத்தை இன்பமென வெகு நீண்ட பல ஜன்மங்களில் எண்ணியதனுலேற் பட்ட ஸம்ஸ்காரங்களால் (அப்பியாஸ வாஸனைகளால்) இப்போதும் அத்

துன்பத்தில் இன்பபுத்தி யேற்படுகின்றது. ஓர் வஸ்துவை மற்றொன்றாக எண்ணுதல் ப்ரமம் எனப்படும். அத்தகைய ப்ரமமுடையோர்களை ப்ராந்தர்களென்பதாம். மனிதர் விஷயங்களாலுண்டாகும் துன்பத்தை ப்ராந்தியினாலேயே இன்பமென எண்ணுகின்றனர்.

இனி விஷயத்தினின்றும் துன்பமே விளைவது உண்மையெனின் இஷ்டப்படி விஷயபோகங்களில் இருப்பவர் "ஸகல விஷய ஸம்பத்துக்களும் என்னிடம் பொருந்தியிருத்தலால் நானே ஸுகி" எனக் கூறுகின்ற அனுபவத்திற்குக் கெதி என்ன" எனும் சங்கை ஏற்படலாம். ஆகையால் இங்கு அதனைச் சற்று ஆராய்ந்துபார்ப்போம்.

"ப்ரதானமல்ல நிர்வஹணம்" எனும் ஓர் நியாயமுண்டு. மல்லயுத்த வீரர்களுள் பிரதான வீரனை வென்றால் அது மற்றவர்களையும் வென்றதாகும். அதுபோல ஸகல லோகங்களிலும் ஸகல ஜீவர்களாலும் விசேஷமாக அங்கீகரிக்கப்பட்ட ஸ்த்ரீபுருஷ ஸம்பந்தஸுகம் துன்பமென வித்திக்குமாயின் மற்ற விஷய ஸுகங்களெல்லாவற்றையும் துன்பங்களே என நிச்சயித்துக்கொள்ளலா மாகையால் முதன்முதலாக அதனைச் சற்று நிரூபிப்பாம். அவ்விஷயத்தை இங்கு விரிவாக எழுதுதல் அநாகரிகம் எனச் சிலர் எண்ணக்கூடுமாயினும், மானஹானிக்கிடமாகிய பிராதுகளில் வக்கீல்கள் செய்யும் தாறுமாறாகிய குறுக்கு விசாரணை, நியாயாதிபர் உண்மையறிந்துகொள்ள அவசியமான ஹேதுவாகின்றதுபோல உலகப்பொருளில் வைராக்யம் உதித்துத் திடமாவதற்காக இங்கு இவ்விதம் விசாரிக்கப்படுகின்றது.

அதாவது ஸ்த்ரீ புருஷர்களாகிய இருவர்களின் சரீரங்களும் மாம்ஸ மலாதிபிண்டங்களே. அப்படிப்பட்ட சரீராவயவங்களுள் காமத்தினால் விரும்பப்படும் அவயவங்களோ மிகவும் அசுத்தக் களஞ்சியம். துர்நாற்ற முடையதும் மலமூத்திர ருதிராதிகளோடு கூடியதுமாகிய ஸ்திரீ தேஹாவயவத்திற்கும் ஆண் தேஹாவயவத்திற்கும் கொஞ்சமேனும் வேற்றுமையுண்டா? ஆயினும் காமுகர்களான புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் அவ்வவயவங்களில் ஸௌந்தர்ய புத்தி யுதிக்கும். சிகை கூந்தல்களாகிய மயிர்கள் நீங்கிய ஸ்த்ரீ புருஷமுகங்க ளிரண்டுக்கும் வித்தியாஸம் யாதேனு முளதா? காமுகர்களாகிய அவ்விருவர்களுக்குள் ஒருவர் முகம் மற்றொருவருக்கு இன்ப ஹேதுவாகக் காணப்படுகின்றது. புருஷரின் இடுப்பிலுள்ள அவயவத்திற்கும் ஸ்த்ரீகளின் மார்பிலுள்ள அவயவத்திற்கும் வஸ்துதத்வத்தை நோக்கின் பேதம் சிறிதேனும் தோன்றக் காரணமுளதோ? ஆயினும் காமுக புருஷர்கள் அந்த அவயவங்களைக் காண எவ்வளவு ஆவலுள்ளவர்களாகின்றனர்? ஸாத்விக

பக்தியோடு பலகாலம் தவம்புரிவோன் பரமேச்வர மூர்த்தியைக் காண்பதில் எவ்வாறுளனோ அவ்வாறே அந்த அவயவங்களைக் காண்பதில் காமமோஹத்தினால் ஆவலுடையவர்களாகின்றனர்.

𑌨𑌾𑌰𑍀𑌸𑍍𑌤𑌨𑌭𑌰𑌨𑌾𑌭𑍀𑌦𑍇𑌶𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌮𑌾𑌗𑌾 𑌮𑍋𑌹𑌾𑌵𑍇𑌶𑌂 |
𑌏𑌤𑌨𑍍𑌮𑌾𑌂𑌸𑌵𑌸𑌾𑌦𑌿𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 𑌮𑌨𑌸𑌿𑌵𑌿𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌵𑌾𑌰𑌂𑌵𑌾𑌰𑌂 ||

" நாரியின் ஸ்தனபாரங்களையுடைய நாபிதேசத்தைக் கண்ணுற்று இதற்கு மேலுள்ள இரண்டு அவயவங்களும் கண்ணுக்குச் சற்றுப் புலப்படாதா! எனும் ஆவலுடையவனான ஓ மூடா, இந்த மோஹாவேசத்தை அடையாதிரு; இது மாம்ஸம் வஸை முதலியவைகளின் விகாரமென அடிக்கடிச் சிந்தித்துப் பார்" என பகவத்பாத ஸ்வாமிகள் கூறிய வண்ணம் உண்மையன்றோ. இவ்வாறுள்ள மாம்ஸ கண்டங்கள் ஒன்றுக்கொன்று மோதிக்கொள்ளுதலை இன்பமெனக் கருதுவது ஒவ்வுமா? கிராமங்களில் வாழும் கயவர்களின் குதூஹலார்த்தமாக ஆட்டுக்கடாக்களுக்கு ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளும் சண்டை நடைபெறுவது போல, காமதேவன் ஸந்நிதியில் நடைபெறுகின்றதாகிய மாம்ஸ பிண்ட மோதுதலை இன்பமெனக் கருதுகின்ற மாந்தரின் மோஹத்தைக் காட்டிலும் இழிய மோஹம் வேறு யாதிருக்கின்றது?

ஸ்திரீ புருஷ ஸம்யோகத்தினால் அவர்களின் அங்கங்களினின்றும் வீர்ய ரூபமாய்க் காமதேவன் வெளிப்படுகின்றான். மந்திரி பிரதானி முதலியவர்களால் சூழப்பட்டுள்ள மஹாராஜாவின் முன்னிலையில் நிற்கின்ற சேவகனுக்கு அடக்கமுடியாத சிரிப்புக்கு நிமித்த மேற்படுமாயின், அச்சேவகன் அச்சபையினின்றும் வெளிப்போகின்றான். சிரிப்பு வேகம் அடக்க முடியுமாயின் வெளிவாராமல் அவ்விடத்திலேயே இருக்கின்றான். அதுபோல இந்திரியாதிகளின் அபிமானி தேவர்களோடு சரீரத்திற்குள் விளங்கும் ஸர்வக்ஞனும் ஸர்வ வல்லமை பொருந்தியவனுமான ஸச்சிதாநந்தப் பரம்பொருளின் முன்னிலையிலுள்ள காமதேவனாகிய வேலைக்காரன் மாம்ஸ பிண்டங்:களான ஸ்த்ரீ புருஷ சரீரங்களில் மஹா மோஹத்தினால் நிகழுகின்ற சேஷ்டையைக் கண்டு, அடக்கமுடியாத சிரிப்பு ஏற்படும்போது அவ்விடம்விட்டு வீர்யரூபமாக வெளிவருகின்றான். இங்கு ஓர் சங்கை ஏற்படலாம். அதாவது ஸ்திரீ புருஷர்களுக்கு ஸங்கம சேஷ்டையால் இன்ப மேற்படுகின்றதில்லை. துன்பமே காமமோஹத்தினால் இன்பமாகக் கருதப்படுகின்றதென்பதை ஒத்துக்கொள்கின்றோம். ஆனால் அங்ஙனம் ஸங்கம சேஷ்டையால் இன்ப மேற்படாவிடினும் காமசாந்தி ரூபமான துக்கநிவிருத்தி

ஏற்படுகின்றதென்பதில் குற்றம் யாதுமில்லையே. இன்பத்திற்காக அந்த சேஷ்டை என்பது அநுசிதமாயினும் அடக்கமுடியாத காமத்தினுலேற்படுகின்ற துக்கத்தை நிவர்த்திப்பதற்காக ஸங்கம சேஷ்டை ஸ்த்ரீ புருஷர்களுக்கு அவச்யமே என்பது பொருந்தாதோ என்பதாகச் சிலர் எண்ணக்கூடும். ஆகையால் இவ்வெண்ணமும் உசிதமாகாதென்பதை நிரூபிப்பாம்.

அதாவது ஸங்கம சேஷ்டையால் காமதுக்கத்திற்கு நீக்கமில்லை என்பதும் தவிர, கிலேசமேற்படுகின்றதென்பதும் உண்மை. பிசாசாவேசமுள்ள பெண், அந்த துஷ்டக்ருஹத்தின் ஆவேசத்தினுல் விபரீத சித்தமுடையவளாய்க் கொண்டு கருங்கல் முதலியவைகளில் தன் தலையை மோதிக்கொள்ளக் காண்கின்றோம். அவ்வாறு மோதிக்கொள்வதனுல் தலை காயப்பட்டு ரக்தம்வந்து கிலேசமேற்படுகின்றதனுல், அவளிடமுள்ள பிசாசாவேசம் நீங்குகின்றதில்லை. அங்ஙனம் நீங்காவிடினும் பிசாசாவேசம் நீங்கியவள்போலக் கருங்கல்லில் தலையை மோதிக்கொள்ளும் சேஷ்டையைச் சற்றுநேரம் விட்டிருப்பாள். அதுபோலவே காமமாகிய பிசாசத்தினுல் ஆவேசமடைந்துள்ள ஸ்திரீபுருஷர்கள் ஸங்கம சேஷ்டையினுல் காம பிசாசாவேசம் நீங்கப்பெறுதவர்களே. ஆயினும் காம பிசாசாவேசம் நீங்கி இன்பமுடையவர்கள் போல ஸங்கமசேஷ்டையினின்றும் நிவ்ருத்தியடைந்தவர்களாகக் காணப்படுவார்கள். உண்மை இவ்விதமாகையால் ஸங்கம சேஷ்டையால் ஸ்த்ரீபுருஷர்களுக்குக் காமம் நீங்குகின்றதென்பது அவிவேகமேயாம்.

நெய் விறகு முதலியவைகளால் அக்கினி சாந்தமாகின்றதில்லை. வ்ருத்தியாகும் என்பதே உண்மை.

நஜாது காம: காமாநாமுபபோகேந ஶாம்யதி |
ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவாபிவர்த்ததே ||

"காம்யப்பொருள்களின் போகத்தினுல் காமம் ஒருபோதும் நீங்குகின்றதில்லை. நெய் முதலிய ஹோம்ய பதார்த்தங்களால் அக்கினிபோல மீண்டும் வளர்ந்தோங்குகின்றது" என்பது முதலிய சுலோகங்களால் பாரதம் யயாதி சரிதத்தில் இவ்விஷயம் விஸ்தாரமாகப் போதிக்கப்பட்டிருக்கின்றது. நேரில் காணக்கூடாத விஷயத்தை அநுமானத்தால் தீர்மானிக்கலாம். மலையில் மழைபெய்ததை நேரில் காணுவிடினும் நதிப்பிரவாஹத்தைக்கண்டு அனுமானித்துக்கொள்ளலாம். அதுபோல ஸங்கம சேஷ்டையினுல் ஸ்த்ரீபுருஷர்களுக்குக் காமநீக்க மேற்படுமாயின் முன்போலவே மீண்டும் அதனில் அவர்களுக்கு ப்ரவ்ருத்தி ஏற்படக்கூடாது. ஆனுல் உலகில் அப்படிக் காணேம். முன்போலவே மீண்டும் ப்ரவிருத்

திக்கின்றனர். இதனாலும் ஸங்க சேஷ்டையால் காமம் நீங்காதென்பதை அனுமானித்துக்கொள்ளலாம். ஸங்கம சேஷ்டையினின்றும் ஸ்த்ரீபுருஷர்களுக்குச் சற்று ஓய்வு உண்டாகின்றதைக் கொண்டு அச் சேஷ்டையினால் இன்பம் அனுபவித்தவர்களாகையால் சற்று ஓய்ந்தனர் என எண்ணுதலும் ஸரியல்ல. ச்ரமத்தினாலேயே அந்தச் சேஷ்டையினின்றும் சற்று ஓய்ந்தனர் என்பதே உண்மை. காமநீக்கத்தினாலும் ஸ்த்ரீ புருஷர்கள் அந்தச் சேஷ்டையை விட்டிருக்கலாம். ச்ரமத்தினாலும் விட்டிருக்கலாம். ஆனால் மீண்டும் அந்த சேஷ்டையைச் செய்யும் ஸத்ரீபுருஷர்கள் மத்தியில் சற்றுநேரம் ஓய்வுபெற்றிருத்தலானது ச்ரமத்தினாலேயே என்பதே உண்மை. இன்ப ப்ராப்தியினாலாவது காமநீக்கத்தினாலாவது சற்று ஓய்ந்திருந்தனர் என்பது சிறிதும் பொருந்தாது.

## காமபோகம் இன்பமல்ல

இங்கோர் த்ருஷ்டாந்தம் காண்க. ஸமமாகிய பலமுடையவர்களான இரண்டு யுத்தவீரர்கள் செய்துகொண்டிருக்கும் யுத்தத்தினின்றும் சற்று ஓய்வுபெற்றிருப்பார்கள். அப்படிச் சற்று ஓய்ந்திருத்தல் ஜயலாபத்தினாலாவது பரஸ்பரமுள்ள விரோதம் நீங்கியதனாலாவது என்பதல்ல. பின்னை எதனாலெனின் கேவலம் ச்ரமத்தினாலேயே என்பது உண்மையாம்.

இங்கு மற்றுமோர் சங்கை ஏற்படலாம். அதாவது, வீர்யம் வெளிவருதலால் ஸுகமேற்படுகின்றதே எனச் சிலர் எண்ணக்கூடும். இப்படி எண்ணுதலும் அவிவேகத்தினாலேயே. வீர்யம் வெளிவருதலால் சிறிதும் இன்பமேற்படுகின்றதில்லை. துன்பமேற்படுதலே உண்மை. ஆயினும் அந்தத் துன்பத்தை இன்பமென காமமோஹத்தினால் எண்ணுகின்றனர். அப்படி எண்ணப்படுவதான வீர்யமோசன ஸுகத்தைக் காட்டிலும் மலமூத்திர மோசனத்தினாலேற்படும் ஸுகம் சிலாக்கியமாகும். வீர்ய மோசனத்தினால் தேகத்தின் பலம் குறைதலும் பச்சாத்தாபமும் ஏற்படுகின்றது. மலமூத்திர பரித்தியாகத்தினால் பச்சாத்தாபமாவது பலக்குறைவாவது ஏற்படுகின்றதில்லை. ஆகையால் வீர்ய பரித்தியாகத்தினால் ஸுகமேற்படுகின்றதென எண்ணிக்கொண்டு அதற்காக ஸங்கம சேஷ்டையில் ப்ரவிருத்தித்தல் மிகவும் அநுசிதமே என்றறிக.

இவ்வுண்மையை அறிந்தவர்களுக்கு மலமூத்திரத் தியாகத்தினால் ஏற்படும் பயனைக்காட்டிலும் இழியதும் தேஹபலத்தைக் குறைத்துத் துன்பத்தைத் தருவதுமாகிய வீர்ய பரித்தியாகத்தின் பயனைக்கருதி தேவலோகஸ்திரீகளிடம் ஸங்கம சேஷ்டையை விரும்பி காம்யகருமங்க

ளாகிய யாகாதி க்ருதுக்களைச் செய்ய முயற்சிப்பதும் அவிவேகத்தினுலேயே என்பதும் இனிது விளங்கும்.

இனி வீர்யத்தை அற்பமாகிய இழிய பயனைக் கருதித் தியாகம் செய்தல் எப்படிப்பட்டதென்பதைச் சற்று கவனிக்கவேண்டும். துடைப்பத்தினுல் கூட்டித் தள்ளப்படும் குப்பையை விரும்பி அதற்காகக் கையிலிருக்கும் சிந்தாமணியைத் தியாகம் செய்வது போன்றதேயாகும்.

இனி மற்றுமோர் சங்கை உதிக்கக்கூடும். அதாவது புத்திராதி ப்ரஜையின் உற்பத்தியினுலேற்படும் இன்பத்தைக் கருதி வீர்ய பரித்தியாகத்தைச் செய்வதற்காக ஸங்கம சேஷ்டையில் பிரவர்த்திப்பது உசிதமே என்பது பொருந்தாதோ என்பதாம்.

## புத்திராதி ப்ரஜையாலும் ஸுகமில்லை

இச்சங்கையும் அவிவேகத்தினுலேயாம் என்றறிக. ஏனெனின், புத்திராதி ப்ரஜைகளினுல் இன்பமே ஏற்படுகின்றதென நிச்சயமாய்ச் சொல்லக்கூடியதல்ல. அதாவது புத்திராதிகள் பிரதிகூலர்களாய் இருப்பார்களாயின், அதனிலும் பெரிய துக்கம் யாதுளது? பிரதிகூலப் பிரஜையினுலேற்படும் துன்பத்தைச் சகிக்கமுடியாமல் தற்கொலை செய்து கொள்ளப் பிரவர்த்திக்கும் மனிதர்களையும் உலகில் காணலாம். ஆகையால் பிரஜாலாபத்தினுல் ஏற்படும் பயன் துன்பமோ இன்பமோ என நிச்சயிக்க முடியாமலிருக்கும்போது அதைக் கருதி வீர்ய மோசனத்தைச் செய்தலாகிய ஸங்கம சேஷ்டையில் இறங்குவது மஹா மூடனது செய்கையே யாகும்.

எருமைச் சாணித்தண்ணை விரும்பி அதற்காகக் கையிலுள்ள தேவாமுதத்தைத் தியாகம் செய்வோனை அத்தேவாமுதம் சபிக்கும். அதுபோல காம மோஹத்தினுல் ஸங்கம சேஷ்டையில் ஏற்படும் இன்பாபாஸத்தைக் கருதி வீர்ய பரித்தியாகத்தைச் செய்ய விரும்பும் மனிதனை வீர்யாதிஷ்டான தேவதை சபிக்கும்.

## ஓஜஸ் எனும் தாதுவின் பெருமை

விவேகத்தினுல் காம மோஹத்தை நீக்கி, வீர்ய பரித்தியாகத்தை நிறுத்தி, தேகத்திலேயே அதனை நிலைத்திருக்கச் செய்வோமாயின், அந்த வீர்யம் ஓஜஸ் எனும் ஓர் தாதுவாகப் பரிணமிக்கும். ஓஜஸ் எனப்படும் வஸ்துவானது ச்ரத்தா பக்தி வைராக்யங்களைத் தரும். ராக, த்வேஷ, லோப, அஸூயா, ஆலஸ்யாதி ரஜஸ் தமோகுண கார்யங்களை அடியோடு ஒழியச் செய்யும். தத்துவ சாஸ்திர கிரந்தங்களில் ஓர்

தடவை சித்தத்தைச் செலுத்தினால் பச்சை மரத்தில் ஆணிபோல் சித்தத்தில் திடமாகப் பதியும். மறதி சிறிதும் ஏற்படாது. பரம்பொருளில் சித்தத்தைச் செலுத்தும். அங்ஙனமாயுள்ள ஓஜஸ் எனும் வஸ்துவின் பிரபாவத்தை முகக் காந்தியாலும் அறியலாம். வீர்யத்தைப் பரித்தியாகம் செய்யாமல் தேகத்திலேயே நிரோதம் செய்து ஓஜஸ் எனும் வஸ்துவாகச் செய்துகொண்ட மஹா புருஷனுடைய யோக்யதையானது பஞ்சபூதங்களையும் அஞ்சும்படி செய்யும். அன்னபானுதி ஆகாரங்களின் மூலமாகப் புருஷ தேஹத்தை அடைந்துள்ள ஜீவாத்மா அன்னஸாரத்தினின்றும் வீர்யத்தை அடைந்து வீர்யத்தின் மூலமாக ஸ்திரீயின் கர்ப்பத்தை அடைவான். வீர்யத்தை வெளிப்போக்காமல் காம மோஹத்திற்கிடங்கொடாமல் காமத்தை ஜயித்து வீர்யத்தை ஓஜஸ் எனும் தத்வமாகச் செய்துகொண்டவனுடைய வீர்யத்திலிருக்கும் ஜீவாத்மாவும் அந்த வீர்யவான் அடையும் பரகதியையே அடைவான். காம ஜயத்தினால் வீர்யத்தை நிரோதம் செய்து வெளிப்படாமல் செய்துகொண்டால் அந்த வீர்யத்திற்கு இவ்வளவு பிரபாவம் ஏற்படுமாதலால் சிந்தாமணி தேவாமுதம் முதலிய பொருள்களை உவமையாகக் கூறியுள்ளோம். ஆகையால் துன்பமே ஸங்கம சேஷ்டையால் ஏற்படும் பயனாயிருக்க, காம மோஹத்தினால் அதனை இன்பமெனக் கருதி விஷய போகத்தில் ஸுகமுளதெனக் கூறும் மனிதர்கள் பசு பக்ஷியாதிகளைக் காட்டிலும் சிறிதும் சிறந்தவராகார் என்பது நிர்ணயம்.

## அந்நபானுதி போகமும் ஸுகமல்ல

ஸ்திரீ புருஷ போகம் உண்மையில் ஸுககாரண மல்லாதிருப்பதுபோலவே இனியவைகளான அன்னபானுதிகளைப் புசித்தலும் ஸுககாரணமாகின்றதில்லை. அதாவது பிராணிகளின் சரீரத்திற்குள் பிராணனும் அக்னியும் இருக்கின்றன. அவ்வக்னியும் பிராணனும் தடையற்றனவாய் ஸதா சரீரத்திற்குள் தத்தம் வேலைகளைச் செய்துகொண்டேயிருக்கும். பிராணன் பசியையும் அக்னி தாகத்தையும் உண்டாக்கும். பிராணிகள் உட்கொண்ட அன்னம் பசியையும் பானம் தாகத்தையும் தடுத்துப் பசிதாகக் கிலேசத்தைச் சிறிதுநேரம் சாந்திசெய்யும். ஓங்கியெரிந்துகொண் டிருக்கின்ற அடுப்புத் தீயில் ஐந்தாறு விறகுகளைச் சேர்த்துப் போட்டுவிட்டால் அங்ஙனம் போட்டவுடன் அடுப்புத்தீ சற்றுத் தடைப்பட்டுச் சாந்தமாய் அடங்கிப்போனதுபோ லிருக்கும். ஆனால் உடனே சற்று நேரத்தில் முன்னிலும் அதிகமாக ஓங்கி ஜ்வலிக்கும். வெய்யிலின் கடுமையால் அனலைக் கக்கிக்கொண்டிருக்கும் கட்டாந்தரைப் பிரதேசத்தில் கொஞ்சம் ஜலத்தைத் தெளித்தால் சற்றுநேரம்

அனல் வீச்சுத்தாபம் குறையும். பிறகு முன்போலவே அனல்வீசும் தாபம் காணலாம். அதுபோல அன்னமும் ஜலமும் சரீரத்திற்குள் விழுதலால் சிறிதுநேரம் பசியும் தாகமும் தணிந்திருக்கும். அப்படி ஏற்படுவதான பசிதாக சாந்தியினிடம் அவிவேகி மனிதன் இன்பமெனும் புத்தியைக் கொண்டு மயங்கி அதனிலேயே ஈடுபட்டு உழலுவான். இதுவே உண்மையாதலால் அன்னபானுதி போக்கியங்களும் ஸுக காரணமல்லவென்பது நிர்ணயம்.

## மற்றுமுள்ள விஷய போகங்களிலும் இன்பமில்லை

இவ்வாறே இனிய கீதநாதங்களைக் கேட்டல், அழகிய உருவங்களைப் பார்த்தல், சிறந்த வாஸனைகளை முகர்தல் ஆகிய மற்ற விஷய போகங்களும் ஸுக காரணங்களல்ல வென்பது நிர்ணயம்.

இவ்விதம் விஷய போகங்களை ஸுக காரணங்களல்ல என நிரூபணம்செய்தது முற்றும் ஸரியே. ஆனல் உலகிலுள்ள ஸகல ஜனங்களும் ஸுகத்திற்காக விஷய போகங்களையே விரும்புகின்றார்களே. அதற்குக் கெதி யாது? விஷய போகத்தில் எல்லோருக்கும் ஸுகம் அனுபவிக்கப் படுகின்றதே. அதனுண்மைதான் யாதோ? என அறிந்துகொள்ள ஆவலேற்படக் கூடும். ஆகையால் அதனுண்மையையும் இங்கு சுருக்கமாக எடுத்துக் காண்பிப்பாம். அதாவது,

மனிதர்களுக்கு முதலில் விஷய வஸ்துக்களின் இச்சையினுல் சித்தம் அலைகின்றது. அந்தச் சஞ்சலமானது அவ்விஷய வஸ்துக்கள் கிடைக்கப்பெறின் சற்று ஒய்வடைகின்றது. அவ்விதமுள்ள சித்த சாஞ்சல்ய (சித்த அலைதலின்) நீக்கமாகிய ஸ்திதியையே மூடத்தனத்தால் ஸுகமென் றெண்ணுகின்றனர். ஆயினும் கூறவந்த முக்கியமாகிய உண்மையை இங்கு கூறுவாம்.

## விஷய ஸுகத்தின் உண்மை

அதாவது, சலித்துக்கொண்டே இருக்கும் கண்ணுடியில் முகப் பிரதிபிம்பத்தைக் காண இயலாது. தடாக ஜலம் பெருங்காற்றினுல் மிகவும் சலித்துக்கொண் டிருக்கும்போது அதனில் எதிரிலுள்ள பொருள்கள் பிரதிபிம்பிக்கின்றனவல்ல. கண்ணுடியோ ஜலமோ சலனமின்றி நிச்சலமா யிருக்கும்போது எதிரிலுள்ள வஸ்துக்கள் பிரதிபிம்பிக்கக் காண்கின்றோம். ஒப்புயர்வற்ற ஓர் பெரிய ஸுக வஸ்துவானது சரீரத்திற்குள்ளும் வெளியிலும் வியாபகமா யிருந்துகொண்டு தினம் தோறும் ஸுஷுப்தி ஸமயத்தில் அனுபவிக்கப்படுகின்றதென இதற்கு முந்திய அத்தியாயத்தில் கூறியுள்ளோம். விஷய இச்சையினுல் ஏற்பட்

டிருந்த சித்தத்தின் அலைவு, விரும்பிய பொருள் கிடைத்தலினால் சற்று ஓயும்போது, அந்தச் சித்தத்தில் அங்குள்ள ஆனந்தவஸ்து பிரதி பிம்பிக்கின்றது. அவ்வானந்த வஸ்துவே ஸச்சித்ரூபனான பரம்பொருளாம். பேரின்ப ஸ்வரூபனான அந்தப் பரம்பொருள் பிரதிபிம்பிக்கின்றமையால் அனுபவிக்கப்படுவதான ஸுகத்தை, விரும்பிய விஷய வஸ்துக்களினின்றும் உண்டாகின்றதெனன மஹா மோஹத்தினால் எண்ணி மனிதர்கள் மேன்மேலும் அந்த விஷய வஸ்துக்களையே சம்பாதிக்க முயற்சிக்கின்றனர். விஷய வஸ்துக்களி னின்றும் இந்த ஸுகம் உண்டாகின்றதல்ல. இது நித்தியமாயுள்ள பேரின்ப வஸ்துவே. என்பதாக அறிந்துகொள்கின்றவர்களா யில்லை. இவ்வுண்மையை யறிந்து கொண்டால் உலகில் ஸுகமென் றெண்ணப்படுவனவாகிய ஸகல ஸுகங்களும், விஷய அகண்ட பரிபூரணானந்த வஸ்துவாக உள்ள பரசிவானந்தத்தின் லேசங்களே யன்றி வேறல்ல. அவ்வாறுள்ள பேரானந்த லேசத்திற்காக உலக விஷயப்பொருளை விரும்பி உழலுதலை விடுத்து, இனி நாம் அகண்ட பரிபூரணானந்தத்தைச் சம்பாதிக்கும் வழியையே தேடவேண்டு மெனும் எண்ணமுதிக்கும். உபநிஷதங்கள்,

"யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத்
கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்

"எங்கும் பரிபூரணமான இவ்வானந்தப் பொருளொன்றில்லையாயின் ஜீவனத்தையாவது ஜீவனத்திற் கனுகூலமான கிரியையாவது வேறு எப்பொருள் செய்விக்கும்? (தைத்திரீயோபநிஷத்),

" ஏதஸ்யைவாநந்தஸ்யாந்யாநி பூதாநி மாத்ராமுபஜீவந்தி"

"இவ்வானந்த வஸ்துவின் லேசத்தினாலேயே விஷயங்களாகிய மற்ற வஸ்துக்கள் இன்ப ஹேதுக்களாகின்றன. (அதாவது உலகிலுள்ள வஸ்துவின் மூலமாக இன்பம் கிடைக்குமாயின் அவ்வின்பம் பரம்பொருளின்பத்தின் லேசமே) என்பவை முதலிய ச்ருதி வாக்கியங்கள் இவ்வுண்மையையே உணர்த்துகின்றன. விஷய இச்சையால் அலைந்த சித்தமானது அந்த விஷய லாபத்தினால் சற்றுநேரம் ஓய்வடையும் போதெல்லாம் இந்தப் பரமானந்த ஸுகமே தோற்றமுறுகின்றதெனின், விஷய இச்சையை அடியோடு வேர்களைந்து தள்ளி எப்போதும் சித்தத்தைச் சலனமிராமல் வைத்துக்கொள்வோமாயின் பரமாத்ம ஸுகத்தையே ஸதா அனுபவித்துக்கொண் டிருக்கலாம்.

இப்போது உலக வஸ்துக்களின் அனுபவங்களால் ஏற்படும் ஸுகத்தை எப்படிப்பட்டதென்பதாக நன்றாக அறிந்துகொள்ளலாம்.

அதாவது சுத்தமான ஜலமுள்ள விரிந்த தடாகத்தினின்றும் உத்தரணி யாகிய சிறிய பாத்திரத்தினால் தீர்த்தத்தை எடுத்து ஸ்நாந பானாதிகளைச் செய்வதுபோல, விஷய வஸ்துக்களின் லாபத்தினால் கிடைக்கும் இன்ப மாம். ஏராளமாகத் தீர்த்தம் தடாகத்திலிருக்க அதைத் தடையற்று உள்ளபடி அனுபவிக்க முடியாமல் உத்தரணி எனும் ஸாதனத்தினால் கொஞ்சங் கொஞ்சமாக எடுத்து ஸ்நாநபானாதிகளைச் செய்வதில் அந்த ஸ்நாநாதி கார்யங்கள் ஸரிவர திருப்தியாக நடைபெறாமலும், அதற்கும் உத்தரணி எனும் ஸாதனம் வேண்டப்படுகின்றமையாலும், எப்படி ச்லாக்கியமன்றோ, அதே தடாகத்தில் ஸாதனங்களாகிய சிறிய பாத்தி ரங்களின் அபேக்ஷையை விட்டு ஸ்வயமாகவே இறங்கி அமிழ்ந்து மூழ்கி ஸ்நாநம் செய்தலும், வேண்டுமளவு அருந்துதலும் எப்படி ச்லாக்கிய மாகுமோ? அப்படியே உத்தரணி போன்ற விஷய வஸ்துக்களின் மூலமாகக் கிடைப்பதான அற்ப ஸுகத்தைத் துச்சமெனவிடுத்துத் தள்ளிப் பேரானந்த ஸ்வரூபமான ஆத்மாவினிடத்திலேயே நேரில் சித்தத்தைச் செலுத்தி யனுபவிக்கும் ஆனந்தம் மேலான தென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? இவ்வுண்மை பகவத்கீதையில்,

"𑌯𑌾𑌵𑌾𑌨𑌰𑍍𑌥 𑌉𑌦𑌪𑌾𑌨𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑌃 𑌸𑌂𑌪𑍍𑌲𑍁𑌤𑍋𑌦𑌕𑍇 |
𑌤𑌾𑌵𑌾𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌵𑍇𑌦𑍇𑌷𑍁 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌯 விஜாநத꞉

அற்ப ஜலஸ்நாநத்தி லேற்படும் ஸ்நாநபானாதிப் பயன் விரிந்த தடா காதி ஜலாசயத்தி லடங்கியதுபோல வேதங்களில் சொல்லிய புண்ணிய கர்மங்களைச் செய்தலினால் கிடைப்பவையாகிய இன்பங்கள் பரம் பொருளை அறிந்துகொள்வதனால் ஏற்படும் ப்ரம்மானந்தத்தில் அடங்கிய வையாம்" எனக் கூறப்பட்டிருக்கிறது. பிரகாசத்திற்குச் சிறிதும் ஸாதனங்களிராத இருட்டறையில் இருந்துகொண்டு நெருப்புக் குச்சியை ஒன்றொன்றாகக் கிழித்து ஏற்படும் பிரகாசத்தினால் புஸ்தகத்தைப் படித்தலுக்கும், ஒரு ஸாதனமும் விரும்பவேண்டிய அவசியமிராத ஸூர்யப் பிரகாசத்தில் படித்தலுக்கும், எப்படி தாரதம்மிய முளதோ அப்படியே விஷய லாபத்தினாலேற்படும் இன்பத்திற்கும் பரமார்த்த வஸ்துவில் சித்தத்தைச் செலுத்துவதனா லேற்படும் இன்பத்திற்கு முள்ள தாரதம்மியமாம்.

## ஸுகானுபவம் பூர்வ புண்ணியப் பயனே

தவிரவும் விஷய வஸ்துக்களினால் கிடைப்பவையாகிய அவ்வற்ப ஸுகங்களும் பூர்வ ஜன்ம புண்ணியம் பரிபக்குவப்பட்டுப் பயன் தரும் போது மாத்திரம் ஏற்படுவனவாம். பூர்வபுண்ணியம் பயன்தரும் ஸமய

மின்றி, பூர்வஜன்ம பாபங்கள் பயன் தரும்போது ஸுகம் கிடைப்பதல்ல. விஷயங்களை விரும்பி அவைகளைச் சம்பாதிக்க முயற்சிக்கின்ற மனிதர்க ளெல்லோருக்கும் கோரியபடி விஷயங்கள் கிடைக்கக் காணேம். முயற்சி யிராமலே கோரிய பொருள் சில ஸமயத்தில் கிடைக்கின்றன. எவ்வ ளவு அரிய முயற்சிகளைச் செய்யினும் சில ஸமயங்களில் கோரிய பொருள் கிடைக்கவில்லை. "அந்தோ நான் எவ்வளவோ முயற்சிகளைச் செய்தும் இப்பொருள் கிடைக்கவில்லையே" எனச் சொல்லிக்கொண்டு, கிலேசமடையும் மனிதர்களை ஏராளமாய்க் காண்கின்றோம். இவ்வித முள்ள உலகானுபவத்தினல், பூர்வ புண்ணியம் பயன்கொடுக்க வரும் போது கோரிய பொருளின் லாபமேற்படும். புண்ணிய கர்மம் பயன் படாதபோது கோரிய பொருள் கிடைப்பதில்லை என அறியலாம். பரம் பொருள் பரிபூர்ணமாயுள்ள ஆனந்தஸ்வரூபம். விஸ்தாரமாயுள்ள தடாக ஜலத்தைப் பாசிகள் படர்ந்து மறைத்துக்கொண் டிருக்கின்றன. பாசிக் கொத்துகளில் ஓரிடத்தில் கொஞ்சம் எடுத்துவிட்டால், அப்படி எடுத்த விடத்தில் ஸ்வல்ப நேரம் ஜலம் காணப்படுகின்றது. உடனே அவ் விடத்திலும் மற்ற பாசிகள் வந்து வியாபித்துக்கொள்கின்றன. ஆகை யால் ஜலம் அடுத்த க்ஷணத்தில் காணப்படுகின்றதில்லை. அதுபோல பூர்வ புண்ணியப் பயனுகிய கோரிய பொருளின் லாபமேற்படும்போது வியாபகமாகவுள்ள பேரானந்தத்தை மறைத்துக்கொண்டிருக்கும் ஆவர ணம் ஸ்வல்பம் சிறிது நேரம் விலகுகின்றது. அப்படி விலகிய க்ஷணத் தில் அவ்வானந்த லேசம் வெளியாகி அனுபவிக்கப்படுகின்றது. புண் ணிய கர்மப்பயன் வாராதபோது அவ்வானந்தம் வெளியாகின்றதில்லை. கையினல் பாசியை விலக்கியபோது காணப்படும் தடாக ஜலத்தைக் கையினின்றும் உண்டானதாக எண்ணுவது போல, கோரிய வஸ்துக் களின் லாபத்தினல் ஸுகம் உண்டாகின்றதென அவிவேகத்தினல் எண்ணுகின்றனர். தடாக ஜலத்தைப் பாசிக்கொத்துகள் ஆவரணம் செய்துகொண் டிருப்பதுபோல ஜன்ம ஜன்மங்களாய் நாம் ஸம்பாதித் துள்ள பாபகர்மங்கள் பரிபூர்ணமாயுள்ள பரம்பொரு ளானந்தத்தை நமக்கு விளங்கவிடாமல் மறைத்துகொண்டுள்ள அஞ்ஞானுவரணத்தோடு நில்லாமல் துக்கங்களையும் தருகின்றன.

புண்ணிய கர்மங்களா லேற்படுவனவாகிய ஸுகானுபவங்கள் பரி பூரணுநந்தத்தின் லேசங்களாய் க்ஷணப்போதிருந்து முன்போல் மறைந்து போகும் அற்பங்களேயாம். புண்ணிய கர்மங்களை எவ்வளவோ கோடிக்கணக்காகச் செய்தாலும் நித்தியமாயுள்ள அந்த அகண்டானந் தானுபவம் கிடைப்பதாகாது. மஹாந்தகாரமாயுள்ள இருளில் மின்னல்

வெளிச்சத்தினால் க்ஷணப்போது பொருள்கள் விளங்குவதுபோல புண்ணிய கர்மங்களா லேற்படுவதான விஷய லாபமும், பரம்பொரு ளானந்தத்தின் லேசத்தை க்ஷணப்போது காட்டிக்கொடுப்பதேயாம். நித்தியமாயும் அகண்டமாயுமுள்ள அவ்வானந்தத்தை உள்ளபடி அனுப விக்க வேண்டுமானால் உலகப் பொருள்களின் லாபத்தை வெறுத்துத் தள்ளி, பரம்பொருளிலேயே சித்தத்தைச் செலுத்தி அபரோக்ஷ ஸாக்ஷாத் கார ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். அல்லாவிடில் ஜனன மரண துக்கத்திற்கே ஆளாகவேண்டும்.

## மரணத்தின் பிறகு ஜீவகதி

ஜனன மரண துக்கம் எப்படிப்பட்டதென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. ஆயினும் சாஸ்திரங்கள் நமக்கு உலக வின்பத்தில் ஆசை நீங்குவதற்காக அதனை நன்றாகப் போதிக்கின்றன. அதாவது உலகப் பொருள்களின் அனுபவத்தாலேயே இன்பமுண்டாகின்ற தெனும் எண்ணத்தால் பரம்பொருளிடம் சித்தத்தைச் செலுத்தாத மனிதர் ஓயாமல் பிறவிப்பிணிக்கே உட்பட்டு அல்லற்படும்படியாகும். அத்தகைய மனிதர்களில் சிலர் பாபங்களையே விசேஷமாய்ச் செய்தவர்க ளாயும், சிலர் புண்ணியங்களையே விசேஷமாய்ச் செய்தவர்களாயும், சிலர் பாப புண்ணியங்க ளிரண்டையும் ஸாமான்யமாகச் செய்தவர்க ளாகவும் இருக்கக்கூடும். இவ்விதம் மூவகையாயுள்ளவர்களுள் பாப கர்மங்களை விசேஷமாகச் செய்தவர்கள் மரித்ததும் நரகலோகம் செல்லு வார்கள். புண்ணியங்களை விசேஷமாய்ச் செய்தவர்கள் ஸ்வர்க்க லோகத்தை அடைவார்கள். ஸாமான்ய பாப புண்ணியங்களைச் செய் தவர் மரித்ததும் மீண்டும் இவ்வுலகிலேயே மனிதப் பிறவியைப் பெறு வார்கள்.

## புண்ணிய கர்மங்களின் பயன்

புண்ணிய கர்மங்கள் 'இஷ்டம், பூர்த்தம்' என இருவகையா யுள்ளன. இஷ்டம் என்பது அக்கினிஹோத்திரம் முதலிய யாகாதி கர்மங்களாகும். பூர்த்த மென்பது வாபீ கூப நந்தவனாதிப் பிரதிஷ்டை, அன்னதானம் ஸ்வர்ணதானம் முதலியவைகளாம். ப்ருதிவி முதலிய ஐந்து பூதங்களின் அணுக்கள் நம் கண்ணுக்குத் தெரியாமல் உல கெங்கும் வியாபித்துக்கொண் டிருக்கின்றன. புண்ணிய கர்மங்களை விசேஷமாய்ச் செய்த மனிதர் இந்த ஸ்தூல சரீரத்தை விட்டுப் பிரியும்போது அவ்வணுக்கள், புண்ணியகர்ம விசேஷத்தால் ஏவப்பட்டு ஸ்வர்க்கம் சென்று இன்பங்களைப் புசிப்பதற்கு அவச்யம் வேண்டிய

தாயுள்ள ஓர் ஸ்தூல சடலமாக அமையும். அந்தச் சரீரமானது அக்கினி யம்சம் மிகுதியா யுள்ளதும் மற்ற பூதாம்சங்கள் மிகுதியா யிராமலுமுள்ள ஆக்னேய ஸ்தூலமாகவோ, அல்லது ஜலாம்சம் ஜாஸ்தியா யமைந்து மற்ற பூதாம்சங்கள் குறைவாயுள்ள ஜலீய ஸ்தூலமாகவோ, அவரவர் புண்ணிய கர்மங்களுக் 'கேற்ப அமையும். புண்ணியம் செய்த ஜீவன், இந்த மனித சரீரம் நீங்கும்போது முற்கூறிய ஆக்னேய ஸ்தூலத்தையோ அல்லது ஜலீய ஸ்தூலத்தையோ பற்றிக்கொண்டு ஸ்வர்க்கலோகம் செல்லுவான். அப்போது, கர்ப்பத்தில் போல மார்க்கத்தில் வ்ருத்தியடைந்து மிகவும் அழகுவாய்ந்து ஸர்வலக்ஷண ஸம்பந்நமான சரீரமாக ஜ்வலிக்கும். அந்த சரீரமே திவ்ய தேஹமெனவும் அம்ருத தேஹமெனவும் சாஸ்திரங்களில் வழங்கப்படுகின்றது. ஸ்வர்க்க மெனும் சொல்லுக்கு அர்த்தமாயுள்ள புண்ணிய உலகங்களில், சில அக்கினியம்சம் ஜாஸ்தியா யமைந்தனவும் சில ஜலாம்சம் ஜாஸ்தியா யமைந்தனவுமா யுள்ளன. சந்திர மண்டலம் முதலிய உலகங்கள் ஜலாம்சம் ஜாஸ்தியான அம்ருத லோகங்களெனவும், சூரியன் ப்ருஹஸ்பதி முதலிய மண்டல உலகங்கள் தேஜோம்சம் மிகுதியா யமைந்துள்ள திவ்ய லோகங்களெனவும் அறிக. ஆகவே அம்ருத ஸ்வர்க்கத்திலோ திவ்ய ஸ்வர்க்கத்திலோ அவ்வுலகங்களினியல்புக்குத் தக்கபடி முற்கூறியவாறு அமைவதான திவ்ய தேஹத்தினாலாவது அம்ருத தேஹத்தினாலாவது அங்குள்ள இன்பங்களை புண்ணிய விசேஷங்களுக்குத் தக்கவாறு புசித்து, மற்ற கர்மங்களின் பயனைப் புசிப்பதற்காக அங்கிருந்து மீண்டும் இவ்வுலகம் வந்து சேருகின்றான். அவ்விடம் விட்டு இங்கு வரும்போது அந்த ஸ்வர்க்க சரீரம் அணுவணுவாகப் பிரிந்துபோகும். அதனால் ஜீவாத்மாவுக்கு ஏற்படும் துன்பம் ஸஹிக்கமுடியாது. அந்தத் துன்பமானது நரக லோகம் கர்ப்பவாஸம் இவைகளில் ஏற்படும் துன்பத்தைக் காட்டிலும் மிகவும் கோரமானது. புண்ணிய கர்மங்களை விசேஷமாகச் செய்த மனிதர் மரித்த பிறகு அடையும் கதி இவ்வாறே.

## பாபிகளின் கதி

பாப கர்மங்களை விசேஷமாய்ச் செய்த மனிதனது ஜீவன், இந்தச் சரீரத்தைவிட்டுப் பிரியும்போது வாயுவின் அணுக்கள் ஜாஸ்தியாகவும் மற்ற நான்கு பூதாம்சங்கள் ஸ்வல்பமாகவும் அமைந்துள்ள வாயவ்ய யாதனா தேஹமாகிய ஸ்தூலத்தைப் பற்றிக்கொண்டு நரகம் செல்லும். அப்போது, மார்க்க மத்தியிலும் யமதூதர்களால் கொடிய யாதனைகளை யனுபவித்துக்கொண்டு நரகம் சென்று அங்கு பலகாலம் அதிகக் கொடிய யாதனைகளை அனுபவிப்பான். அவ்விதம் விசேஷ பாபப் பயன்களை

அங்கு புசித்ததும் அந்த யாதனா தேஹம் அங்கு ஒழியும். அவ்வுலகில் பயன்தாராமல், மற்றுமுள்ள ஸாமான்ய கர்மங்களின் பயனைப் புசிக்க மீண்டும் இவ்வுலகுவந்து சேருவான். இது பாப விசேஷங்களைச் செய்த மனிதரின் கதியாம்.

## ஸம புண்ணியபாப கர்ம பயன்

பாபபுண்ணியங்களை ஸமமாகச் செய்த மனிதனே எனின், இங்கு மனிதசரீரம் நீங்கியதும் ஸ்வர்க்கத்திற்காவது நரகத்திற்காவது செல்லாமல் ஆகாசம் சென்று முற்கூறியதுபோலவே மீண்டும் இவ்வுலகில் பிறப்பான்.

இவ்விதம் மூன்று விதங்களான ஜீவகதிகள் சொல்லப்பட்டன. ஆயினும் ஓர் விசேஷம் இங்கு அறிந்துகொள்ள வேண்டியுளது. பாப புண்ணியங்களாகிய இருவகைக் கர்மங்களையும் கடுமையாகச் செய்த மனிதர் மரித்ததும் ஜீவாத்மா முற்கூறியபடி முன்னர் ஸ்வர்க்கத்தையடைந்து, அங்கு போகம் முடிந்ததும் அங்கிருந்தே நரகலோகத்தையும் அடையும்படி கர்மாவைசித்திரியத்தால் நேரலாம். அல்லது பூர்வம் நரகத்தை யடைந்து அங்கிருந்தே ஸ்வர்க்கமடையவும் நேரலாம். ஆனால் இப்படிப்பட்ட ஸம்பவம் ஆயிரத்துக்கொன்றே நேருமாதலால் இது விசேஷ கதியே யாகும். ஆதலால் இது ஓர் கதியெனக் கணக்கில் சேர்த்துக்கொள்ளப்படவில்லை.

எவ்வாறாயினும், ஸ்வர்க்க நரகங்களில் போகம் முடிந்ததும் மீண்டும் இவ்வுலகுக்கு வந்து சேரும் மார்க்கம் மாத்திரம் எல்லோருக்கும் ஒரே வகையாகும். ஸம புண்ணிய பாபங்களைச் செய்த ஜீவன் மீண்டும் மனிதனாகப் பிறக்கத் திரும்பும் முறையும் அவ்விதமேயாகும். ஸ்வர்க்கத்திலிருந்தோ நரகத்திலிருந்தோ திரும்பி வரும்போது ஸ்வர்க்க நரகங்களில் பயன் கொடுக்காமல் பாக்கியுள்ள புண்ணிய பாபவினைகளினின்றும் எப்படிப்பட்ட கர்மம் பயன்தரத் தயாராயிருக்குமோ அக்கர்மானுஸாரமாய்ப் பராதீனத் தன்மையடைந்து இங்கு வந்து பலவகை யோனிகளை யடையும்படியாகும்.

## ஸ்வர்க்க நரகங்களைப் பற்றி வேதப்ரமாணம்

ஸ்வர்க்க நரகங்கள் எங்குள்ளவை, எப்படிப்பட்டவை எனின், இங்கிருக்கும் நம்மால் ஆகாயத்தில் காணப்படுவனவாகிய சந்திர ஸூர்யாதி க்ரஹங்களும், அச்வினி, பரணி, க்ருத்திகை என்பது முதலிய பெயர்களால் வழங்கப்படும் நக்ஷத்திரங்களும், பெயர் வழங்காமல் எண்ணிறந்தனவாகக் காணப்படும் மற்றுமுள்ள நக்ஷத்திரங்களும் ஸ்வர்க்க

நரகங்களாம். இங்கிருந்து பார்வைக்குச் சிறியவைகளாகக் காணப்படினும் உண்மையில் அவைகளுள் ஒவ்வொன்றும் இந்தப் பூலோகத்தைக் காட்டிலும் எவ்வளவோ மடங்கு விஸ்தாரமுள்ள உலகமாம்.

“யோ வா இஹ யஜதே அமும் ஸ லோகம் நக்ஷதே தந் நக்ஷத்ராணாம் நக்ஷத்ரத்வம் | தேவக்ருஹா வை நக்ஷத்ராணி |”
தேவநக்ஷத்ராணி வா அந்யாநி | யமநக்ஷத்ராண்யந்யாநி.

“இவ்வுலகில் புண்ணியங்களை எவன் செய்கின்றானோ அவன், இந்த நக்ஷத்திரங்களாகிய உலகங்களை அடைகின்றான். அக்காரணத்தினாலேயே நக்ஷத்திரமெனப் பெயர் பெற்றிருத்தலாம். தேவர்கள் வசிக்குமிடங்கள் நக்ஷத்திரங்களாம். தேவலோக நக்ஷத்திரங்களுக்கு அந்நியங்களாய் யமலோக நக்ஷத்திரங்கள் வேற்றுமைப்பட்டுள்ளன. (யஜுர்வே - ப்ரதமாஷ்டக-ப்ரதமபாத) என்பவை முதலிய வேதவாக்கிய ப்ரமாணத்தால் இவ்வுண்மை யறியலாம். ஸ்வர்க்க நரகாதிகளைப்பற்றிய ஸகல விவரங்களும் இதற்கு முன்னரியற்றியுள்ள “லோகாந்தரம்” எனும் புஸ்தகத்தில் காணலாம். இனி ப்ரகிருதத்தை நாடுவோம்.

## மீண்டு மிவ்வுலகத்திற்கு வருதல்

ஸ்வர்க்க நரகங்களினின்றும் இவ்வுலகுக்குத் திரும்பும்போது, அவ்வுலகங்களில் ஸுகதுக்க போகத்திற்காக இருந்த ஸ்தூலசரீரத்தைச் சேர்ந்த பஞ்சபூதாம்சங்கள் நெருப்பின் அண்டையில் நெய்விழுதுபோல உருகிக் குலைந்து நழுவி ஆகாசம்வந்து சேரும். அவ்வணுக்களைப் பற்றிக்கொண்டு ஜீவாத்மா ஆகாசம் வந்து சேருவான். பிறகு வாயுவை அடையும். அப்போது ஜீவாத்மா வாயுவோடு ஒன்றாய்ப் போனதுபோலக் கண்ணுக்குப் புலப்படாமலுள்ள அந்த பூதாம்சங்களைப் பற்றிக்கொண்டே அதனை யடைந்திருப்பான். பிறகு ஜீவன் வாயுவினால் தாறுமாறாகப் பல இடங்களில் அவ்வணுக்களோடு கூட இழுக்கப்பட்டுப் பிறகு தூமம் என வழங்குவதான நீராவியோடு கூடியவனாவான். அவ்விதம் நீராவியில் வந்து சேர்ந்திருக்கும்போது அவ்வணுக்களோடு கூடவே வந்து அந்த நீராவியிலும் வேறாகக் காணப்படாத நிலைமையை யடைவான். நீராவி மேகவுருவமாகப் பரிணமிக்கும்போது ஜீவாத்மா மேகத்தில் அவ்வணுக்களோடு கூடவே சேருவான். அது மழை மேகமாகும்போது, அவ்வணுக்களோடு கூடியவனான ஜீவனும் அம் மழை மேகத்தோடு சேர்ந்திருந்து, பிறகு அது வருஷிக்கும்போது அம்மழைத்துளி மூலமாய் இந்தப் பூவுலகை அடைகின்றான். ஜீவாத்மா எங்கு சென்றாலும் எந்த கர்மப் பயனை அனுபவிக்கச் சென்றாலும் அவனது கர்மாக்களினால் எவ்

பட்ட பூதாம்சங்களோடு கூடியவனாகவே இருப்பான். அவ்வணுக்கள் எடுக்கவேண்டிய ஸ்தூலதேகத்திற்குத் தக்கபடி அமையும்.

மழையானது அநேகமாக, மலை முதலிய உந்நத ப்ரதேசங்களில் வர்ஷிக்கு மியல்புள்ளதாகையால் அந்த ஜீவாத்மா மழைத்துளி மூலமாக மலை முதலிய உந்நத இடங்களை யடைவான். அங்கிருந்து ஜலப் பிரவாஹத்தின் மூலமாகச் செடி, கொடி, மரம் முதலியவைகளில் வந்து சேருவான். அல்லது மலை முதலிய உந்நத இடங்களில் வருஷிக்காமல் ஸாதாரண பூமியிலுள்ள நெல், யவை, கோதுமை, எள்ளு, உளுந்து முதலிய ஓஷதி வகைகளையோ, அல்லது கறி காய் கனி முதலியவைகளுக்கு ஹேதுக்களாயுள்ள செடி கொடி மரங்களையோ மழைத்துளி மூலமாகவே வந்து அடைவான்.

மழைத்துளியை யடைந்தபிறகு ஜீவன் மனுஷ்யனாகப் பிறத்தலென்பது மிகவும் அரிது. ஏனெனின் மேஹம் உந்நத மலைப்பிரதேசங்களில் வருஷிக்கும்போது அங்கிருந்து அந்த ஜீவன் நதீ மூலமாக ஸமுத்திரத்தையே அடையும்படி ஏற்படக்கூடும். அல்லது மருகாந்தாரம் முதலிய பாலைவனங்களில் மேகம் வருஷிக்கக்கூடும். அப்போது அங்கு போய்ச் சேர்ந்து மீண்டும் ஆவியாய் உயரக்கிளம்ப நேரலாம். மலையில் வருஷித்தால் அருவியின் வழியாக நதியை யடையும். நதியின் வழியாகப் பிறகு ஸமுத்ரம் சேருவான். ஸமுத்ரத்தில் மகரம் முதலிய ஜந்துக்களால் புசிக்கப்படும்போது அவைகளின் தேஹத்தை யடைவான். அந்த மகரமீன் ஸமுத்ரத்தில் வாழுகின்றபோது ஜந்துவினால் புசிக்கப்படுமாயின் அந்த வேறு ஜந்துவின் தேஹத்தை யடையும்படியாகும். அந்த வேறு ஜந்துவின் தேஹம் ஸமுத்ரத்தில் அழியும்போது ஸமுத்திர ஜலத்தை மீண்டும் அடையும்படியாகும். அந்த ஜலம் ஆவியாக உயரக் கிளம்புமாயின், அந்த ஆவியின் மூலமாக மேகத்தை மறுபடியும் சேரும்படியாகும். மீண்டும் மேகம் வர்ஷம் இவைகளின் மூலமாக மருகாந்தாரம் மலைப்பிரதேசம் முதலிய இடங்களை யடைய நேரும். பிறகு அவ்விடத்திலுள்ள பாம்பு முதலிய ஜந்துக்களினாலாவது ம்ருகாதிகளாலாவது புசிக்கப்பட்டு அவைகளின் தேஹத்தை யடையும்படி ஏற்படும். அந்தப் பாம்பு முதலிய ஜந்துவையோ அல்லது ம்ருகம் முதலியவைகளையோ புசிக்கின்ற வேறு தேஹத்தை யடைய நேரும். அப்படியே எண்ணிறந்த பல ஜந்துக்களின் தேஹத்தை மாறி மாறிச் சுற்றிக்கொண்டே அடையும்படி நேரிடும்.

அல்லது மேஹமானது புசிக்கத்தகாத ஸ்தாவர பதார்த்தங்களில் வருஷிக்கும்போது ஜீவன் அந்த ஸ்தாவரங்களை யடைந்து மற்றொரு

தேஹியை உடனே அடையக்கூடாமல் அவைகளிலேயே பலகாலந் தங்கி இருக்கும்படியாகும். அந்த ஸ்தாவராதிகள் வெய்யிலில் காய்ந்து உலர்ந்து போகும்போது அந்த ஜீவனும் அந்த ஸ்தாவரத்தோடு காய்ந்து பலகாலம் அவ்விடத்திலேயே தங்கிப் போகலாகும்.

அல்லது புசிக்கக்கூடிய செடி கொடியில் அம்மழை வருஷிக்குமாயினும் அந்தச் செடி கொடி வகையானது மனிதன் முதலிய பிராணிக்கு ஆகாரமாகாமலே பலகால மிருக்கலாம். அப்படியாயின் அதனில் சேர்ந்த ஜீவனும் மற்றொரு பிராணியின் தேஹத்தை அடைய வகையிராமல் பலகாலம் அந்தச் செடியைப்பற்றியதாகவே இருக்கும்படி ஆகும்.

அல்லது தேஹத்தை யடைந்து மழைத்துளியின் மூலமாக நெல் யவை கோதுமை எள்ளு உளுந்து முதலிய உணவுப்பொருளில் வந்து சேர்ந்தாலும், எவனுடைய தேஹத்தை யடைந்தால் ரேதஸ்ஸின் மூலமாகக் கர்ப்பகோசத்தை யடையலாமோ அவனுடைய தேஹத்தை யடையாமல் வேறு மனிதன் தேஹத்தை யடைந்தாலும் அடையலாம். எப்படி எனின் ஸந்யாஸி, பாலன், நபும்ஸகன், ஆண்தன்மை பயன்படத் தகாத கிழவன் முதலியவர்களுள் எவனுடைய தேஹத்தையாவது அடையும்படி நேரும். அல்லது எந்த மனிதனுடைய தேஹத்தை யடைந்தால் சுக்லத்தின் மூலமாக கர்ப்பகோசம் அடைய இயலுமோ அப்படிப்பட்ட மனிதனுடைய தேஹத்தைக் காகதாளீய நியாயமாகத் தற்செயலாக அடைந்தாலும், கருப்பையில் குற்றமுற்று அதனால் தேஹம் உயிர்க்காமல் கர்ப்ப ஸ்ராவாதிகளால் வெளியில் நழுவி, ஜலம் மண் முதலியவைகளில் சிக்குண்டு முன்போலப் பலகாலம் சுற்றிக் கொண்டிருக்கும்படியும் நேரலாம். இவ்வளவு கோடிக்கணக்கான இடையூறுகளினின்றும் தப்பி, நத்தையின் கீறல் எழுத்தாவதுபோல கர்ப்ப கோசத்தில் கேடுறாமல் உயிருடன் கூடியதாய் கர்ப்பகோசத்தினின்றும் ஸரியாக வெளிவரும்படியானால் மனிதப்பிறவி பெற்றவனாகலாம்.

அல்லது முற்கூறியபடி நெல் கோதுமை யவை முதலிய தான்யங்களை மழையின் மூலமாக அடைந்தும், மிருகம் பறவை முதலியவை அவைகளைப் புசிக்க நேருமாயின் மனித ஜன்மம் பெறுவதற்கின்றி மிருகம் பறவை முதலிய ஜந்துக்களின் தேஹத்தையே யடைந்து சுற்றிச் சுற்றித் திரிந்துழலும்படி ஏற்படும். இவ்விதம் உள்ள ஜீவகதியில் மனுஷ்ய ஜன்மத்தைப் பெறாமலேயே ஏனைய ஜந்துக்களின் ஜன்மங்களிலேயே பல கோடிகாலம் ஜீவாத்மா உழன்றுகொண் டிருக்கும்படிக்கும் நேரலாம். இப்படித் திண்டாடும்போது யத்ருச்சையாகப் புண்ணிய கர்மம் பயன்தர நேருமாயின் அது, மழையினின்றும் ஜீவாத்மா நெல்

யவை கோதுமை எள்ளு உளுந்து முதலிய தான்யங்களையோ, அவரை புடல் பாகல் வாழை வெள்ளரி முதலிய காய்கறிகளையோ, கருணை சேம்பு இஞ்சி வெள்ளி முதலிய கிழங்குகளையோ அடைந்து அவைகளின் மூலமாக மனித தேஹத்தை யடைந்து மனிதப் பிறவியைப் பெறுதற்கு ஏதுவாகும். இவ்விபரம்

தஸ்மிந் யாவத்ஸம்பாதமுஷித்வாதைதமேவாத்வாநம் புநர்நிவர்தந்தே | யதைதமாகாசமாகாசாத்வாயும் வாயுர்பூத்வா தூமோ பவதி தூமோ பூத்வாப்ரம் பவதி | அப்ரம் பூத்வா மேகோ பவதி மேகோ பூத்வா ப்ரவர்ஷதி த இஹ வ்ரீஹியவா ஓஷதிவநஸ்பதயஸ்திலமாஷா இதி ஜாயந்தே அதோ வை கலு துர்நிஷ்ப்ரபதரம் யோ யோ ஹ்யந்நமத்தி யோ ரேத: ஸிஞ்சதி தத்பூய ஏவ பவதி.

ஸ்வர்க்கத்தில் (அப்படியே நரகத்தில்) புசிக்கவேண்டிய கர்மங்கள் தீரும் வரை வஸித்து மீண்டும் இந்த மார்க்கத்தின் வழியாகவே திரும்புகின்றனர். இங்கிருந்து சென்றபடி அங்கிருந்து ஆகாசத்தையும் ஆகாசத்தினின்றும் வாயுவையும், வாயுவினின்றும் தூமமெனும் ஆவியையும், அதனின்றும் வெண்ணிற மேகத்தையும், பிறகு அதனின்றும் மழை மேகத்தையும் அடைகின்றார்கள். மேகத்தினின்றும் மழையின் மூலமாக நெல், யவை, செடி கொடி மரங்கள் எள்ளு உளுந்து முதலியவைகளில் வந்து சேருகின்றனர். ஜீவாத்மாக்கள் இப்பொருள்களில் வந்து சேரும்வரையில் முற்கூறிய ஒவ்வோர் வஸ்துவிலும் தாமதிக்காமல் விரைவாகவே கதி ஏற்படும். அதன்பிறகு அப்பொருள்களை ஆகாரமாக உட்கொள்ளும் தேஹத்தை அடைகின்றனர். பிறகு அந்த தேஹத்திலுள்ள சுக்ல தாதுவில் வந்துசேர்ந்து ஜன்மத்தைப் பெறுகின்றனர். நெல் யவை கறி காய் முதலியவைகளை அடைந்த பிறகு மிகவும் தாமதமாகவே பிறவியைப் பெறுகின்றனர்.

தத்ய இஹ ரமணீயசரணா: அப்யாசோ ஹ யத்தே ரமணீயாம் யோநிமாபத்யேரந் ப்ராஹ்மணயோநிம் வா க்ஷத்ரியயோநிம் வா வைச்யயோநிம் வா அத ய இஹ கபூயசரணா: கபூயாம் யோநிமாபத்யேரந் ச்வயோநிம் வா ஸூகரயோநிம் வா சண்டாலயோநிம் வா,

"இங்கு புண்ணிய கர்ம பலோதயத்தோடு வரும் ஜீவர் புண்ணிய யோநி யாகிய ப்ராமண ஜந்மத்தையாவது க்ஷத்ரிய ஜன்மத்தையாவது வைச்ய ஜன்மத்தையாவது அடைகின்றனர். பாபகர்ம பலோதயத்தோடு வருவோர் பாப ஜன்மமாகிய நாய்ப் பிறவியையோ பன்றிப் பிறவியையோ சண்டாலப் பிறவியையோ பெறுகின்றனர்" என்பவை முதலிய சாந்தோக்யாதி ச்ருதி வாக்கியங்களால் நன்கறியலாம்.

இவ்வாறு மீண்டும் இங்கு வந்து சேரும்போது மனுஷ்ய சரீர ஹேதுக்களாகிய கர்மங்களினால் ஏவப்பட்ட ஜீவர், மனிதர் உட்கொள்ளும் அன்னபானாதிகளின் மூலமாகத் தந்தையின் தேஹத்தை யடைவார். புண்ணிய பாப உலகங்களில் இருந்த சரீரம் தொலைந்தபிறகு இவ்வுலகில் கறிகாய் மூலமாக மனித தேஹத்தில் வந்து சேரும்வரையில் ஜீவாத்மாக்களுக்கு ஒன்றுமறியாத மூடாவஸ்தையே யுள்ளதாகையால் ஸுக துக்க உணர்ச்சியிராது. பருந்து முதலிய பறவைகள் இருப்பிடமாகிய மரத்தைவிட்டுக் கிளம்பி ஆகாரத்திற்காக மாம்ஸம் முதலியவைகளை எடுத்துக்கொண்டு மரத்தின் கிளை முதலிய யாதேனும் ஓரிடத்திலுட்கார்ந்துகொண்டே அவ்வாஹாரத்தைப் புசிப்பதுபோல, ஜீவாத்மா யாதேனும் ஓர் ஸ்தூல தேகத்தைப் பற்றிக்கொண்டே கர்மப் பயன்களான ஸுக துக்கங்களைப் புசிக்கவேண்டுமென்பது இயல்பு. ஆகையால் ஸ்தூலதேக ஸம்பந்தமிராத ஸமயமாகிய லோகாந்தரத்தில் அனுபவித்த தேஹம் நழுவியது முதல், முறையே இங்கு வந்து மனித தேஹத்தைப் பற்றுவதாகிய நிலைமை வரையில் ஸுகதுக்கானுபவம் இராவிடினும், இங்குபுருஷ மனித தேஹத்தில் ஆகார மூலமாகச் செல்லும்ஸமயம் முதல் அந்த தேஹத்தை விட்டு ஸ்திரீ கர்ப்பத்தை அடையும் வரையிலுள்ள மத்ய காலத்திலும் ஸுக துக்கானுபவங்களால் அல்லற்படுதல் இயல்பே என சாஸ்திரங்கள் நமக்கு ஜனன மரணங்களில் வெறுப்பு உதிப்பதற்கெனக் கூறுகின்றன.

## தந்தையின் தேஹத்தை ஜீவன் அடைதல்

அதாவது தாம்புக்கயிற்றில் கட்டப்பட்ட குடம் முதலியவை கிணறு முதலியவைகளில் பிரவேசிப்பதுபோல, ஜீவாத்மா பூர்வகர்மங்களாகிற கயிற்றினால் கட்டப்பட்டுப் பிதாவின் தேகமாகிற கிணற்றில் கர்மபல தாதாவாகிய ஈச்வரனால் போடப்படுகின்றான். பொருளைக் களவாடி அகப்பட்டுக்கொண்டவனும் ராஜபுருஷர்கள் செய்த சொத்துப் பறிமுதலால் பொருள்களை இழந்தவனும் பெண்டீர் புதல்வர் முதலிய ஸ்வஜனங்களைவிட்டுப் பிரிந்தவனுமாகிய திருடனை விலங்கிட்டுப் பின் கட்டுமுறையாகக் கட்டி ராஜசேவகர்கள் சிறைச்சாலைக்கு இழுத்துக்கொண்டு

போய்ச் சேர்ப்பதுபோல அச்சீவனை இந்திரியாபிமானிகளாகிய தேவர்கள் ஆகாரமூலமாகத் தந்தையின் தேஹத்தில் பிரவேசிக்கச் செய்வார்கள். அன்னபானுதிகளான ஆகாரமூலமாகத் தந்தையின் வாய்க்குள் பிரவேசிக்கும்போது அந்த ஜீவாத்மாவுக்கு அந்த வாய்ப்பிரதேசமானது, பாம்பு தேள் நட்டுவாக்காலி, மொலுங்கு முதலிய துர்ஜந்துக்கள் அடர்ந்திருக்கும் படுகுழித்துரவுபோலத் தோன்றும். யோநித் துவாரத்தின் வழியாக கர்ப்பத்தில் புகுவதுபோலத் தந்தையின் முகத்துவாரத்தின் வழியாக அவனது தேகத்தை யடையும்போது ஜீவாத்மாவுக்குள்ள நிலைமையாம். காமத்தினுல் பாதிக்கப்பட்ட ஸ்திரீ புருஷ ஸங்கமத்தை விரும்பி கர்ப்பதாரணத்தைப் பெறுவதுபோல, பசியால் பீடையடைந்த புருஷன் ஜீவாத்மாவோடு கூடிய ஆஹாரத்தை விரும்பி அவ்வாஹார மூலமாக ஜீவனுகிய கர்ப்பத்தைத் தனது தேஹத்தில் தரிப்பான். இதனுல் மாதாவின் தேகத்தில்போலவே ஜீவாத்மா பிதாவின் தேஹத்தில் கர்ப்பவாசம் யடைந்திருத்தலாம்.

அன்னபானுதி யாஹாரத்தோடு ஒன்றுபட்ட இந்த ஜீவன் தந்தையின் முகத்தை அடைந்ததும் அவனுடைய பற்களால் அந்த அன்னம் கடிக்கப்படும்போது ஜீவாத்மாவும் அதனுல் மிகவும் துன்புறலாவான். பற்களில் உள்ள துர்நாற்றத்தாலும் கஷ்டமடைவான். அவ்வாறு யாதனைப்பட்டுக்கொண்டு ஆகாரமூலமாகக் கண்டத்வாரத்தை அடையும்போது ஜீவன் க்ருமிபோலத் துடிப்பான். கண்டத்திற்குள்ளிருக்கும் கபத்தினுல் மேலும் கீழுமாகப் புரட்டப்பட்டு ஸகிக்க முடியாத அவஸ்தையை யடைவான். நாரையின் வாயிலகப்பட்டுக்கொண்ட மீன்போல கபத்தோடு கூடிய கண்டத்வாரத்தில் அங்குமிங்கும் சுழன்று துன்புறுவான். கண்டத்திலுள்ள கபமானது ஆகாரத்தை யடைந்துசென்ற ஜீவாத்மாவை துர்நாற்றமுள்ள சேற்றில் புரட்டிப்புரட்டி முக்கப்படும் இளம்சிசுவைப்போலத் துன்புறுத்தும். இவ்விதம் பிதாவின் கண்டஸ்தானத்தில் துன்புற்று, பிறகு அவன் ஹ்ருதய ஸ்தானத்திலுள்ள பித்தத்தை யடைவான். அங்குள்ள பித்தமானது கொதிக்கவைத்த இளகிய மலம்போலிருக்கும். ஆஹாரத்தோடு அந்தப் பித்தத்தை யடையும்போது ஜீவாத்மா கொதிக்கக் காய்ச்சிய எண்ணெயில் விழுந்த கறப்பான்பூச்சிபோல மிகவும் யாதனையை யடைவான். கறப்பான்பூச்சி, காய்ச்சிய எண்ணெயில் விழுந்ததும் மரித்துப்போகும். ஜீவாத்மாவோ அதனுல் நாசமடையாமல் துன்புறவேண்டும். கொதித்துக்கொண்டிருக்கும் எண்ணெயானது பாத்திரத்தில் கீழும் மேலுமாகவும் குறுக்கும் நெடுக்குமாகவும் சுழலுவதுபோல ஹ்ருதயஸ்தானத்தில் பித்தம் கொதித்துக்கொண்டும் சுழன்றுகொண்டு

யிருக்கும். அதனோடுகூட ஜீவன் கீழுமேலுமாகச் சுழன்று புறட்டப் படும்போது ஏற்படும் கோரமாகிய யாதனையை இங்கு எழுத இயலாது.

இவ்வாறு பித்தாசயத்தில் யாதனையை அனுபவித்துப் பிறகு அவ்வாஹாரத்தோடு கூட வாதாசயத்தை ஜீவன் அடைவான். வாதா சயத்திலுள்ள வாயுவில் சேரும்போது ஜீவன் சுழல்காற்றில் அகப்பட் டுக்கொண்ட சிறு துரும்புபோல, அங்கு சுற்றிச் சுற்றிக் கீழும்மேலு மாக உழலுவான். தச்சன் உளியால் கட்டையைச் சேதிப்பதுபோல வாதமானது ஆஹாரத்தோடு கூடிய இச்சீவனைக் கண்டங்கண்டமாகச் சேதித்து ஜடராக்நியில் தள்ளும். அதனால் அச்சீவனுக்கு அளவிலடங் காத துன்பமேற்படும். அன்றியும் அந்த வாயுவானது நெருப்புப்போல அந்த ஜீவனைத் தபிக்கச்செய்யும். இவ்விதம் அங்கு துன்பமனுபவித்து ஜடராக்நி போய்ச் சேருவான்.

## ஜீவன் அன்னத்தோடு தந்தையின் ஜடராக்நியை யடைதல்

ஜடராக்கிநியானது அன்னத்தோடு கூடிய இச்சீவனைப் பாகம் செய்யும். ஆயினும் ஜீவன் மட்டும் நாசமடைகின்றதில்லை. ஜடராக் கிநியால் பசனம் செய்யப்பட்ட அன்னம் உத்தமம், மத்தியமம், அதமம் என மூன்று விதமாகும். அவ்விதம் பாகமடைந்த அன்னத்தின் அதம பரிணாமம் மலமாகும். மத்தியம பரிணாமமானது மாம்ஸமாகும். உத்தம பரிணாமமானது பிதாவின் மனம் வேலைசெய்தற்கு ஹேதுவான போஷக அம்சமாகும்.

‘‘அந்நஸ்ய ய: ஸ்தவிஷ்டோ தாதுஸ்தத் புரீஷம் பவதி யோ
மத்யமஸ்தந்மாம்ஸம் பவதி யோऽணிஷ்டஸ்தந்மந:.’’

‘‘அன்னத்தின் அதமபாகம் மலமாகவும் மத்தியமம் மாம்ஸமாகவும் உத்த மம் மனமாகவும் பரிணமிக்கும்’’ என்பவை முதலிய வாக்கியங்களால் சாந்தோக்கியம் முதலிய உபநிஷதங்களில் இவ்விஷயம் சொல்லப்படு கின்றது. அவ்வன்னத்தின் மத்தியம பாகத்தோடு ஒன்றுபட்டு ஜீவாத்மா மாம்ஸமாய் ருதிரம் தொக்கு மேதஸ் அஸ்தி (எலும்பு) மஜ்ஜை எனும் ஐந்து தாதுக்களையும் வாயுவினால் அடையும். அவ்வாறு ஒவ்வொரு தாதுவிலும் சேர்ந்திருக்கும்போது அந்த ஜீவனுக்கு ஏற்படும் துன்பம் அனந்தமானது. அதனை இங்கு ஸ்வல்ப்பம் கூறுவாம். அன்னத்தின் மத்தியம பாகத்தினின்றும் ஜீவன் தொக்கை அடையும். மனித சரீரத் தின் ஹ்ருதயத்தினின்றும் நாடிகள் ஏராளமாய்க் கிளம்பி தேகம் முழு தும் வியாபித்துக்கொண்டிருக்கின்றன.

"𑌅𑌤𑍍𑌰𑍈𑌤𑌦𑍇𑌕𑌶𑌤𑌂 𑌨𑌾𑌡𑍀𑌨𑌾𑌂 𑌤𑌾𑌸𑌾𑌂 𑌶𑌤𑌂 𑌶𑌤𑌂 𑌮𑍇𑌕𑍈𑌕𑌸𑍍𑌯𑌾𑌂 𑌦𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌤𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌶𑌾𑌖𑌾𑌨𑌾𑌡𑍀𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑍍𑌯𑌾𑌸𑍁 𑌵𑍍𑌯𑌾𑌨𑌶𑍍𑌚𑌰𑌤𑌿."

"ஹ்ருதயத்தினின்றும் நூற்றோர் நாடிகளும், அவைகளுள் ஒவ்வொன்றினின்றும் நூறு நூறு நாடிகளும், அவைகளில் ஒவ்வொன்றினின்றும் எழுபத்தீராயிரம் நாடிகளும், தோன்றி தேஹத்தில் வியாபித்திருக்கின்றன. அவைகளில் வ்யானன் எனும் வாயு ஸஞ்சரிக்கின்றது." என்பவை முதலிய வாக்கியங்களால் பரச்ஞோபநிஷதம் முதலியவைகளில் இவ்விபரம் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறு மிகவும் சூக்ஷ்மங்களாய் கண்ணாடி முதலிய கருவிகளாலும் காணமுடியாதவைகளாயுள்ள நாடிகளின் வழியாக அந்த ஜீவன் த்வக்கு எனும் சர்ம தாதுவை அடைவான். மாம்ஸ ருதிர தாதுக்களில் சேர்ந்திருக்கும்போது ஜீவனுக்கு ஏற்படும் துன்பத்தைக் கொஞ்சம் கூறுவாம். அப்போது அந்த தாதுக்கள் தந்தையின் தேஹத்தில் ஏற்படுவதான வாதபித்த கபங்களின் வித்தியாஸ வைஷம்யத்தினால் கொதிப்பு முதலிய மாறுபாடுகளை யடையும். அதனால் அங்கு அடைந்த ஜீவாத்மா ஓர் ஸமயம் மூர்ச்சையடைவான். முள்ளிலவம் பூக்களின் நிறமுடைய அந்த தாதுக்களில் உள்ளும் புறம்புமாகச் சுழன்று திரியும்போது மிகவும் பீதியடைவான். பிறகு ஜீவன் அங்கிருந்து அக்கினி வாயுக்களால் மேதஸ் எனும் தாதுவை யடைவான். அடுப்புத்தீயால் கொதித்துக்கொண்டிருக்கும் ஜலத்தில் போடப்பட்ட கடலைமாபோன்ற நிறமுடைய மேதஸ் எனும் தாதுவை ஜீவன் சேர்ந்து துன்புற்றுப் பிறகு அஸ்தி எனும் எலும்பு தாதுவை அடைவான்.

மனித சரீரமாகிய இல்லத்திற்குத் தூண்கள்போல முந்நூற்றறுபது எலும்புகள் உள்ளனவென யோகநூல்கள் கூறுகின்றன. பாகம் செய்யப்படும் மோர்க்குழம்பு முதலியவைகளின் ஸாரமானது தான்களாகப் போடப்பட்ட வெண்டைக்காய், கத்தரிக்காய், சேப்பங்கிழங்கு முதலியவைகளை அடைவதுபோல ஜீவாத்மா மேதஸ் எனும் தாதுவினின்றும் எலும்பு தாதுவை அடைவான். எலும்புகளை அடைந்து அங்கு அளவிறந்த துன்பத்தைப் பெற்றுப் பிறகு எலும்புகளின் உள்ளிருக்கும் மஜ்ஜை எனும் தாதுவை யடைவான்.

## மஜ்ஜையினின்றும் ஜீவன் சுக்லமடைதல்

மஜ்ஜை எனும் தாதுவில் ஜீவாத்மா வஸிக்கும்போது பிதாவின் மனஸைக் காமாக்நி தஹிக்க நேரும். அக்கினியில் வைத்த பாத்திரத்திலுள்ள நெய்விழுது உருகுவதுபோல, தந்தையின் மனத்தைக் காமாக்நி

தஹிக்கும்போது அந்த தேஹத்தின் எலும்புகளிலுள்ள மஜ்ஜை எனும் தாது கொதிப்படைந்து உருகி வீர்யமெனும் தாதுவாகும். தந்தையானவன் ஜந்மாந்தர பாபங்களையும் அவிவேகத்தையும் உடையவனாயிருப்பின் காமாக்நியால் அஸ்திகளிலுள்ள மஜ்ஜை உருகி வீர்யமாகும்போது அதை வெளிப்படுத்தாமல் தேஹத்திலேயே ஸ்தம்பனம் செய்துகொள்ளவாவது காமாக்நியை ஜ்வலிக்கவிடாமல் வைராக்யமெனும் ஜலத்தினால் சமனம் செய்து போடவாவது சக்தியுடையவனாகான்.

## காமதோஷத்தினால் ஏற்படும் விஷயம்

ஸத்குருஸேவை, ஸத்ஸங்கம், ஸத்சாஸ்திர ஆராய்ச்சி முதலியவைகளிராத அவிவேகியால் காமாக்நி யுதிப்பதற்கு இடங்கொடாமல் தனது சித்தத்தைக் காப்பாற்றிக் கொள்ளவாவது அல்லது காமாக்நி உதிக்கும்போது விவேக வைராக் தீர்த்தத்தினாலதனை சமனம் செய்து அணைத்து விடவாவது, அல்லது காமாக்நியால் அஸ்திகளிலுள்ள மஜ்ஜை எனும் தாது உருகி வீர்யமாகும்போது அதைத் தன் தேஹத்திலேயே ஸ்தம்பித்திருக்கும்படி அடக்கிக்கொள்ளவாவது சிறிது மியலாது. பசு பக்ஷியாதிகளுக்கும் இவ்விஷய மியலாது. பசு பக்ஷ்யாதிகளின் சித்தத்தில் காமாக்நி யுதிக்கும்போது அவ்வக்நியால் தஹிக்கப்பட்டு வீர்யத்தை வெளிவிடுதலே இயல்பாகும். மனிதப் பிறவியின் பயன் காமாக்நியை உதிக்கவிடாமல் விவேகஜலத்தால் சித்தத்தை ஸதா சீதளமாகவே வைத்துக்கொள்ளுதலேயாகும். அதற்குச் சக்தியிராத மனிதப் பிறவியானது பசு பக்ஷ்யாதிப் பிறவிகளிலும் இழியதேயாகும். கர்ப்பத்திலுள்ள பிரஜையை ப்ரஸூதி வாயுவானது கிளப்பிவிடும்போது அந்த ப்ரஜையை வெளிவிடாமல் தாயாகிய ஸ்திரீயினால் ஸ்தம்பனம் செய்துகொள்ள முடியாததுபோல, காமாக்நிக்குச் சித்தத்தில் நன்றாக இடங்கொடுத்த புருஷனால் மஜ்ஜையுருகி வீர்யமாகும்போது அந்த வீர்யம் ஸஹிக்க முடியாததாகும். (மெர்க்கொரி) எனும் பாதரஸம் நிலை பெறாததுபோல காமாக்நியால் இளகிய மஜ்ஜையின் ஸாரமான வீர்யமானது தேகத்தில் நிலைபெறாது. அன்னையின் வயிற்றினின்றும் கர்ப்பத்தை ப்ரஸூதிவாயு வெளியே தள்ளுவதுபோலத் தந்தையின் தேஹத்தில் மஜ்ஜை எனும் தாதுவின் பரிணாமமாகிய வீர்யத்தைக் காமாக்நி வெளித்தள்ளும். தாயின் தேஹத்தில் கர்ப்பவாஸம் போலவே பிதாவின் தேஹத்தில் கர்ப்பவாஸமாகும்.

“[Grantha script verse — illegible]”

“புருஷனிடம் இவன் முன்னர் கர்ப்பமாகின்றான். யாதொன்று ரேதஸ்

எனப்படும் பொருளோ அது தந்தையினது ஸர்வாங்கங்களினின்றும் உருகிய தேஜஸ் என்பதாம்," என்பவை முதலிய வாக்கியங்களால் ஐதரேயாதி உபநிஷதங்களில் இவ்விதம் கூறப்பட்டது.

கள்ளுண்டவனுக்கு குடிமயக்கத்தினால் கண் விழிகள் சுழலும் போது எதிரில் காணப்படுகின்றவைகளான வீடு மாளிகை கோபுரம் முதலியவைகளும் சுழலுகின்றனவாகத் தோன்றும். அதுபோல காம மோஹத்தினால் சித்தம் கலங்கும்போது, உள்ளது உள்ளபடி தோன்றாது ஒன்றிருக்க வேறொன்றாகவும் தோன்றும். பித்தாதிக்கியதோஷத்தினால் பானகம் முதலிய மதுரவஸ்துக்களும் கசக்கும். அதுபோல அசுத்தங்களான வஸ்துக்களும் காமமோஹத்தினால் மிகவும் சுத்த வஸ்துக்களாகவும் உத்தமங்களாகவும் தோன்றும். எச்சில் பற்களினூத்தை கபம் முதலிய அசுத்த பதார்த்தங்கள் நிறைந்துள்ளதாகிய ஸ்திரீ முகமானது பூர்ணசந்திரன்போலத் தோன்றும். இங்கு எழுதவும் தகாத மிகவும் இழியவைகளான ஊழற்காரியங்களையும் ஸ்த்ரீசரீரத்தில் மிருகம்போலக் காமமோஹத்தால் செய்துபோடுவான். அவிவேகியானவன் காமத்தினால் மோஹத்தையடைந்து மஜ்ஜையினின்றும் வீர்யபரிணாம மேற்படும்போது புண்ணியபாபங்கள் தெரியா. ஹிதன் அஹிதன் இவர்களை அறியான். பெரியோர்களை மதியான். பயம் லஜ்ஜை முதலியவை அவனுக்கு இராமற்போகும். பின்வரும் அனர்த்தத்தை அறியான். தன் தேஹத்திற்கு நேரும் கெடுதியை நினையான். மனிதப்பிறவியின் பயனை மறந்துவிடுவான். மஹா வித்வானாயினும் காமதோஷத்தினால் பாமரனுடன்போன்றவனாவான். படுகயிற்றில் சிக்கி அகப்பட்டுக்கொண்ட குரங்கு, தான் தங்குமிடமாகிய புளியமரத்துக் கிளையையே ஸதா சிந்திப்பதுபோல ஸ்திரீகளின் தேஹாவயவங்களையே சிந்திப்பான். பெரியோர்களின் முன்னிலையாயினும் ஸ்திரீகளையே அடிக்கடி பார்ப்பான். காமதோஷத்தினால் கலக்கமுற்றவனுக்கு மனிதப்பிறவியின் பயனைப் பெறுதற்குச் சிறிதும் வழியில்லை என்பதை உறுதியாகக் கொள்ளவேண்டும். நிற்க, மற்றுமுள்ள விஷயங்களை நாடுவோம்.

இவ்வாறு பிதாவின் காமதோஷத்தினால் உருகிய மஜ்ஜையெனும் தாது சுக்லமாய்ப் பரிணமிக்க, அதனின்றும் ஜீவன் ஸ்திரீயின் கர்ப்பத்தை யடைவான். மஜ்ஜை உருகி சுக்லமாகப் பரிணமிக்கும்போதும் அந்த சுக்லமானது கர்ப்பகோசத்தை யடையும்போதும் அதனை யடைந்துள்ள ஜீவனுக்கு ஸம்பவிக்கும் ச்ரமத்தைக் கூறுதல் அஸாத்தியமென்றஞ்சி இம்மட்டோடு நிறுத்துகின்றோம். காமமோஹத்திற் கிடங்கொடாமலும், ஓரோர் ஸமய முதிக்கும் காமத்தை ஓங்கவிடாமலும், சரீரத்தி

னின்றும் சுக்லமுதித்து வெளிப்படுதற் கிடங்கொடாமலும் விவேக வைராக்கியங்களால் நிரோதம் செய்துள்ள மஹானுடைய தேஹத்தில் ஆகாரமூலமாக வந்திருக்கும் ஜீவன் சுக்லமூலமாக கர்ப்பகோசமடை தற்கு ஏதுவிராவிடினும், விவேக வைராக்கியங்களால் தந்தை அடையும் ஸத்கதியையே தானும் அடைவான். ஆதலால் காமத்தைவென்ற மஹா புருஷன் தன்னையும் தன் தேஹத்தில் ஆகாரத்தின் மூலமாக வந்தடைந் திருக்கும் மற்ற ஜீவனையும் ஜனனமரண ஸம்ஸாரத்தினின்றும் கரை யேற்றுவிப்பவனாவான்.

"தான்செய்த வினைகளின் பயனைத் தானே புசிக்கவேண்டும்? மற்றவர்களின் வினையின் பயன் தனக்கு வராது" என்பது நம் சாஸ்தி ரங்களில் ஸித்தாந்தமாயுள்ள விஷயமே. ஆயினும் காமத்திற்கிடம் கொடாத தீரபுருஷனது தேஹத்தை ஆகாரங்களின் மூலமாக மற்றோர் ஜீவன் வந்தடைதலென்பதும் அப்படி வந்தடையும் ஜீவாத்மாவின் பூர்வ புண்ணியங்களின் பயனே. ஆதலால் இவ்விஷயத்தில் பலவாறு சங்கித் தல் உசிதமாகாது.

ஸ்வர்க்க நரகாதி லோகாந்தரங்களினின்றும் ஜீவாத்மா இவ்வுல கம் வந்து மீண்டும் மனித ஜன்மத்தைப் பெறுதலின் விபரம் உபநிஷத்து களில் மிகவும் அருமையாகப் போதிக்கப்பட்டிருக்கின்றமையால் அவ் விஷயம் இங்கு இதுகாறும் கூறப்பட்டது. ஆஹாரங்களின் மூலமாகத் தந்தையின் தேஹத்தை யடைந்ததுமுதல் சுக்லமூலமாக அங்கிருந்து வெளிப்படும்வரையில் ஜீவன் அடையும் துன்பங்களைக் கூறியதுபோல அந்த ஜீவன் கர்ப்பகோசம் சென்றதுமுதல் கர்ப்பத்தினின்றும் ஜனிக் கும்வரையிலும் அனுபவிக்கும் துன்பங்களையும், ஜனித்ததுமுதல் மரிக் கும்வரையிலும் அனுபவிக்கும் துன்பங்களையும் இங்கு கூறவேண்டியதவ சியமேயாயினும் இங்கு அதனைக் கூறாததற்குக் காரணம் அவ்விரு விஷய ங்களையும் பற்றிக்கூறும் புத்தகங்கள் ஏராளமாயுள்ளன என்பதே. கர்ப்ப வாஸதுக்கங்களும் பிறந்தபிறகு நேரும் வாழ்நாள் துக்கங்களும் உலகில் பிரஸித்தமாயுள்ளன.

## மனிதப்பிறவி சுகதுக்க மிச்ரம்

மனிதப்பிறவியைப் பெற்று வாழ்நாள் முழுதும் இன்பமாகவே வாழ்ந்தவனென ஒருவனையாவது சொல்ல இயலுமா? பிறர் த்ருஷ்டிக்கு உலகில் ஸுகிகளாகக் காணப்படும் மனிதர்களை நேரில் "நீங்கள் ஸுகி கள் அன்றோ" என வினவுவோமாயின் "ஐயோ எனக்கிருக்கும் துக்கங் களை யாவர் எனக் கூறுவது? யான் ஸுகி எனத் தோன்றுவது உங்க ளுக்கு வீண் ப்ரமமே" எனக் கூறுகின்றார்களே அன்றி "நீங்கள் நினைக் கிறபடி நான் ஸுகிதானென" எவரும் ஒத்துக்கொள்கின்றதில்லை.

ஸுகதுக்கங்களைக் கலந்து அனுபவிப்பதற்கெனவுள்ள இந்த மனித உலகத்தில் துக்கமில்லாமல் ஸுகமாத்திரமாக யார் வாழக்கூடும்? அது எவராலு மியலாது என்பதற்குத் திருஷ்டாந்தமாகவே யன்றோ ராமாயண சரிதம் முதலியவை தோன்றியுள்ளன. ஜகதீச்வரனாகிய பகவானது அவதாரமன்றோ ஸ்ரீராமன். அவனது பத்நியாகிய ஜானகீ பரா சக்தியல்லவா? அப்படிப்பட்ட ஜானகி மனித உலகில் தோன்றியதினால் கர்ப்பவாஸதுக்கம் போன்றதாகிய ராவணச் சிறைவாஸதுக்கத்திற்கு உள்ளானாள். அன்றியும் ஸாக்ஷாத் லோகரக்ஷகனை இறைவனைப் புத்திரனாகப்பெற்ற பாக்யவதியாகிய கௌஸல்யைக்கு வைதவ்ய துக்கம் நேருவது உசிதமா? இவைகளைக் கவனித்தால் மனித உலகில் தோன்றியவர் ஸுக மாத்திரத்தோடு வாழுவதற்கியலாது என்பதை நிச்சயித்துக்கொள்ளலாம்.

“உபாப்யா மேவ மனுஷ்யலோகம்”

‘ புண்ணிய பாபங்களிரண்டினாலேயே மனுஷ்யலோகம் அடையப்படுவதாம்” எனும் ப்ரச்னோபநிஷதம் முதலியவைகளிலுள்ள வாக்கியங்களினால் இவ்வுண்மை கூறப்படுகின்றது. வேப்பங்காயைத் தின்றுகொண்டு ‘ “கசக்கின்றதே,”‘தித்திக்கவில்லையே” ’என்பதுபோன்றதன்றோமனிதராகப் பிறந்தவர் துக்கியாயிருக்கிறோமே என்பது? ஸ்மசானக்கரையில் வீடு கட்டிக்கொண்டு வஸிப்பவர், “அழுகைக்குரல் கேழ்க்கப்படுகின்றதே”, “கௌரீ கல்யாணப்பாட்டு காதுக்கெட்டக் காணோமே” என வருந்துவது போன்றதன்றோ மனிதராய்ப் பிறந்து எனக்குத் துக்கம் வந்துவிட்டதே எனக் கூறுவது? ஸுகதுக்கங்களைக் கலந்து அனுபவிப்பதற்கெனவே ஏற்பட்டதாயினும், மனிதப்பிறவி ஒன்றே துக்கத்திற்கே ஆளாகாமல் பரமஸுகத்தை இனி ஸம்பாதித்துக் கொள்வதற்குத் தக்க ஸாதனமாயுள்ளது. காம்ய புண்ணிய கர்மங்களைச் செய்து தேவலோகம் சென்று கர்மதேவர்களாயிருந்து அனுபவிக்கும் விஷய ஸுகமும் பரம ஸுகமல்ல. நச்வரமானதே என ஏற்கெனவே கூறப்பட்டதாதலால் பரம ஸுகத்தை ஸம்பாதிப்பதற்கு வழியைத் தேடிக் கொள்வதே விவேகம் என்பதாம். விவேகத்தினால் ஆகும் கார்யம் யாதெனின் இதுவேயாம். அதாவது மரிக்கும் ஸமயத்தில் எந்த சிந்தனை ஏற்படுகின்றதோ அதற்குத் தக்கபடி அடுத்த ஜன்மம் ஏற்படும். பூர்வம் வாழ்நாளில் எந்தப் பொருளில் பிரீதியோடு சித்தம் சென்று வாஸனையாகச் சித்தத்தி லூன்றியுளதோ அவ்வாஸனையை யனுஸரித்தே மரண காலத்தில் சிந்தனை ஏற்படும். ஆதலால் விஷயத்திலேயே சித்தம் சென்றுழலுமாயின் பாப புண்ணியங்களாயுள்ள கர்மங்களில் சிக்கியவர்களாய் மீண்டும் மீண்டும் பிறப்பிறப்புத் துன்பங்களுக்கு ஆளாய், ஸம்ஸாரமாகிய மஹா ஸமுத்திரத்திலேயே அகப்பட்டு அல்லற்படும்படியாகும். ஆகையால் ஜனனமரண ஸம்ஸாரத்தைத் துக்கமென அறிந்து அதனின்றும் கரையேறிப் பரமஸுகத்தைப் பெறுதற்காகப் பரம்பொருளைச் சரணமடைதலே மனிதப்பிறவியின் பயனும்.

மனிதப்பிறவியும் அதன் பயனும் எனும் இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

மூன்றும் அத்தியாயம்

# பரமாத்ம ஸ்வரூபம்

ஜனனமரண ஸம்ஸாரதுக்கம் நீங்கிச் சுகம்பெறவேண்டுமாயின் பரம்பொருளைச் சரணமடைதற் கந்நியமாய் உபாயம் யாதுமில்லை எனப் பூர்வாத்தியாயத்தின் இறுதியில் கூறப்பட்டுள்ளது. இனி பரம்பொருள் எனப்படும் வஸ்துவின் ஸ்வரூபம் யாது? அதனை உபாஸித்தல் என்பது எப்படி? என்பவை முதலிய விஷயங்களைப்பற்றி வேதாந்த க்ரந்தங்களிலுள்ள நிர்ணயங்களை கூறவேண்டிய தவசியமாதலின் அவ்விஷயத்தின் ஆராய்ச்சியை இங்கு செய்வாம்.

இந்தப் பரம்பொருளே பரமாத்மா பரமேச்வரன் ஜகத்காரணன் அந்தர்யாமி ஸர்வஸாக்ஷீ கூடஸ்தன் என்பவை முதலிய சொற்களால் வேதாந்த க்ரந்தங்களில் வழங்கப்படும் வஸ்து. இப்படி வழங்கப்படும் பரமாத்மா உள்ளும் புறம்பும் வியாபகமா யிருந்துகொண்டு எல்லா மறிவோனும் எல்லா வல்லமையும் பொருந்தியவனுமாகிய முழுமுதற்கடவுளான பொருள். இவன் தேஹேந்திரியப் பிராண மனுதிகளிராத அரூப வஸ்துவாயினும் தன்னிடமுள்ள மாயாசக்தி மஹிமையால் சிவவிஷ்ணுவாதி மூர்த்திகளோடு தோன்றி ஜகத்தை அநுக்ரஹிக்கும் ஆற்றலுடையவன். உண்மையில் இவனுடைய வடிவமானது ஆண் பெண் அலி எனச் சொல்ல இயலாத அரூபமான ஸச்சிதாநந்த ஸ்வரூபமேயாம். பிராணிகளின் தேஹங்களிலுள்ள புத்தி எனும் பொருளில் இவன் பிரதிபிம்பித்திருக்கும் விஷயத்தை இங்கு ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் இனிக் கூறப்படும் விஷயங்கள் நன்கு விளங்கும். ஆதலால் ஜீவாத்மாக்களுக்கு ஆதாரத்தலைவனுயுள்ள பொருளு மிவனே. இவன் ஒப்புயர்விராத ஓர் பேரானந்த ஸ்வரூபன். ஆதலால், இவனிடம் சித்தத்தைச் செலுத்திஞல் பேரானந்த மடையலாம்.

## மாயையும் பரம்பொருளும்

இனி இவனை யுபாஸித்தலென்பது விச்வாஸத்தோடு கூடச் சித்தத்தை இவனிடம் செலுத்துவதே. சித்தத்தை இவனிடம் செலுத்துதலாவது, மாயாமஹிமையால் இவனிடம் அமைந்துள்ள திவ்ய குணங்

களைச் சிந்தித்தலேயாகும். மாயாமஹிமையாலமைந்துள்ள குணங்களைச் சிந்தித்தல் மாயோபாஸ்தி எனக் கூறுவது உசிதமாயிருக்க, அதனை இவனது உபாஸ்தி எனக் கூறுவது எப்படிப் பொருந்தும் எனச் சிலர் சங்கிக்கலாம். மாயை இவனை விட்டுப்பிரிந்த ஓர் தனி வஸ்துவாயிருக்குமானால் மாயோபாஸ்தி எனக் கூறலாம். மாயாசக்தி இவனின்றி தனித்திராது. அதற்கிருப்பிடம் இவனே. மாயாசக்தியின்றி இவனுக்குத் தனியே குணங்களில்லை. ஆதாரமாகிய இவனின்றி ஆதேயமாகிய மாயாசக்தி தனித்திராது. ஆதலால் மாயாசக்தியையும் இவனையும் பிரித்தறிய முடியாது. மாயாசக்தியை விடுத்து இவனது ஸ்வரூபத்தில் மாத்திரம் சித்தம் செல்லுமாயின் அது நிர்க்குணப்ரும்ம உபாஸ்தியேயாகும். அப்படி யார்க்கும் நிலை லேசில் கிட்டாது. மாயாசக்தியுடன் கூடிய இவனைப் பல காலம் உபாஸித்து வழிபட்டால் அந்நிலை கிடைக்கப் பெறலாம். மாயா சக்தியுடன் கூடிய இவனது தன்மைகளைச் சிந்தித்தலாகிய உபாஸ்தியே இங்கு விபரமாகக் கூறப்படும் விஷயமென்ப தறியத்தக்கது.

இந்த மாயாசக்தியே சித்சக்தி எனவும் பராசக்தி எனவும் கூறப்படும். உலகில் குடம் குண்டலம் முதலிய கார்யங்களின் உற்பத்திக்கு இரண்டு காரணங்க ளிருக்கின்றன. ஒன்று உபாதான காரணமும் மற்றொன்று நிமித்த காரணமுமாம். குடத்திற்கு மண்ணும், குண்டலத்திற்குப் பொன்னும் உபாதான காரணமெனவும், அவைகளைக் குடமாகவும் ஆபரணமாகவும் செய்வோர்களாகிய குயவன், கம்மியன் ஆகிய இவர்கள் நிமித்த காரணமெனவும் வழங்கப்படும். இவ்விரு காரணங்களுள் உபாதான காரணங்களாகிய மண் பொன் முதலியவை அறிவிராத ஜட வஸ்துக்களாகவும் அதாவது அசேதனங்களாகவும், நிமித்த காரணங்களாகிய குலாலன் கம்மியன் முதலியவர்கள் அறிவுள்ள சேதனர்களாகவும் இருக்கக் காண்கின்றோம். அதுபோல ஜகத்காரணமும் அசேதனம் சேதனம் என இருவகையா யிருக்கவேண்டும். அசேதனமாகிய (ஜகத்) காரணம் ஜடசக்தி எனவும், தமஸ் எனவும் அசுத்தமாயை எனவும், சாஸ்திரங்களில் வழங்கப்படும்; குலாலன் கம்மியன் முதலியவர்களிடம் குடம் ஆபரணம் முதலியவைகளை உண்டாக்கத்தக்க யோக்கியதை இராவிடில் அவை யுண்டாகா. ஆதலால் அவைகளை யுண்டாக்கும் யோக்யதையுடன் கூடிய குலாலன், கம்மியன் முதலிய சேதனர்களே நிமித்த காரணமா யிருத்தல்போல, ஜகத்தை யுண்டாக்கும் நிமித்த காரணமாகிய பரம்பொருளிடத்தில், ஜகத்தை உண்டாக்கும் ஆற்றலிருக்க வேண்டுமென நிச்சயிக்கப்படுகின்றது. அந்த யோக்யதையே சித்சக்தி பராசக்தி என்பவை முதலிய சொற்களால் வழங்கப்படுகின்றது.

## ஈஸ்வரனுக்குப் பெருமை மாயாசக்தியாலேயே

உண்மையில் குணம் கிரியை முதலியவை இராத ஏகவஸ்துவாகிய ஸச்சிதாநந்தப் பரம்பொருளை ஜகத்திற்கு நிமித்த காரணமாகும்படி செய்துவைத்திருக்கும் வஸ்துவானது, அவனிடமுள்ள ஜகத்காரண யோக்கியதையாகிய சித்சக்தி பராசக்தி எனப்படும் மஹா மாயா சக்தியேயாகும். குலாலன், கம்மியன் முதலிய நிமித்த காரண வஸ்துக்களிடமுள்ள, குடம் குண்டலம் முதலியவைகளை ஸ்ருஷ்டிக்கும் சக்தியானது அவர்களைவிட்டுத் தனியாக வேற்றுமைப்பட்டிராததுபோல, ஜகத்திற்கு நிமித்த காரணமாகிய ஈச்வரனிடமுள்ள ஜகத்ஸ்ருஷ்டி சக்தியானது அவ்வீச்வரனை விட்டுத் தனியாக வேற்றுமைப்பட்ட பொருளாயில்லை. இந்திரஜால ஸ்ருஷ்டியைச் செய்வோனிடமுள்ள இந்திர ஜாலசக்தியானது அவனைவிட்டுப் பிரிவடையாமல் அபின்னமாயிருப்பதுபோல, ஜகத்காரண சக்தியாகிய பராசக்தியானது அவ்வீச்வரனைவிட்டுப் பிரிவடையாத அபின்ன வஸ்துவேயாகும்.

## ஈச்வர சக்தியின் மஹிமை

மாயையானது ஆகாசம்போல அரூபவஸ்துவேயாயினும் மனோவாக்குகளுக்கெட்டாத மஹிமையுடையதாதலால் சிவ விஷ்ணு அம்பிகா குஹ விநாயக ராமகிருஷ்ணாதி வடிவங்களோடு தோன்றுதல் ஆச்சரியமல்ல. “அகடிதகடநா படீயஸீமாயா” “பொருத்தமல்லாததைப் பொருத்தமுடையதாகச் செய்வதில் சாதுர்யமுடையது மாயை” என்பது முன்னோர்மொழி. ஜகத்காரணமான பரமாத்மாவின் பிரகிருதியானது தமோ அம்சப் பிரதானமான தொன்று. சுத்த ஸத்வமாத்திரமாக ஜ்வலிக்கும் அம்சம் வேறொன்று. சுத்த ஸத்வ ப்ரதானப் பிரகிருதியே சித்சக்தி, பராசக்தி யெனவும், ஈச்வரனுடைய அபின்ன சக்தியெனவும் சாஸ்திரம் வழங்குகின்றது. பரப்ரம்ம வஸ்து முற்கூறிய அசுத்தப் பிரகிருதியின் அம்சத்தைப் பஞ்சபூத மயமாகிய பிரபஞ்சமாகப் பரிணமிக்கச் செய்தலானது இந்தப் பராசக்தியின் மஹிமையாலேயே.

## இறைவனுக்கு மூர்த்தி விலாஸம் மாயாசக்தியாலேயே

சித்சக்தி பராசக்தி எனப்படும் இந்த மஹா மாயாசக்தியின் பெருமையை அந்தப் பரம்பொருளைத் தவிர ப்ரம்மாதியர்களான தேவ ரிஷி முனிவர்களாலும் உள்ளபடி முற்றும் அறிந்துகொள்ள இயலாது. ஆண் பெண் என்பது முதலிய வியவஹாரத்தையே அடிப்படையாய்க்கொண்டு புத்திர பார்யாதிகளிடமுள்ள அபிமானங்களால் ஓங்கி வளர்ந்துள்ள இந்த ஸம்ஸார மண்டலத்திலிருக்கும் மந்தமதிகளாகிய

நம்போன்ற மாந்தர்களை அனுக்கிரஹிப்பதற்காகவே பரம்பொருளின் மஹா மாயா சக்தியானது அம்பிகை, சிவன், விநாயகர், குமாரக்கடவுள் முதலிய வடிவங்களான மூர்த்திகளாகவும் தோன்றியுளது. அவ்வாறே ஹரியாகவும் ராமக்ருஷ்ணாதி அவதார மூர்த்திகளாகவும் உருக்கொண்டு தோன்றியுள்ளதும் அம்மஹா மாயாசக்தியேயாம். சக்தி வேறு அத னிருப்பிடமாகிய ஸச்சிதானந்த வடிவமான சிவம் வேறு எனப் பிரித் தறிய எவ்வகையாலும் இயலாது. ஆதலால் பிரித்தறிய முடியாத இந்த மஹா மாயா சக்தியினாலேயே பரம்பொருளாகிய ஸச்சிதானந்த வஸ்து ஸர்வஞான நிதியாகவும் ஸர்வசக்திக் களஞ்சியமாகவும் இருக்கின்றது என வேதாந்தங்கள் கூறுகின்றன.

## சிவோபாஸ்தியில் சக்தியுபாஸ்தியும் சக்தியுபாஸ்தியில் சிவோபாஸ்தியும் சேர்ந்தேயுளது

இவ்விதம் செய்த ஆராய்ச்சியால், மாயாசக்தியுடன்கூடியிருக்கும் ஸச்சிதானந்த வஸ்துவே ஈச்வரன் ஜகத்காரணன் முதலிய சொற்களுக்கு அர்த்தமென்பது நிர்ணயிக்கவேண்டிய விஷயம். ஸச்சிதாநந்தம் மாயா சக்தி எனும் இரண்டு அம்சங்கள் ஈஸ்வரஸ்வரூபத்திலடங்கியிருத்தலால், அவ்வீச்வரனை உபாஸித்தலாகிய நம்முடைய சித்தக் கிரியையில் ஸச்சி தானந்த சிந்தனை, மாயாகுணமஹிம சிந்தனை என இரண்டு அம்சங்கள் அடங்கியிருக்கும். இவ் விருவகையம்சங்களையும் ஸமமாகக்கொண்டு சிந்தித்தலே பரம்பொருளின் உபாஸனை என்பதாம்.

## சிவசக்தி யுபாஸ்திகளின் பிரிவு

இவ்விதம் ஸமமான நோக்கத்தோடு சிந்தித்தலின்றி, மாயா சக்தியில் முக்கியமாகிய நோக்கத்தையும் ஸச்சிதானந்த வடிவத்தில் அமுக்கிய நோக்கத்தையும் கொண்டு சிந்தித்தல் சக்தியுபாஸ்தி எனவும், மாயாசக்தியில் அமுக்கியமாகிய நோக்கத்தைக் கொண்டு சிந்தித்தல் சிவோபாஸ்தி எனவும் வேதாந்த க்ரந்தங்களில் வழங்கப்படும் எனும் உண்மையும் இங்கு அறியத்தக்கது.

உண்மையில் சிவனையும் சக்தியையும் ஒன்றைவிட்டொன்றைத் தனியாகப் பிரித்தறிய இயலாது. சக்தியின்றி ஸச்சிதாநந்த வஸ்து மாத்திரம் ஈஸ்வரஸ்வரூபம் என்பதல்ல. அவ்வாறே ஸச்சிதானந்த மின்றி மாயாசக்திமாத்திரம் ஈச்வரஸ்வரூபமென்பதல்ல. பிரகாசமின்றி சூர்யனிராது. ஸூர்யனின்றிப் பிரகாசமிராது. ஸூர்யனுக்கும் அதன் காந்திக்கும் எப்படி பேதமில்லையோ, அப்படியே சிவசக்திகளுக்குப் பேத

மில்லை. உண்மை யிவ்வாறாயிருப்பினும் "இறைவனுடையசக்தி" என வேற்றுமைப்படுத்தியே வ்யவஹரிக்கவேண்டியதாகின்றது. சூர்யனை யும் அதன் பிரகாசத்தையும் உண்மையில் பின்னப்பொருள்களாகப் பிரித்து அறிவதற்கிடமிராவிடினும், சூர்யனது பிரகாசம், மின்மினிப் பூச்சியின் பிரகாசம் என வியவஹாரத்தில் வேற்றுமைப் படுத்திக் கொள்வதுபோல ஈச்வரசக்தி, ஜீவசக்தி என வியவஹாரத்தில் வேற்று மைப் படுத்தியே வேதாந்த நூல்களில் பேசப்படுகின்றது.

ஸூர்யமண்டலத்தை விட்டு ஸூர்ய கிரணங்களும் அக்கிரணங் களை விட்டு சூர்யமண்டலமும் ஒருபோதும் பிரிந்திருப்பவையல்லவா யினும், தொழுது வணங்குவோர் ஸூர்யமண்டலத்தையும், குளிரால் க்லேசமடைந்தவர் ஸூர்ய கிரணங்களையும் பிரிந்துள்ள பொருள்களைப் போல எண்ணி விரும்புகின்றனர். ஸூர்யமண்டலத்தையே தொழுது வணங்குவோராயினும், வணங்கும்போது அம்மண்டலம் கிரணங்களை விட்டுப் பிரிந்திருப்பதில்லையாதலால் அவர்கள் கிரணங்களையும் சேர்த்து வணங்கியவர்களேயாகின்றனர். குளிரினால் வருந்தியவர்கள் ஸூர்ய கிரணங்களையே விரும்புகின்றவர்களாயினும் ஸூர்யனிராமல் கிரணங்க ளில்லையாதலால் ஸூர்யமண்டலத்தையும் விரும்பியவர்களேயாகின்ற னர். அதுபோல பராசக்தியை உபாஸிப்பவர் பரசிவத்தையும் உபாஸிப்ப வரேயாகின்றனர். பரசிவத்தை உபாஸிப்பவர் பராசக்தியையும் உபா ஸிப்பவரேயாகின்றனர். உண்மை யிவ்விதமாதலால், சக்தியுபாஸ்தியில் சிவோபாஸ்தியும் சிவோபாஸ்தியில் சக்தியுபாஸ்தியும் அடங்கியதென் பதே நிர்ணயம். அவ்விரண்டு தத்வங்களையும் பிரித்து ஆராய்ச்சி செய்வதில் புத்தி சிதறும். புத்தியானது இவ்விஷயம் எனக்குத் தாளவில் லையே என வங்கித் திரும்பி வெளிவந்துவிழும். இவ்விதமாயின் எதற் காக வீணில் இவ்வாராய்ச்சியைச் செய்வது? எனும் சங்கை யுதிக்கலாம். ஆனால் அது ஸரியல்ல. இவ்விதம் ஆராய்ச்சி செய்வோருக்கு ஸச்சிதா னந்தப் பரம்பொருளானது தன்னை விட்டுப் பிரிந்திராத மஹாமாயா சக்தியோடு கூடியதாயிருந்துகொண்டு, ஜடம் சேதனமெனும் இருவகைப் பொருள்களடங்கிய ஸகலஜகங்களிலும் வியாபகமாயுள்ளது என்பதாகிய ஞானம் உதிக்கும். அந்த ஞானமானது ஜனன மரணப் ப்ரவாஹத்தி னின்றும் மனிதரைக் கரையேறச் செய்யும்.

## உபாஸ்தியின் பலவகை

இவ்வாறுள்ள ஈச்வரனுடைய உபாஸ்தியும் பலவகைப்படும். இனி உபாஸிக்கப்படும் பொருளாகிய இவ்விறைவன் ஒருவனாயிருக்க, இவனை உபாஸித்தல்மட்டும் பலவகையாகும் என்பது எப்படிப் பொருந்து

மெனும் சங்கை சிலருக்கு ஏற்படக்கூடும். ஆதலால் இங்கு ஓர் திருஷ்டாந்தம் காண்பிப்பாம்.

இவன்து உபாஸனை யென்பது ராஜஸேவை போன்றதாகும். சேவிக்கப்படுவோனான அரசன் ஒருவனேயாயினும் அவனை சாமரம், குடை, காளாஞ்சி, ஸ்துதி, வாத்தியம், பல்லக்கு ரதாதிவாஹனம், அந்தப்புரசயனம், அந்தரங்க காரிய மந்திராலோசனை முதலியவைகளால் பலர் பலவாறாகச் சேவிப்பதுபோல, உபாஸ்யனான ஈச்வர ஸ்வரூபம் ஒன்றே யாயினும் அவனை உபாஸிப்பவர்களின் அறிவு பரிபாகாதிகளை அனுஸரித்து உபாஸனைகளும் பலவாறாகும். ராஜ ஸேவை முற்கூறியபடி பலவாறாயினும் சேவ்யனாகிய அரசனுடைய தேஹாவயவங்களும் அவைகளில் அறிந்துகொள்ளப்படுவனவாகிய கடக குண்டல கிரீட கேயூராதிகளும் மாறுமலிருப்பதுபோல, ஈச்வர உபாஸனை பலவாறாக இருப்பினும் எவ்வுபாஸனைகளிலும் மாறுபடாமல் பொதுவான சில குணங்கள் ஈச்வரனிடமுள்ளன. ராஜஸேவைகளில் ராஜ சரீராவயவங்கள்போல ஈச்வரோபாஸனைகளில் அறிந்துகொள்ள வேண்டிய பொதுவான குணங்கள் உண்டு. அந்த குணங்களை சாஸ்திரங்கள் ஈச்வரனுடைய அங்கங்களெனவும் நித்யகுணங்களெனவும் சொல்லுகின்றன.

## ஈச்வர சக்தியின் விபரம்

"ஸர்வஜ்ஞதா த்ருப்திரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தசக்தி: | அனந்தசக்திஸ்ச விபோர்விதிஜ்ஞா: ஷடாஹுரங்காநி மஹேஸ்வரஸ்ய."

"ஸர்வக்ஞத்வம், நித்யத்ருப்தத்வம், அனாதி போதத்வம், ஸ்வதந்த்ரத்வம், அலுப்த சக்தித்வம், அனந்த சக்தித்வம் எனும் இவ்வாறும் ஈச்வரனுக்கு அங்கங்கள் என பெரியோர் கூறுகின்றனர்.

ஜ்ஞானம் வைராக்யமைஸ்வர்யம் தப: ஸத்யம் க்ஷமா த்ருதி:
ஸ்ரஷ்ட்ருத்வமாத்மஸம்போதோ ஹ்யதிஷ்டாத்ருத்வமேவ ச
அவ்யயாநி தஸைதாநி நித்யம் திஷ்டந்தி ஸங்கரே.

ஞானம், வைராக்யம், அணிமாதி ஸித்திகள், தபஸ், ஸத்யம், க்ஷமை, தரித்தல், ஸ்ருஷ்டித்தல், அந்தர்யாமியாயிருந்து ஏவுதல், அதிஷ்டாதாவாக இருத்தல் இவை பத்தும் இறைவனிடம் மாறுமல் நித்தியமாயுள்ளவைகளாம்" என்பவை முதலிய வாக்கியங்களால் ஈச்வரனுக்கு இவை

அங்கங்களெனவும் மாறாத நித்தியகுணங்கள் எனவும் ஸ்பஷ்டமாக வ்யாஸபகவான் இவ்வுண்மையைச் சொல்லி யிருக்கின்றனர்.

இவ்விதம் ஈஸ்வரனுக்குப் பொதுவாகிய குணங்கள் இவை எனச் சொல்லப்பட்டிருத்தலினின்றும், ஸகல உபாஸனைகளிலும் இந்த குணங்கள் அறிந்துகொள்ளவேண்டிய நித்ய குணங்களாகும். உண்மையில் ஈச்வரனுடைய குணங்களை ஸரிவர முற்றும் அறிந்து கொள்வதற்கு ப்ரபஞ்சத்தில் எவராலுமியலாது என்பது உண்மையே. ஆயினும் ஸங்க்ரஹமாகச் சொல்லுவதானால் ஈஸ்வரனை 'ஸர்வக்ஞன், ஸர்வசக்தன்' (எல்லா மறிவோன் 'ஸர்வவல்லமைகளு முடையோன்) என்பதாகும். இவ்விருவகை குணங்களையும் விரிவாக ஆராய்ந்து பார்த்தால் பலவகையான உபாஸனைகளில் சிந்திக்கவேண்டிய அற்புதங்களான குணப்பிரிவுகள் வெளியாகும். ஈச்வரன் மனோவாக்குகளுக் கெட்டாத குணகணங்களை யுடையோன் என்பதாதி வாக்கியங்களால் குறிக்கப்படுவனவாகிய குணங்கள் ஸகலமும் ஸர்வக்ஞத்வம், ஸர்வசக்தி மத்வம் எனும் இவ்விருவகையிலேயே அடங்கும். நிர்க்குண ப்ரம்மத்தைப் போதிப்பதையே கருதி, தடஸ்த லக்ஷணத்தினால் ஸகுணத்தைச் சொல்லும் வாக்கியங்களிலும், ஜகத்கர்த்திருத்துவ ஸாதனமாகிய ஸர்வக்ஞத்வம், ஸர்வ சக்திமத்வம் எனும் இவ்விரு குணங்களே குறிக்கப்படும். ஈஸ்வரனை உபாஸித்தலுக்கு ஸர்வக்ஞத்வம் ஸர்வசக்திமத்வம் எனும் இவ்விரு குணங்களைப்பற்றி நன்றாய்த் தெரிந்திருக்கவேண்டும். உபநிஷத்ப்ரம்ஹ ஸூத்ரம் முதலியவைகளின் பாஷ்யங்களில் சங்கரபகவத்பாத ஸ்வாமிகளால் இவ்விரு சொற்கள் மட்டும் அடுத்தடுத்துப் பல இடங்களில் உதஹரிக்கப்பட்டிருத்தலுக்குக் காரணம், ஈச்வரனுடைய குணங்கள் ஸகலமும் இவ்விரு குணங்களில் அடங்கியுள்ளவை ஆதலால் அவைகளைக் குறிப்பவையாகிய இவ்விரு சொற்களும் ஸூத்ரம்போன்றவை என்பதே. இங்கு அவைகளை எழுதினால் விரியுமென்றஞ்சி விஷயத்தை நாடவேண்டியுளது.

ஸர்வக்ஞன் ஸர்வசக்தன் எனும் இவ்விரு குணங்களுள் ஸர்வ சக்தன் எனும் குணத்தை முன்னதாக ஆராய்ந்து பார்த்தால் பின்னர் நிரூபிக்கப்படுவனவாகிய விஷயங்களுக்கு அது அநுகூலமாகும் எனத் தோன்றியபடியால் ஸர்வசக்தன் எனும் விஷயத்தை இப்போது விசாரணை செய்வாம்.

இவ்விஷயத்தை இவ்விதம் நம்பவேண்டுமென நிர்ப்பந்தம் செய்வதைக் காட்டிலும் யுக்தி வாயிலாக விசாரணை செய்வதானது விஷயத்தில் உண்மையைத் தெளிவாக அறிந்துகொள்வதற்கு அநுகூலமாகும்.

## ஈச்வரன் ஸர்வசக்தன் என்பதன் நிரூபணம்

அதாவது, சேதனம் அசேதனம் எனும் இருவகை வஸ்துக்களடங்கிய விரிந்துள்ள இப்பிரபஞ்சத்தில் எக்காலத்திலும் எவ்விடத்திலும் மாறுபடாத ஓர் நியாயம் உள்ளது. அதாவது வஸ்து தொழிற்படத் தொழிற்பட அதன் சக்தி குன்றி ஓர் காலத்தில் அந்த வஸ்துவின் கிரியை ஓய்ந்தேபோகும் என்பதே. திருஷ்டாந்தமாக, மனிதன் யாதேனும் கிரியையைச் செய்துகொண்டே யிருப்பானானால் சக்தி குன்றி அவன் அலுத்து ஓய்ந்து போகின்றான். மாடு குதிரை முதலிய பிராணிகளும் வேலை செய்துழைத்துக்கொண்டே யிருக்குமானால் சக்தி குன்றி ஓய்ந்துபோகின்றன. வண்டி இழுத்தோடுதல் தண்ணீரிறைத்தல் நெல்லரைத்தல் முதலிய கிரியைகளைச் செய்யும் யந்திரங்களும் சக்திகுன்றி ஓய்ந்துபோகின்றன. விளக்கு முதலியவைகள் எரிய எரிய பிரகாச காரணமான எண்ணெய் முதலியவை குன்றி அணைந்து போகின்றன. அடுப்புத்தீ முதலியவை கட்டை எரிய எரிய சாம்பலாய் அணைந்து போகின்றன. இந்த திருஷ்டாந்த நியாயங்களால் கிரியையைச் செய்யச்செய்ய வஸ்துவின் சக்தி குன்றி கிரியை ஓய்ந்துபோகும் என்பது நிர்ணயிக்கப்படுகின்றது.

## ஸூர்ய மண்டலத்துக்குப் பிரகாசக் கிரியையால் சக்தி குன்றாதிருத்தலின் காரணம்

இனி இந்த நிர்ணயத்தைச் சூரிய மண்டல விஷயத்திலும் செலுத்திக் கொஞ்சம் கவனிப்போமாக. ஸூர்ய மண்டலமானது ஸதா ப்ரகாசித்துக்கொண்டே யிருக்கின்றது. அது ஆகாசத்தில் பெரும் தீச்சுடர்போல ஜ்வாலாமயமாக ஓயாமல் ஜ்வலித்துக்கொண் டிருத்தலாகிய கிரியையைச் செய்துகொண்டே யிருந்தும் பிரகாசம் ஓய்வடையவில்லை. கூறிய திருஷ்டாந்தங்களால் ஏற்பட்ட நியாயத்தை இங்கு கவனிப்போமாயின் சூர்யனுடைய ப்ரகாசக்கிரியை வெகு காலத்திற்கு முன்னமேயே ஓய்ந்து போயிருக்க வேண்டுமென்பதாகவே நிர்ணயிக்கும்படியாகின்றது. அதாவது, பிரகாசக் கிரியையைச் செய்துகொண்டிருக்கும் ஸூர்யனை எரிந்துகொண்டிருக்கும் கட்டைபோலாவது தீபம்போலாவது வைத்துக்கொள்வதற் கந்நியமாக வேறு வழியில்லை. ஸதா எரிந்துகொண்டே யிருக்கும் கட்டை நசித்துச் சாம்பலாய்ப் போகாமலும், தீபம் அணைந்து போகாமலும் இருத்தலை எங்கேயாவது காண்கின்றோமா? இல்லையே. தீபம் முதலியன அணைந்துபோகாமல் ஸதா எரிந்துகொண்டேயிருக்குமானால் எண்ணெய் குறையக்குறைய யாராவது அதனில் எண்

ணையைவிட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்றறிவது ஸர்வ ஸம்மதமான விஷயம். அடுப்பு முதலியவைகளில் ஓயாமல் ஸதா நெருப்பெரிந்து கொண்டே இருக்குமானால் அவைகளில் மேன்மேலும் ஓயாமல் கட்டை வைக்கப்பட்டுக்கொண் டிருக்கவேண்டுமென் றெண்ணுவது பிசகாகுமா? அதே நியாயத்தை ஸூர்யமண்டல விஷயத்திலும் கவனிக்கவேண்டும். ஸூர்ய மண்டலமானது ஸதா ப்ரகாசித்தலாகிய கிரியையோடிருக்கின்ற தென்பது பிரத்யக்ஷம். ஆனால் அதன் பிரகாச சக்தியோ குறையக் காணோம். எப்போதும் ஒரே மாதிரியா யிருக்கின்றது. ஆகையால் பிரகாசக்கிரியையால் அதன் பிரகாசசக்தி குறையக்குறைய மேன்மேலும் அந்தச் சக்தியை அதற்கு உதவிக்கொண்டிருக்கும் வஸ்து ஒன்றிருக்க வேண்டுமெனவும், அந்த வஸ்து எவருடைய கண்ணுக்கும் புலப்படாம லிருக்கின்றமையால் அது கண்ணுக்குத் தெரியாத மிகவும் ஆச்சர்யமா யுள்ள ஓர் அரூப வஸ்துவெனவும் நிர்ணயிக்கப்படுகின்றது. இதுமட்டு மென்பதல்ல.

## சூர்ய மண்டலங்கள் பல உள்ளன

ஸூர்ய மண்டலமானது பிரத்யக்ஷமாய் நம்மால் காணப்படுவ தான இவ்வொன்றே என்பதல்ல. ஆகாசத்தில் தீப்பொறிகள்போல காணப்படுவனவாகிய க்ருஹநக்ஷத்ர மண்டலச் சோதிகளில் எவ்வளவோ ஸூர்ய மண்டலங்கள் என்பதாக வேதம் கூறுகின்றது. அதாவது யஜுர்வேதாருணம் முதலாவது ப்ரச்னத்தில்,

கஶ்யபோऽஷ்டம꞉ ஸ மஹாமேரும் ந ஜஹாதி

கச்யபமண்டலமானது எட்டாவது ஸூர்யன். அது மஹா மேருவை விடுகின்றதில்லை. எனத் தொடங்கி "யஸ்மிந்ஸூர்யா அர்பிதா꞉ ஸப்த ஸாகம்" "எதனிடம் ஏழு ஸூர்யன்கள் அண்டியுள்ளனவோ" எனும் வாக்கியத்தினால் பிரஸித்தமாகிய இந்த ஸூர்யனிலும் அந்நியங் களான ஏழு ஸூர்யன்கள் இருக்கின்றன எனச் சொல்லப்பட்டிருக் கின்றது. இவ்விதம் சொல்லியதினின்றும் ஸூர்யமண்டலங்கள் இதற் கந்நியமாக ஏழு உள்ளனவென்று எண்ணிய இந்திரனை நோக்கி,

உ தஸ்யு꞉ நக்ஷாவஜீ ந ஸஹஸ்ரம் ஸூர்யா꞉

"ஓ இந்திரனே, இவ்வளவே என்பதல்ல. ஸூர்ய மண்டலங்கள் எண் ணிறந்தனவாக இருக்கின்றன" எனச்சொல்லிய வாக்கியத்தினால் ஸூர்ய மண்டலங்கள் பல இருப்பனவாக நிர்ணயிக்கப்படுகின்றது. ஆனால் அவை நமக்குத் தோன்றாமலிருக்கலாம். இவ்வாறு எண்ணிறந்த பல

ஸூர்ய மண்டலங்களுக்கும் பிரகாசக் கிரியையால் சக்தி குறையாமல் மேன்மேலும் பிரகாச சக்தியை ஓயாமல் தந்து உதவிக்கொண்டிருக்கும் அந்த வஸ்துவின் பெருமையை எப்படிப்பட்டதென நாம் அறிந்து கொள்ள முயற்சிப்போமாயின் நம்முடைய புத்தி சோர்ந்து தளர்ந்து போவதற் கந்நியமாக வேறொன்றையும் காணோம்.

தவிரவும் எண்ணிறந்த பல ஸூர்ய மண்டலங்களுக்குப் பிரகாச சக்தியைத் தந்துகொண்டிருக்கின்றதென்பதுபோல ஆகாசத்தில் சந்திராதி மற்றுமுள்ள மண்டலங்கள் எத்தனையோ! அவைகளுக்குமுள்ள வெவ்வேறு வகைகளான கிரியைகளுக்குத் தக்க சக்திகளைத்தந்து போஷித்துக்கொண்டிருக்கும் பெருமையும் அந்த வஸ்துவுக்கு உள்ளது என அறியப்படுகின்றது.

இனி அந்த வஸ்துவுக்குப் பெயர் யாது எனின், அது மனோ வாக்குகளுக் கெட்டாத, அளவிலுமடங்காத அற்புத மஹா சக்திகளையுடைய பொருள் எனப் பெயரிடுவதே தகும்.

## ஸ்வபாவம் வேறு! கிரியை வேறு!

இங்கு ஓர் சிறிய ஆக்ஷேபம் ஏற்படக்கூடும். அதாவது ஸூர்யாதி மண்டலங்களுக்கு ப்ரகாசாதிக் கிரியைகள் லோபிக்காமல் சக்தியை உதவிக்கொண் டிருப்பதாகிய வஸ்துவொன்றிருக்க வேண்டுமெனவும் அதனை அற்புத அபார சக்திகள் பொருந்திய பொருள் எனக் கூறுவதே தகுமெனவும் எனிப்படி அனுமானம் செய்யவேண்டும்? வேப்பிலை முதலியவைகளுக்குக் கசப்பும் கற்கண்டு முதலியவைகளுக்குத் தித்திப்பும் ஸ்வபாவமாகவே எப்படி யிருக்கின்றதோ, அப்படியே ஸூர்ய மண்டலமானது ஓயாமல் பிரகாசித்துக் கொண்டிருக்கும் ஸ்வபாவ முடையதெனின் அதனில் என்ன குற்றம்? என்பதாகத் தற்காலம் சிலர் ஆக்ஷேபிக்கக் கூடும். இது விசாரணைக் குறைவே. ஸூர்ய மண்டலத்திற்கு பிரகாசக் கிரியை ஸ்வபாவத்தினால் என்பதற்கு வேப்பிலை கற்கண்டு முதலியவைகளுக் குள்ள கசப்பு தித்திப்பு முதலிய குணங்கள் திருஷ்டாந்தங்களாகக் காட்டப்பட்டன. திருஷ்டாந்தங்களாகிய கசப்பு தித்திப்பு முதலியவை வேப்பிலை கற்கண்டு முதலியவைகளின் குணங்களே யன்றி கிரியை அல்ல. குணம் வேறு! கிரியை வேறு! ஸ்வபாவமாகிய கசப்பு முதலிய குணங்கள் ஸ்வரூபங்க ளாகிய வேப்பிலை முதலிய ஆதார வஸ்துக்களிலேயே இருக்கும். ஸூர்ய மண்டலத்தின் பிரகாசமோ கிரியை. கிரியை என்பது கர்த்தாவாகிய வஸ்துவின்

தொழிலே யாயினும் அந்தக் கிரியைக்குக் காரணம் வேண்டப்படும். ஸ்வபாவ குணமாகிய கசப்பு தித்திப்பு முதலியவைகளுக்குக் காரணம் வேண்டப்படுவதில்லை.

தீபம் பிரகாசித்தல் எனும் கிரியையை உடையது. நெருப்பு எரிதல் எனும் கிரியையை உடையது. தீபம் பிரகாசித்தலுக்கு எண்ணெய் முதலியவை காரணம். நெருப்பு எரிதலுக்குக் கட்டை முதலியவை காரணம். எண்ணெய் முதலியவை இராமல் தீபம் பிரகாசிக்காது. கட்டை முதலியவை இன்றி நெருப்பு எரியாது. வேப்பிலை முதலியவைகளுக்குக் கசப்பு முதலியவை ஸ்வபாவ குணமேயன்றி கிரியையல்ல. கிரியை நடக்குமிடங்களில் அதற்குரிய காரணப் பொருள் அமைந்திருக்க வேண்டும். ஆகையால் கிரியா ஸ்தலங்களில் சென்று பார்ப்போமானல் காரணப் பொருளை நாம் பிரத்யக்ஷமாகக் காணலாம். ஸ்வபாவ குண திருஷ்டாந்தங்களில் அந்த குணத்திற்குக் காரணப் பொருளைக் காணமுடியாது. தீபம் அடுப்பு முதலியவைகளில் எண்ணெய் கட்டை முதலிய காரணப் பொருள்களை நாம் பார்க்கின்றோம். அதுபோலவே வேப்பிலை கற்கண்டு முதலியவைகளில் கசப்பு தித்திப்பு முதலிய குணங்களுக்கு காரணப் பொருள்களை ஒருவரும் பார்க்கவில்லை. காரண மிராமலேயே வஸ்துவில் உள்ள குணங்களை ஸ்வபாவ மெனவும் காரண மிருப்பதால் நடைபெறுவதான செயலை கிரியை எனவும் சாஸ்திரம் வழங்குகின்றது.

### ஸூர்ய மண்டலம் பிரகாசித்தல் கிரியையே யன்றி குணமல்ல

சூரிய மண்டலத்தின் பிரகாசக் கிரியை வெப்பத்தையும் பனி முதலியவைகளையும் உண்டாக்கும். அப்படி உண்டாக்கும் ஆற்றல்களை வ்ருத்ரம், வைத்யுதம் எனும் சொற்களால் சாஸ்திரம் வழங்குகின்றது. சூர்ய மண்டலத்தின் பிரகாச கிரியையால் எல்லா வுயிர்களுக்கும் உயிர் வளர்தலும், ரோகங்களை ஒழித்தலும், விதைகள் முளைத்து விருத்தியடையச் செய்தலும், மற்ற உலகங்களிலும் அக்நியையும் வெப்பத்தையும் தருதலும், யோகம் உபாஸ்தி முதலியவைகளை யுடையோர்களை மரித்தும் தம் மண்டலத்திற்கு ஆகர்ஷித்தலும் ஏற்படுகின்றன. இப்படிப் பட்ட அபாரமாகிய பயன் ஸூர்யனுடைய பிரகாச கிரியையால் ஏற்படுவது. சூர்ய மண்டலத்திற்குப் பிரகாசமானது கிரியையேயன்றி குணமல்ல என்பதற்கு இவ்வொரு நியாயமே போதிய பிரமாணமாகும். அதாவது "காஸ்ரு தீப்தௌ" "காச எனும் தாதுவானது பிரகாசித்தலாகிய கிரியையை அர்த்தமாய்க் கொண்டது" எனும் வடமொழி வியாகரண

வாக்கியமே போதுமானது. இதுபோல கசப்பு தித்திப்பு முதலியவையும் கிரியைகள் என்பதற்கு ஒரு ப்ரமாணமுமில்லை. அவைகளை குணங்கள் என்பதாகவே நியாயநூல் கூறுகின்றது. சூர்ய மண்டலத்தின் பிரகாசக்கிரியை ஓயாமல் நடைபெறுவதற்குக் காரணம் யாதென்பதைப்பற்றி இங்கு விசாரணை செய்யப் புகுந்தோம். அவ்விஷயத்தில் ஆக்ஷேபிக்க வந்தால், திருஷ்டாந்தமாக ஸ்வபாவமாகவே நடைபெறுவதான மற்றோர் கிரியா வஸ்துவைக் காட்டவேண்டும். அதனைவிடுத்து ஸ்வபாவமாயுள்ள குணத்தையுடைய பொருளை த்ருஷ்டாந்தமாகக் கூறுவது எப்படிப் பொருந்தும்? த்ருஷ்டாந்தத்திற்கும் தார்ஷ்டாந்தமாகிய ப்ரகிருதத்திற்கும் ஸமானமாகிய தன்மை இருக்கவேண்டும். அப்படியிருந்தால் அதனைக்கொண்டு செய்யப்படுவதான ஆக்ஷேபம் நிலைக்கும். அப்படி இல்லாமல், கிரியா ஸ்தலமாகிய பிரகிருதத்தை ஆக்ஷேபம் செய்வதற்காக குணஸ்தலத்தை த்ருஷ்டாந்தமாகக் காட்டினால் அந்த ஆக்ஷேபம் உசிதமல்ல என்பதாக ஒதுக்கித் தள்ளப்படுவதற் கந்நியமாக வேறு யாதுமில்லை.

### சூர்யாதிகளுக்கு சக்தி பரம்பொருளாலேயே

உண்மை இவ்விதமாதலால் சங்கைக்கிடமில்லை. இனி விஷயத்தைத் தொடர்வோம். அதாவது ஓர் அண்டாநிறைய ஜலம் வைக்கப்பட்டிருக்கின்றதாக வைத்துக்கொள்வோம். அதினின்றும் ஓயாமல் சிறிய பாத்திரத்தினால் தீர்த்தம் எடுத்து உபயோகப்படுத்திக் கொண்டேயிருந்தும் அந்த அண்டாவில் ஜலம் குறையாமல் முன்போலவே இருக்குமானால் அண்டாவானது ஜலம் குறையாமலிருக்கும் ஸ்வபாவமுடையதெனச் சொல்லுவது பொருந்துமா? குறையாமல் ஜலம் இருப்பதற்குக் காரணம் யாதெனின், ஜலம் எடுக்கப்பட எடுக்கப்பட அவ்வண்டாவில் எங்கிருந்தோ ஜலம் கொண்டுவந்து நிரப்பப்படுகின்ற தென்பதல்லவோ ஸரியான காரணமாகும். ஒருவன் பெட்டியிலிருந்து பணத்தை எடுத்து ஓயாமல் செலவு செய்துகொண்டே இருக்கின்றான். பணம் பெட்டியில் குறையாமல் முன்போலிருக்குமாயின், அதற்குக் காரணம் யாதெனச் சொல்லுவது? செலவாகச் செலவாக அந்தப் பெட்டியில் மேன்மேலும் பணம் எங்கிருந்தோ கொண்டுவந்து வைக்கப்பட்டுக் கொண்டிருக்கவேண்டுமென்பதல்லவோ ஸரியான காரணம். அதுபோல சூர்யமண்டலம் பிரகாசக் கிரியையை ஓயாமல் செய்துகொண் டிருத்தலுக்குக் காரணம் பிரகாசக் கிரியாசக்தியை மேன்மேலும் உதவிக்கொண்டிருப்பதாகிய ஓர் வஸ்து இருக்கவேண்டுமென்று சொல்லுவதன்றோ பொருத்தமுடையதாகும். ஆகையால் "ஸூர்ய மண்டலங்கள் ஒன்றிரண்டல்ல,

"ஓ இந்திரா, நீ அறிந்திலை- ஆயிரம் ஸூர்யர்களுண்டு" எனும் முன்னர் காட்டிய வேத வாக்கியத்தின்படி, ஆயிரக் கணக்காயுள்ள ஸூர்ய மண்டலங்களெல்லாவற்றிற்கும் மற்றும் எண்ணிறந்தனவாகிய சந்திராதி மண்டலங்களுக்கும் அவ்வவற்றிற்குரிய கிரியைகளுக்குத் தக்க சக்திகளை ஸதா உதவிக்கொண்டிருப்பதாகிய ஆச்சர்யமாகிய சக்திராசிகளடங்கிய ஓர் வஸ்து உலகெங்கும் வியாபகமாய் கண் முதலிய இந்திரியங்களுக் கெட்டாததாய் இருக்கவேண்டு மென்பதாக நியாயவாயிலாகவே நிர்ணயிக்கப் படுகின்றது. கீதையில் இவ்வுண்மை பகவானுல்,

𑌯𑌦𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌗𑌤𑌂 𑌤𑍇𑌜𑍋 𑌜𑌗𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌮𑍍
𑌯𑌚𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌗𑍍𑌨𑍌 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑌾𑌮𑌕𑌮𑍍

"ஆதித்திய மண்டலத்தை யடைந்த எந்த தேஜஸானது ஸகல ஜகத்தையும் விளங்கச் செய்கின்றதோ, எந்த தேஜஸானது சந்திரனையும் அக்நியையும் அடைந்துளதோ அந்த தேஜஸ் என்னுடைய தென்றறி. (பகவத்கீதை 15 அத்யாயம்.) என அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வுண்மையை ஸகலத்திற்கும் மூலப்ரமாணமாகிய வேதமே உபதேசிக்கின்றது.

" 𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂 𑌨𑍇𑌮𑌾
𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋𑌽𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃 । 𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 ॥

ஸூர்யன் தானாகவே பிரகாசிக்கின்றதில்லை. சந்திர நக்ஷத்ரங்களும் அவ்வாறே. அக்நியும் தானாகவே எப்படி விளங்கும்? பரஞ்ஜோதிப் பொருளாகிய அவனையே ஆச்ரயித்து இவையெல்லாம் விளங்குகின்றன. அவனுடைய விளக்க சக்தியினாலேயே இவை விளங்குகின்றன."

என யஜுர்வேதாருணம் கூறுகின்றது. இவ்விதம் ஸூர்யாதிகளுக்கு "ப்ரகாசாதி சக்திகளை" என்பதாக ஆதி எனும் சொல்லியதினின்றும் இதுவறிக. மற்றுமுள்ள சந்திரகிருஹ நக்ஷத்ரங்களுக்கும் அக்நி ஜலவாயு முதலிய வஸ்துக்களுக்கும் எப்போதும் நடைபெற்றுக்கொண்டிருக்கும் வெவ்வேறு வகையான கிரியைகளுக்கும், வேண்டிய சக்திகளை ஓயாமல் உதவிக்கொண்டிருக்கும் பொருளாக அந்த வஸ்துவிருக்கின்றதெனவும் நிச்சயிக்கப்படுகின்றது. அந்த வஸ்துவுக்குப் பெயர் யாது எனின் ஸர்வசக்தன் எனும் பெயரே ஸரியானதெனவும் அந்த வஸ்துவே ஈச்வரன் பரமாத்மா என்பவை முதலிய சொற்களால் ச்ருதிகளில் வழங்கப்படுவதெனவும் அறியத்தக்கது.

## பரமேச்வரனுடைய சக்தியாலேயே ஆதிகாரிக தேவர்களின் கிரியைகள்

ஜகத்தின் ஸ்திதிக்காக உலகில் ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களும் அவைகளின் பரிணமங்களான சூரிய சந்திர க்ருஹநக்ஷத்ராதி மண்டலங் களும் ஜகத்பாலகர்களாய் தேஹமுடையவர்களாய் லோகாதிபர்களா யுள்ள இந்திர வருணயமாதி தேவர்களும் இங்கு நியாயவாயிலாக நிரூபிக் கப்பட்ட பரம்பொருளாகிய இறைவனுடைய சக்திகளாலேயே தத்தம் வேலைகளை ஓயாமல் செய்துகொண் டிருக்கின்றனர்.

இஞ்சி நெல்லிக்காய் முதலியவை தேன் முதலிய மதுரவஸ்துக் களில் முரபா போடப்பட்டிருக்குமாயின் தித்திக்கக் காண்கின்றோம். அந்த தித்திப்பானது அவைகளில் வியாபித்துக்கொண்டுள்ள தேன் முதலிய பொருள்களினுடையதே யன்றி இஞ்சி நெல்லிக்காய் முதலிய வைகளுக்குச் சொந்தம் என எப்படிச்சொல்ல இயலாதோ, அப்படியே இவை சொந்த சக்தியாலேயே கிரியைகளில் ஈடுபட்டுக்கொண் டிருக் கின்றன என்பது சிறிதும் பொருந்தாது.

ஸூர்ய சந்திராதிகளும் இந்த்ராக்நியமாதிகளும் பிருதிவ்யாதி ஐம்பூதங்களும் இந்தப் பரமாத்மாவாகிய இறைவனுடைய விசித்திர மாகிய சக்தியால் வியாபிக்கப்பட்டே தத்தம் வேலைகளைச் செய்து கொண்டிருத்தல் என்பதை ஒத்துக்கொள்ளாவிட்டால் மேற்கூறியவை களின் கிரியைகள் வெகு காலத்திற்கு முந்தியே ஓய்ந்து ஸகல ஜகங் களும் அஸ்தமித்துப் போயிருக்க வேண்டுமெனவே சொல்லவேண்டிய தாகும். அது அனுபவ விரோதமாகையால் இறைவனுடைய சக்தியின லேயே ஜகத்துக்குச் சேஷ்டை என்பதே நிர்ணயமாகின்றது.

## ஈச்வரனுக்கு ஸகல மஹிமைகளும் சித்சக்தியாலேயே

ஆதலால் எண்ணிறந்த அநேக கோடி அண்டங்களையும் அவ் வண்டங்களில் உலக ஸ்திதிக்கு ஹேதுவாயுள்ள ஜலாக்நி வாயுவாதி பூதங்களையும் இயக்கு மாற்றலையுடைய ஓர் பெரிய சக்தி எங்கும் நிறைந்து பரிபூர்ணமாய் அறிவுடையதா யிருப்பதாகவும், அதையே பரா சக்தி யென்பதாகவும், சக்தியானது ஆதார வஸ்துவிராமல் தனித்திரா தாகையால், அந்தப் பராசக்தியை விட்டுப்பிரியாமல் அந்த சித்சக்தியைத் தன்னுடையதாகக்கொண்டு அதற்கு ஆதாரமாக உள்ள வஸ்துவுமொன் றிருக்க வேண்டுமெனவும், அதுவே பரமாத்மா, பரசிவம் பரமேச்வரன் என்பதாதி சொற்களால் வழங்கப்படுவது எனவும், நம் சாஸ்திரம் போதிக் கின்றது. ஆகையால் ஜகத்கர்த்தாவான பரமேச்வரனை விசித்திரமாகிய

சக்திக்கு ஆதாரம் எனவும் சக்திக்களஞ்சியம், சக்தி ஸமுத்திரம், சக்தியால் ஜகத்காரணன், சக்தியால் பெருமையுடையோன், பராசக்தியையே தேஹமாகவும் பிராணனுகவும், மனமாகவும், ஐச்வர்யமாகவும் கொண்டவன் எனவும், அவன் பராசக்தியை விடுத்துப் பிரித்தறிய இயலாதவன் எனவும் நம் சாஸ்திரம் கூறும் வாக்கியங்களை இப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். அன்றியும் இறைவன் இந்தச் சக்தியாலேயே கருணநிதியாயுளன்.

இவ்விதம் செய்த ஆராய்ச்சியால் ஈச்வரன் ஸர்வ சக்தன் எனும் விஷயம் நிரூபிக்கப்பட்டது. இனி இவ்விறைவன் எவராலும் மீறமுடியாத ஆணையுடையோனுகிய ஓர் அறிவு வஸ்து என்பதாகவும் அறியத்தக்கது. தவிரவும் இவனுடைய சக்தியானது, மிகவும் அற்புதமாய் வெவ்வேறு வகையாயுள்ள இவனது கார்யங்களுக்கும் ஏதுவாக உள்ளது என்பதும், இன்னமும் கொஞ்சம் விசாரணை செய்தால் விளங்கும். சந்திரகிருஹ நக்ஷத்ராதி மண்டலங்களின் வேவ்வேறு வகையாயுள்ள கிரியைகளுக்குத் தக்கவாறு இவன் வெவ்வேறு வகையாயுள்ள பலவிதமான சக்திகளை ஓயாமல் தந்துகொண்டே யிருப்பவனென்பது மறிக. அதாவது சந்திரன் பிரதமையில் இரண்டு நாழிகையும், துவிதியையில் நான்கு நாழிகையும் த்ரிதியையில் ஆறு நாழிகையும், அவ்வாறே மற்றுமுள்ள திதிகளில் பிரதி நியதமான கால அளவைக் கணக்கினின்றும் சிறிதும் தவருமல் தோன்றிக்கொண் டிருத்தலைக் காண்கின்ருேம். அசேதனங்க ளாகிய ஜடவஸ்துக்களான இவை எல்லாவற்றையும் அறிவோனும் மீறவொணுத ஆணையுடையோனு மாகிய ஓர் பெரிய வல்லமை பொருந்தியவ னிராவிடில் இவ்வாறு கட்டளையிலடங்கி நடைபெறுமா? அல்லவன்ருே. ப்ருஹதாரண்ய உபநிஷதம் கார்க்கி ப்ரச்நத்தில்,

“ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யா சந்த்ரமஸௌ வித்⁴ருதௌ திஷ்ட²த:”

“ஓ கார்க்கி, இந்த அக்ஷர மெனப்படும் பொருளின் ஆக்ஞையாலேயே சூர்யசந்திரர்கள் தம் காரியங்களில் உள்ளனர் எனச் சொல்லப்பட் டிருக்கின்றது.” அன்றியும்,

## அந்தர்யாமியும் இவ்விறைவனே

“பீ⁴ஷாஸ்மாத்³வாத: பவதே பீ⁴ஷோதே³தி ஸூர்ய: பீ⁴ஷாஸ்மாத³க்³நிஶ்சேந்த்³ரஶ்ச”

"எவனாலும் மீறவொண்ணமல் பயஹேதுவாயுள்ள ஆணையுடையோனாகிய இவனிடம் பயத்தினால் வாயு சலிக்கின்றது. சூர்யன் உதிக்கின்றான். இவனிடம் பயத்தினால் அக்நியும் இந்திரனும் தத்தம் கிரியைகளைச் செய்கின்றனர்" எனத் தைத்திரிய உபநிஷதத்திலும், இந்த ச்ருதியின் பாஷ்யத்தில்,

"வாதாதயோ ஹி மஹார்ஹா: ஸ்வயமீச்வரா: ஸந்த: பவநாதிகார்யேஷு ஆயாஸபஹுலேஷு நியதா: ப்ரவர்தந்தே | தத் யுக்தம் ப்ரசாஸ்தரி ஸதி யஸ்மாந்நியமேந தேஷாம் ப்ரவர்தநம் | தஸ்மாதஸ்தி பயகாரணம் தேஷாம் ப்ரசாஸ்த்ரு ப்ரஹ்ம | யதஸ்தே ப்ருத்யா இவ ராஜ்ஞ: அஸ்மாத் ப்ரஹ்மணோ பயேந ப்ரவர்தந்தே."

"மிக்க மஹிமை யுடையவர்களான வாயு (சூர்ய சந்திரர்) முதலியவர்தாம் ஆச்சர்ய வல்லமை பொருந்தியவரா யிருந்தும் மிகவும் ஆயாஸ ஹேதுவாகிய, சலித்தல் உதித்தல் இவைகளில் ஒரே கட்டளையாய் பிரவர்த்தித்துக்கொண் டிருக்கின்றனர். பெரிய ஆக்ஞை யுடையவனை மற்றொருவனிருக்கின் இவ்வாறு நடைபெறுதல் ஒவ்வும். ஆதலால் அவர்களுக்கும் பயகாரணமான ஆக்ஞை யுடையதாகிய பரம்பொரு ளொன்றுளது. ஏனெனின் அரசனிடம் வேலைக்காரர்கள்போல இவர்கள் பரம்பொருளாகிய இவ்விறைவனிடம் பயத்தினால் பிரவர்த்திக்கின்றனர்" என சங்கர பகவத்பாத ஸ்வாமிகளாலும் இவ்வுண்மை உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் ப்ருஹதாரண்ய உபநிஷதத்திலும்,

"ய: ஆதித்யே திஷ்டந் ஆதித்யாதந்தரோ யமாதித்யோ ந வேத யஸ்யாதித்ய: சரீரம் ய ஆதித்யமந்தரோ யமயத்யேஷ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத:"

"எவன் ஆதித்திய மண்டலத்தி லிருந்துகொண்டு அம்மண்டலத்தாலும் அதன் தேவதையாலும் அறியப்படாதவனாக இருக்கின்றானோ சரீரத்தில் ஆத்மாபோல அவ்வாதித்திய மண்டலத்தி லிருந்துகொண்டு அறிந்துகொண் டிருக்கின்றானோ, ஆதித்யனை அதன் தொழிலில் ஏவிக் கொண்டுள்ளவனோ, அவனே உன்றுள்ளத்தி லிருக்கு மந்தர்யாமி (அம்ருதன்) நித்தியன்" என இவ்வாறே உபதேசித்து, அவனிராத இடமில்லை, அவன் ஸகல பொருளிலும் உள்ளவனெனக் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விதம் அவனிராத இடமில்லை, அவன் ஸகல

பொருளிலு முள்ளவன் என்றதனால் தேஹேந்திரியாதிக ளிராத அரூபவஸ்து என்பதாக நிச்சயிக்கப்படுகின்றது. தேஹேந்திரியாதிக ளிராமல் எல்லா வஸ்துக்களையும் அறிந்து தனதாக்ஞைக்கு அடங்கி நடக்கும்படி செய்தலாகிய ஞானவியவஹாரம் எப்படிப் பொருந்து மெனும் சங்கையும் இங்கு சிலருக்கு உதிக்கக்கூடும்.

## ஈச்வரனுக்கு தேஹேந்திரியாதிகளிராமல் பராசக்தியாலேயே எல்லா கிரியைகளும் நடைபெறும்

அதனுண்மை இவ்வாறேயாம். அவித்தை எனும் அக்ஞான வசத்தால் கர்மாக்களைச் செய்து அவைகளின் பயனைப் புசிப்பதற்காக ஜன்மாக்களை எடுப்பவர்களாகிய ஜீவான்மாக்களுக்கு ஞானாதிகளின் பொருட்டுச் சரீரம் வேண்டப்படும். மனோவாக்குகளுக் கதீதமான மகிமை பொருந்தியதாகிய பராசக்தியை குணமாய்க் கொண்ட இந்த இறைவனுக்கு ஞான வியவஹாரத்தின் பொருட்டுச் சரீராதிகள் வேண்டியனவல்ல. இவ்விஷயம் ப்ரம்ம ஸூத்ரம் ஈக்ஷத் யதிகரணத் தின் பாஷ்யத்தில் பகவத்பாத ஸ்வாமிகளால் வியக்தமாக போதிக்கப்பட் டிருக்கின்றது. அதாவது,

“𑌅𑌪𑌿 𑌚𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑌿𑌮𑌤𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌃 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑍍𑌯𑌪𑍇𑌕𑍍𑌷𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌨 𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌣 𑌰𑌹𑌿𑌤𑌸𑍍𑌯𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍌 𑌚𑍇𑌮𑌾𑌵𑍀𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑍍𑌯𑌨𑌪𑍇𑌕𑍍𑌷𑌤𑌾𑌂 𑌚𑌾𑌨𑌾𑌵𑌰𑌣 𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌾𑌂 𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌃— 𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌕𑌰𑌣𑌂 𑌚 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌤𑌤𑍍𑌸𑌮𑌶𑍍𑌚𑌾𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌶𑍍𑌚 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 । 𑌪𑌰𑌾𑌸𑍍𑌯 𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌚 । 𑌅𑌪𑌾𑌣𑌿𑌪𑌾𑌦𑍋 𑌜𑌵𑌨𑍋 𑌗𑍍𑌰𑌹𑍀𑌤𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌸 𑌶𑍃𑌣𑍋𑌤𑍍𑌯𑌕𑌰𑍍𑌣𑌃 । 𑌸 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌨 𑌚 𑌤𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 𑌤𑌮𑌾𑌹𑍁𑌰𑌗𑍍𑌰𑍍𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 ॥”

“அன்றியும் அவித்யாதிகளை யுடையவர்களான ஜீவர்களுக்கே ஞானோத் பத்திக்குச் சரீரம் வேண்டியதாகும். ஞானப்ரதிபந்த காரணமிராத வனான ஈச்வரனுக்கு ஞானத்திற்குச் சரீராதிகள் வேண்டியனவல்ல. உபநிஷத்திலுள்ள இவ்விரு மந்திரங்களும் ஈச்வரனுக்குச் சரீராதிக ளில்லை என்பதையும் ஆவரணமிராத ஞானத்தை யுடையோன் என்ப தையும் போதிக்கின்றன. “அவனுக்குக் காரியமில்லை காரணமில்லை. அவனுக்கு ஸமன் இல்லை, அதிகனுமில்லை. அவனுடைய சக்தியானது

பரா' எனப்படும். அது பலவிதமாக ச்ருதியில் சொல்லப்படுகின்றது. அது மற்றோர் காரணத்தால் உண்டானதல்ல. அது ஞான பலக்கிரியா வடிவமானது. அவன் பாணிபாதங்க ளிராதவன். வேகமாகச் செல்லுவோன், கிரஹிக்கின்றவன். அவன் நேத்திரேந்திரிய மிராமலே எல்லாவற்றையும் பார்க்கின்றவன். காது இராமலே கேட்பவன். அவன் எல்லாவற்றையும் அறிகின்றான். அவனை யறிவோன் இல்லை. அவனை ஆதியெனவும் மஹா புருஷனெனவும் சொல்லுகின்றனர்” எனச் வேதாச்வதர மந்திரங்களைப் பிரமாணமாக எடுத்துக்காட்டி உபதேசிக்கப் பட்டிருக்கும் வாக்கியங்களைக் காண்க.

## கேநோபநிஷத்சரித திருஷ்டாந்தம்

இதுவரையிலும் செய்த விசாரணையால் ஈச்வரன் ஸர்வ சக்தன் எனும் விஷயம் ஆக்ஷேப ஸந்தேஹாதிகளுக் கிடமின்றி விஸ்தாரமாகப் பிரமாண ஸஹிதமாக நிரூபிக்கப்பட்டது. ஆயினும் உபநிஷத்திலுள்ள ஓர் சரித்தை இங்கு திருஷ்டாந்தமாகக் காட்டுவோம்.

“ப்ரஹ்ம ஹ தேவேப்யோ விஜிக்யே | தஸ்ய ஹ ப்ரஹ்மணோ
விஜயே தேவா அமஹீயந்த | த ஐக்ஷந்த அஸ்மாகமேவாயம்
விஜயோ அஸ்மாகமேவாயம் மஹிமேதி | தத்தைஷாம் விஜஜ்ஞௌ |
தேப்யோ ஹ ப்ராதுர்பபூவ | தந்ந வ்யஜாநந்த கிமேதத்ய
க்ஷமிதி | தே அக்நிமப்ருவந் ஜாதவேத ஏதத்விஜாநீஹி கிமேதத்ய
க்ஷமிதி ததேதி | ததப்யத்ரவத் தமப்யவதத் கோஸீதி அக்நிர்வா
அஹமஸ்மீத்யப்ரவீஜ்ஜாதவேதா வா அஹமஸ்மீதி | தஸ்மிம்ஸ்த்வயி கிம்
வீர்யமித்யபீதம் ஸர்வம் தஹேயம் யதிதம் ப்ருதிவ்யாமிதி |
தஸ்மை த்ருணம் நிதயௌ ஏதத்தஹேதி ததுபப்ரேயாய
ஸர்வஜவேந தந்ந ஶஶாக தக்தும் ஸ தத ஏவ நிவவ்ருதே
நைததஶகம் விஜ்ஞாதும் யதேதத்யக்ஷமிதி | அத வாயு
மப்ருவந் வாயவேதத்விஜாநீஹி கிமேதத்யக்ஷமிதி ததேதி |
ததப்யத்ரவத்தமப்யவதத் கோஸீதி வாயுர்வா அஹமஸ்மீத்ய
ப்ரவீந்மாதரிஶ்வா வா அஹமஸ்மீதி | தஸ்மிம்ஸ்த்வயி கிம் வீர்யமித்ய
பீதம் ஸர்வமாததீய யதிதம் ப்ருதிவ்யாமிதி | தஸ்மை த்ருணம்
நிதயாவேததாதத்ஸ்வேதி ததுபப்ரேயாய ஸர்வஜவேந தந்ந
ஶஶாகாதாதும் நைததஶகம் விஜ்ஞாதும் யதேதத்யக்ஷமிதி |

𑌅𑌥𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌮𑌘𑌵𑌨𑍍𑌨𑍇𑌤𑌦𑍍𑌵𑌿𑌜𑌾𑌨𑍀𑌹𑌿 𑌕𑌿𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿 𑌤𑌥𑍇𑌤𑌿 𑌤𑌦𑌭𑍍𑌯𑌦𑍍𑌰𑌵𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌿𑌰𑍋𑌦𑌧𑍇 । 𑌸 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇𑌵𑌾𑌕𑌾𑌶𑍇 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌜𑌗𑌾𑌮 𑌬𑌹𑍁𑌶𑍋𑌭𑌮𑌾𑌨𑌾𑌮𑍁𑌮𑌾𑌂 𑌹𑍈𑌮𑌵𑌤𑍀𑌂 𑌤𑌾𑌂 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌕𑌿𑌮𑍇𑌤𑌦𑍍𑌯𑌕𑍍𑌷𑌮𑌿𑌤𑌿 । 𑌸𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌹𑍋𑌵𑌾𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌾 𑌵𑌿𑌜𑌯𑍇 𑌮𑌹𑍀𑌯𑌧𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌤𑌤𑍋 𑌹𑍈𑌵 𑌵𑌿𑌦𑌾𑌂𑌚𑌕𑌾𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 । 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑍇 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌤𑌿𑌤𑌰𑌾𑌮𑌿𑌵𑌾𑌨𑍍𑌯𑌾𑌨𑍍𑌦𑍇𑌵𑌾𑌨𑍍𑌯𑌦𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌯𑍁𑌰𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑍇𑌨𑌨𑍍𑌨𑍇𑌦𑌿𑌷𑍍𑌠𑌂 𑌪𑌸𑍍𑌪𑌰𑍍𑌶𑍁𑌸𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑍇𑌨𑌤𑍍𑌪𑍍𑌰𑌥𑌮𑍋 𑌵𑌿𑌦𑌾𑌂𑌚𑌕𑌾𑌰 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿.

இதனர்த்தம் வருமாறு :

“முன்னொரு காலத்தில் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் பெரிய ஓர் யுத்தம் நடந்தது. தேவர்கள் ஈச்வரனை அனுஸரிக்கு முத்தம புருஷர்களாதலால் இறைவன் ஜகத்தின் ஸ்திதிக்கு இவர்கள் ஹேது புருஷர்கள் என்பதாகிய அனுக்ரஹேச்சையால் அந்த தேவர்களுக்கு ஜயமுண்டாகும்படி ஸங்கல்பித்தனர். அவ்விதம் ஈச்வர ஸங்கல்ப சக்தி விசேஷத்தாலேயே, அஸுரரை ஜயிக்கும்படியான பராக்ரமம் தேவர்களுக்கு ஸம்பவித்தது. தேவர் அஸாத்தியமாகிய ஜயத்தைப்பெற்று மிகவும் ஸந்தோஷத்தோடு திரும்பலாயினர். தேவர்கள் ஈச்வரசக்தி விசேஷத்தாலேயே நமக்கு ஜயம் கிடைத்ததென்பதை எண்ணாமல், நம்முடைய ஸொந்த ஸாமர்த்தியத்தாலேயே இது கிடைத்ததென்று எண்ணலாயினர். ஸர்வக்ஞனான பரமாத்மா அதனை யறிந்தவராதலால் அவர்களுடைய அயுக்தமாகிய அஹங்காரத்தைப் போக்கி அநுக்ரஹிக்கக் கருதி அவர்களெதிரில் மிகவும் அற்புதமாகிய ஓர் ரூபத்தோடு தோன்றினார்.

அவர்கள் அவ்வாச்சரிய வடிவத்தைக் கண்ணால் கண்டும் இது பூஜிக்கத்தக்க வஸ்துவென் றறியவில்லை. அப்போது தேவர்கள் அக்நி பகவானை நோக்கி, இதோ எதிரில் தோன்றியுள்ள யக்ஷவஸ்துவை நன்றாய் விசாரித்துத் தெரிந்துகொள் என்றனர். அக்நி அப்படியே அந்த உருவத்திற்கெதிரில் சென்றார். ஸமீபத்தில் வந்த அக்நியைப் பார்த்து அவ்வுருவம், ‘அடா, நீ யார்? உன் ஸாமர்த்தியம் யாது?’ என அவக்ஞையோடு வினவ, அக்நி பகவான் ‘நான் அக்நி பகவான், ஸகல பொருள்களையும் அழித்து நாசம் செய்யும் சக்தி எனக்குள’ தென்றார். அதுகேட்டு அந்த யக்ஷவுருவம் ‘அடா! அப்படியானால் இதனை தஹிப்பா

யாக¹ என ஒரு சிறு துரும்பை எதிரில் எடுத்துப்போட்டது. அக்நி பக
வான் தனது முழுபலத்தினாலும் அதனை தஹித்துபோட முயற்சித்தும்
ஸ்வல்பமேனும் ஸாத்தியப் படாததனால் கர்வம் நீங்கி லஜ்ஜையோடு
'இந்த யக்ஷவுருவம் எப்படிப்பட்டதென விசேஷமாக அறிந்துகொள்ள
முடியுவில்லை' எனச் சொல்லிக்கொண்டே திரும்பலானார்.

அது கண்டு தேவர்கள் 'ஓ வாயுபகவனே, நீர் சென்று இந்த யக்ஷ
உருவத்தைப்பற்றி விசேஷமாகத் தெரிந்துகொண்டு வருவீராக' என்
றனர். வாயு பகவான் எதிர்ச்செல்ல, அக்நிபகவானைக் கேட்டதுபோ
லவே வாயுபகவானை யக்ஷன் வினவ, அதற்கு வாயுபகவான் 'ஜகத்திலுள்ள
ஸகல பொருள்களையும்எடுத்துக்கொண்டு ஆகாசமுழுதும் ஸஞ்சரிப்பேன்'
எனக் கூறினார். அந்த யக்ஷவுருவம் முன்போலவே வாயுபகவானையும்
நோக்கி 'அப்படியாயின் இந்தத் துரும்பை எடு' என்றது. வாயுபகவான்
தனது ஸர்வ ப்ரயத்தினத்தினால் முயன்றும் அது ஸாத்தியப்படாமல்
கர்வமிழந்து லஜ்ஜையோடு கூடியவனாய், 'அஹோ, இதனை அறிந்து
கொள்ள ஸாத்தியப்படவில்லை'' எனச் சொல்லிக்கொண்டே திரும்ப
லானார்.

அப்போது தேவர்கள் இந்திரனை நோக்கி 'ஓ தேவராஜனே,
நீராவது சென்று இந்த வஸ்துவை நன்கறிந்து வருவீராக' என வேண்
டினர். இந்திரன் அந்த உருவத்தருகில் சென்றான். அப்போது அந்த
வடிவம் மறைந்துவிட்டது. இந்திரன், 'அக்நி வாயு தேவர்களுக்குக்
கிடைத்த பெருமைகூட நமக்குக் கிடைத்திலதே' என்று மிகவும் லஜ்ஜை
யுடைந்தானாயினும், அந்த உருவத்தைத் தான் நன்றாய் தரிசிக்க விரும்
பினான். அவ்வாறு சுத்தமான சித்தத்தோடு கூடியவனாய் இந்திரன் தன்
னுடைய தரிசனத்தை விரும்பினதறிந்து அந்த உருவமானது, கோடி
சூர்யோதயம்போலச் சொலிக்கின்றதும் கோடி சந்திரனைப்போலப்
பார்க்க இனியதும், அற்புத அழகு வாய்ந்ததுமாகிய திவ்ய ஸௌந்தர்ய
வடிவமுடையவளாகிய ஸாக்ஷாத் ப்ரம்ம வித்யாதேவி எனும் ஹைமவதி
யாகிய உமாவடிவத்தோடு பராசக்தி அவ்விந்திரனுக்கெதிரில் ஆவிர்ப்
பவித்தனள்.

## இந்திரனுக்கு உமாதேவியின் உபதேசம்

ஸம்ஸாரமாகிய காட்டுத் தீயினால் ஏற்படும் தாபத்திற்குப்
பயந்து பக்தியோடு உபாஸிப்பவர்களான ஜீவர்களைப் பற்பல வடிவங்க
ளோடு தோற்றமுற்று அன்னைபோலக் கருணைவாய்ந்த கடாக்ஷத்தினால்
நோக்கி ஞானமிருதத்தை வருஷிக்கின்ற பிரம்ம வித்யா ஸ்வரூபிணி
யான பராசக்தியி னருகில், இந்திரன் வினயத்தோடு சென்று ''ஹே!

ஸர்வலோக சரண்ய யாகிய தாயே! அக்னி வாயுக்களுக்கு எதிரில் துரும்பைப் போட்டு பரிக்ஷித்த அந்த யக்ஷனுடைய உண்மையைச் சொல்ல வேண்டும்" என வேண்டினன். அப்போது பராசக்தி, "ஓ! இந்திரா! பிரம்மாண்டங்கள் எல்லாவற்றையும் தன் சக்தியால் வியாபித்துக்கொண்டு அவைகளி லடங்கிய ஸகல வஸ்துக்களுக்கும் கிரியைகளுக்குத் தக்க யோக்கியதைகளைத் தருகின்றவராகிய பரமாத்மாவே அந்த யக்ஷரென்றறி. அவரது சக்தி மகிமையால் ஜயத்தைப் பெற்ற நீங்கள் அதனை மறந்து உங்களுக்குள்ள சொந்த யோக்கியதையினுலேயே ஜயம் பெற்றதாக மோஹத்தால் எண்ணி அகங்காரமுடையவரானீர்கள்" என உபதேசித்து அருளவே, அப்போது இந்திரன் உண்மை ஞானமுடையவனாய் தெளிவு பெற்றான். ஸமீபத்திலிருந்து அதனைக் கேட்டறிந்த அக்னி வாயு தேவர்களும் ஞானத்தினுல் தெளிவு பெற்றனர் என, கேனோபநிஷத்திலுள்ளது போன்ற அருமையான பல சரிதங்களை இங்கு திருஷ்டாந்தமாகக் கண்டுகொள்ளலாம். உலகிலுள்ள எந்த வஸ்துவினிடமாவது யாதேனுமோர் கிரியா யோக்கியதை காணப்படுமாயின் அது ஈச்வர சக்தியினுலேயே, எனும் நிர்ணயத்தை நாம் உறுதியாக வைத்துக்கொள்ள வேண்டும். இதனுல் ஈச்வரன் ஸர்வசக்தன் அதாவது ஸர்வ வல்லமை பொருந்தியவன் எனும் விஷயம் ஆராய்ச்சி செய்யப்பட்டது. இவ்வாராய்ச்சியினின்றும் சிலர் இவ்விதம் ஆக்ஷேபிக்கக்கூடும். அதாவது ஈச்வரன் எல்லா வல்லமைகளும் பொருந்தியவனெனின் ஜகத்திலுள்ள ஸகல ஜீவாத்மாக்களுக்கும் மோக்ஷம் தரும் வல்லமையும் அவரிடமுள்ளதென்பதாக ஏற்படும். அப்படியானுல் அவ்விறைவன் ஸகல ஜீவர்களையும் ஏன் மோக்ஷமடையச் செய்யக்கூடாது? அவ்வாறு செய்யாததினுல் அவனை ஸர்வ சக்தனென்பது எப்படிப் பொருந்தும்? எனும் ஆக்ஷேபமாம்.

## ஈச்வரன் எல்லோர்களுக்கும் ஏன் மோக்ஷம் கொடுக்கக்கூடாதெனும் சங்கையும் ஸமாதானமும்

இவ்வாக்ஷேபம் உசிதமல்ல. இதற்கோர் திருஷ்டாந்தம் கூறுவாம். ஸூர்யகிரணம் இருளைப்போக்கும் வல்லமையுள்ளது என்பது உண்மை. இது உண்மையாயின், கதவடைத்து இருட்டுள்ள கிருஹத்திலிருக்கு மிருட்டை ஏன் போக்கக்கூடாது' எனும் ஆக்ஷேபம் போன்றதே இவ்வாக்ஷேபமு மென்றறிக. இருட்டைப் போக்கும் ஸ்வபாவம் ஸூர்ய கிரணங்களுக் குள்ளதாயினும் கதவடைத்திருக்கும் பிரதிபந்தக மிருத்தலினுல் அவ்வுள்ளிலிருக்கும் இருட்டு நீங்குகின்றதில்லை. அதுபோல முக்திதரும் வல்லமை ஈச்வரனுக்குள்ளதாயினும் பாபவினைகளாகிய

பிரதிபந்தகமுடைய ஜீவர்களின் ஸம்ஸாரதுக்கம் நீங்குகின்றதில்லை. க்தவடைத் துள்ளதனால் இருளடர்ந்த கிருஹத்திலிருக்கும் இருள் நீங்காததைக்கொண்டு ஸூர்யனுக்கு இருளைநீக்கும் வல்லமையில்லை என்பது எப்படி உசிதமாகாதோ அப்படியே இவ்வாக்ஷேபமும் என்பதாம்.

மீண்டும் ஆக்ஷேபம்: பாபகர்மங்களாகிய பிரதிபந்தங்களுடைய ஜீவர்களின் பாபங்களைப் போக்க ஈச்வரனுக்கு வல்லமையுண்டா இல்லையா? இல்லையெனின் ஈச்வரனை ஸர்வவல்லமை பொருந்தியவனென்பது பொருந்தாது. அவ்வல்லமையு முளதெனின் ஏன் அவன் ஜீவர்களின் பாபவினைகளை ஒழியச்செய்யக்கூடாது என்பதாம்.

இதுவும் அவிவேகமேயாம். தீர்த்தத்திற்கு தாஹத்தை ஒழியச் செய்யும் சக்தியுளது. உளதாயின் தீர்த்த மருந்தாதவரின் தாஹம் ஏன் நீங்குகின்றதில்லை? எனும் ஆக்ஷேபம் போன்றதே இதுவுமென்றறிக. தீர்த்தத்திற்குத் தாஹத்தை நீங்கச்செய்யும் சக்தியுளதாயினும் அதனை அருந்ாதவனுக்கு எப்படி தாஹம் நீங்குகின்றதில்லையோ, அப்படியே ஈச்வரனுக்கு முக்திதரும் வல்லமை உளதாயினும் அவ்வீச்வரனிடம் சித்தத்தைச் செலுத்தாமல் உலகப் பொருள்களிலேயே சித்தத்தைச் செலுத்திக்கொண்டிருப்பவரின் ஸம்ஸாரதுக்கம் நீங்குகின்றதில்லை என்பதாம்.

மீண்டும் ஆக்ஷேபம்: உலகப்பொருள்களை ஸ்ருஷ்டித்த ஈச்வரனுக்கு அப்படி ஸ்ருஷ்டித்தலால் ஸ்வப்ரயோஜனமுண்டா? இல்லையா? இல்லையெனின் பிரயோஜனமிராமல் காரியத்தைச் செய்தல் பித்தர் நீங்கலாயுள்ள மனிதர்களிடம் காணப்படுகின்றதில்லை. ஆதலால் ஸத்தியஞானப் பொருளாகிய ஈச்வரனிடமுள்ள ஜகத்ஸ்ருஷ்டியைப் பித்தர்களின் செயல்போலென்பது உசிதமாகாது. ஆதலால் ஈச்வரனது செயலை ஸ்வப்ரயோஜன முடையது எனக் கூறவேண்டியதாகின்றது. அப்படியாயின் அவன் எவ்வாசைகளுமிராத நித்யதிருப்தன் என்பது எப்படிப் பொருந்துமென்பதாம்.

இவ்வாக்ஷேபமும் தவறு. அதாவது ப்ரம்மஞானம் பெற்ற ஜீவன்முக்தர், உலகில் ஸகல ஆசைகளும் நீங்கியவர்களே. அவர்களுக்கு ஸ்வப்ரயோஜனம் சிறிது மில்லையாயினும் முமுக்ஷுக்களாகிய பரிபாகிகளின் பொருட்டு உபதேசித்தலாகிய கார்யத்தில் முயற்சியுளது.. அதுபோல ஈச்வரன் ஸ்வப்ரயோஜனம் சிறிதும் விரும்பாதவரேயாயினும் ஜீவர்களின் கர்மபோகத்தின் பொருட்டு ஜகத்ஸ்ருஷ்டியைச் செய்வர். ஆதலால் இவ்வாக்ஷேபம் அவிவேகத்தினால் நிகழ்வதென்றறிக.

சங்கை: ப்ரம்மஞானம் பெற்று ஜீவன்முக்தர்களாகிய ஞானிகளுக்கு உலகப்பொருள்களில் ஆசையில்லையேயாயினும் முமுக்ஷுக்களுக்கு ஸம்ஸாரதுக்கம் நீங்கவேண்டுமெனும் ஆசைமாத்திரம் உண்டு. அதுபோல் ஈச்வரனும் ஆசைமுற்றும் நீங்கியவரல்ல எனவும் ஜீவர்களுக்குக் கர்மபலபோகம் வேண்டுமெனும் ஆசைமட்டும் ஒழியாதவரெனவும் ஏற்படுமே என்பதாம்.

இச்சங்கையும் உசிதமல்ல. ஸ்வப்ரயோஜனமின்றி பிறருடைய துக்கங்களை நீங்கச்செய்தலின் பொருட்டாகிய செய்கை கருணையினாலேயே என்பது உண்மை. ஆதலால் ஈச்வரன் கருணாநிதி என்பதாம். கருணை வேறு, ஆசை வேறு. கருணையென்பது ஜனனமரண ஸம்ஸாரத்தி லகப்பட்டிராத முக்த புருஷர்களிடமிருக்கும் குணம். ஆசையோ எனின் ஸம்ஸார பந்தத்தி லகப்பட்டுக்கொண்டவர்களிடம் உள்ள குணம். ஈச்வரன் ஜநநமரண ஸம்ஸாரத்தில் ஒருபோதும் அகப்பட்டிராத நித்திய முக்தன். ஆதலால் அவன் நித்திய கருணாநிதி என அறியவேண்டும். சொற்களின் பொருள்களை அறியாமையாலேயே "ஈச்வரனுக்கும் ஆசையுளது" என ஆக்ஷேபித்தல் உசிதமாகாது.

இங்கு மீண்டும் ஓர் ஆக்ஷேபம் ஏற்படக்கூடும். ப்ரம்மஸூத்ரமெனும் பிரமாண க்ரந்தத்தில் "லோகவத்து லீலாகைவல்யம்" என ஓர் ஸூத்ரமுள்ளது. அந்த ஸூத்ரத்தின் உரையில் சங்கரபகவத் பாதாசார்ய ஸ்வாமிகளால் "ஈச்வரன் பிரபஞ்சங்களை ஸ்ருஷ்டித்தலும், லயமடையச் செய்தலும் தன் பிரயோஜனத்தைக் கருதியதன்றும். பிரயோஜனத்தைச் சிறிதும் கருதாத பாலர், ஸ்வதந்திரராயுள்ள அரசர் முதலியவர்கள் உல்லாஸமாகவே லீலையில் ஈடுபடுதல், அதனை விடுத்துச் சும்மா இருத்தல் ஆகிய இவ்விரு நிலைமைகளை உடையவர்களாயிருத்தல்போல, ஈச்வரன் ஸ்ருஷ்டி லயம் எனும் இருவகை நிலைமைகளை யுடையவர்" எனக் கூறப்பட்டிருக்கின்றதே. அதனால் ஈச்வரன் உல்லாஸமாகிய விளையாட்டு முதலியவைகளைச் செய்து ரமிப்பவர்களான பாலர் முதலியவர்கள் போன்றவர் என ஏற்படுகின்றதே எனச் சிலர் ஆக்ஷேபிக்கலாம்.

இவ்வாக்ஷேபமும் ஸரியல்ல. எப்படி எனின் கூறுவாம்: ப்ரம்மஸூத்ரத்தில்கூறியுள்ளஷை வாக்கியத்தின் கருத்தை இவ்விதமறிக. அந்த ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் சங்கரபகவத்பாத ஸ்வாமிகள் இக்கருத்தை வியக்தமாகக் கூறியுள்ளார். அதாவது,

"யதாலோகே ராஜ்ஞ: ஆப்தைஷணஸ்ய ராஜ்ஞோ ராஜாமாத்யஸ்ய வா வ்யதிரிக்தம்
கிஞ்சித்ப்ரயோஜநம் அநபிஸந்தாய கேவலம் லீலாரூபா: ப்ரவ்ருத்தய: க்ரீடா...

𑌵𑌿𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌾𑌨𑌾𑌂 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌾𑌦𑍇𑌵 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌶𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌰𑌶𑍍𑌵𑌾
𑌸𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑌿𑌹𑌵𑌿𑌶𑍍𑌵𑌸𑍃𑌷𑍍𑌟𑌿".

"எப்படி மூச்சிழுத்தல் மூச்சுவிடுதல் முதலியவை பிரயோஜனத்தைக் கருதாமல் ஸ்வபாவமாகவே பிராணிகளிடம் நடைபெறுகின்றனவோ அவ்வாறு பிரயோஜனத்தைக் கருதாமல் ஜகத்ஸ்ருஷ்டியாதிகள் ஈச்வரனிடம் நடைபெறுதல் லீலைவடிவ மென்பதாம்" என விளக்கியிருக்கும் வாக்கியத்தைக் கவனித்தால் அக்நியிடம் தஹிக்கும் கிரியையும், சூர்யனிடம் பிரகாசிக்கும் கிரியையும் எங்ஙனம் பிரயோஜனத்தைக் கருதியதாயிராமல் ஸ்வபாவஸித்தமா யுளதோ அவ்வாறே ஈஸ்வரனிடமுள்ள ஜகத்ஸ்ருஷ்டியாதிக் கிரியைகள் அவனிடமுள்ள ஸ்வபாவ மெனப்படும் மாயாசக்தியாலாவதாம். ஸ்வபாவமாக நடைபெறும் விஷயங்களில் காரணம் விசாரித்தல் உசிதமன்றாம். இவ்வுண்மையானது,

"𑌕𑍍𑌰𑍀𑌡𑌾𑌰𑍍𑌥𑌂 𑌸𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌨𑍍𑌯𑍇 𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌪𑌰𑍇
𑌦𑍇𑌵𑌸𑍍𑌯𑍈𑌷 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌯𑌮𑌾𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌸𑍍𑌯 𑌕𑌾 𑌸𑍍𑌪𑍃𑌹𑌾"

ஈச்வரனிடம் ஜகத்ஸ்ருஷ்டியாதிக் கிரியை விளையாட்டுக் கிரீடார்த்தமாக எனச் சிலரும், போகார்த்த மென வேறு சிலரும் எண்ணலாம். ஆப்த காமனாகிய இறைவனுக்கு இது ஸ்வபாவமாக நடைபெறுகின்றது. அவனுக்கு ஆசையேது? எனக் கூறிய மாண்டூக்கிய உபநிஷதர்த்த விளக்கமாயுள்ள கௌடபாதாசார்ய ஸ்வாமிகளது காரிகையில் இவ்விதம் சொல்லியிருத்தலைக் கண்டு ஆக்ஷேபம் பிசகென அறிக.

இதுவரையிலும் ஈச்வரன் ஸர்வசக்தன் என்பதைப்பற்றி விவரமாய் விசாரிக்கப்பட்டது. ஸகல வல்லமைகளும் பொருந்தினவன் (ஸர்வசக்தன்) எனும் சொல்லின் அர்த்தத்தில் கிரியாவல்லமை ஞான வல்லமை எனும் இருவகை ஆற்றல்களும் அடங்கியுள்ளனவாயினும் நமக்கு விவரமாகிய ஞானம் ஏற்படுவதின் பொருட்டு அவனிடமுள்ள ஞானவல்லமையைப்பற்றி கொஞ்சம் ஆராய்ச்சி செய்வாம்.

## ஈச்வரன் ஸர்வக்ஞன் என்பதைப்பற்றிய விசாரணை

ஈச்வரன் ஸர்வக்ஞன் அதாவது எல்லா மறிவோன் என்பதை இவ்வாறறிக. உலகிலுள்ள எண்ணிறந்த ஜீவாத்மாக்களுக்குள் ஒருவருக்காவது தம்மிஷ்டப்படி வாழ்நாள் நடைபெறுகின்றதெனச் சொல்ல இயலுமா என்பதை கொஞ்சம் கவனிப்போம். ஜீவான்மாக்கள் எல்லோருக்கும் பூர்வகர்ம பலனைப் புசிப்பதற்குச் சரீரமுள்ளது. அப்படி வந்திருக்கும் சரீரம் அவரவரிஷ்டப்படி வந்ததெனச் சொல்ல முடியுமா?

அவரவரிஷ்டப்படியே வந்திருக்கின்றதெனச் சொல்லுவோமாயின் அது கொஞ்சமேனும் பொருத்த முடையதாகக் காணோம். அதாவது ஜீவாத்மாக்களுக்குள் மிகவும் மேன்மைபொருந்தியவர்கள் ஸனகாதிமுனிவர்கள், வஸிஷ்டர் முதலிய ரிஷிகள், இந்திரன் முதலிய தேவர்கள் பிறவியிலேயே மிகவும் மேன்மை பெற்றவர்கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களின் இஷ்டப்படி இவர்களுக்கு சரீரங்கள் வந்திருக்கின்றன என்பதில்லை. அவர்களிஷ்டப்படியே சரீர முளது எனின் அசரீரனும் ஸர்வபரிபூரணனும் ஸச்சிதானந்த வடிவனுமாகிய பரம்பொருள் மாத்திரமாகத் தாங்கள் ஆகவேண்டுமென்பதை விடுத்து அம்மாதிரி சரீரம் வேண்டுமென்று விரும்பமாட்டார்களன்றோ. அதுநிற்க, இனி சூரபத்மன் ராவணன் முதலிய அஸுர ராக்ஷஸர்களுக்காவது தங்களிஷ்டப்படி சரீரம் வந்திருக்கிறதா வென்பதையும் கவனிப்போம். அவர்களிஷ்டப்படி அமைந்துளதெனின் கவர் தீவட்டிபோலும் காளிகோவில் சூலம்போலும்கருவமரக்கிளைபோலவுமுள்ள சிரம் கரம் முதலிய அவயவங்களை விரும்புவார்களா. கோடி மன்மத ஸுந்தர வடிவமுடைய இறைவனுடைய சரீரம்போ லல்லவா தங்களுக்கும் வேண்டுமென விரும்புவார்கள். அவ்வாறே பூதப்பிரேத பிசாசாதிகளும் தங்களுக்கு மிகவும் விகாரமாய் கோரமாய் சரீரம் அமைந்திருக்க வேண்டுமென விரும்புவதற் கிடமில்லையன்றோ! இனி இவ்வாறே மனிதர்களாகிய நம்மவர்களைப்பற்றி கவனிப்போம். நரகயாதனைகளைக் காட்டிலும் பயங்கரமாகிய கெர்ப்பவாஸ துக்கத்திற்கு இடமாய்ச் சரீரம் வேண்டுமென நாம் விரும்புவோமா? அக்நி, இந்திர, யம, வருணாதிகளுக்குப்போன்ற திவ்ய சரீரத்தை விரும்பாது இருப்போமா? தவிரவும், சண்டாளர் முதலியோர் பிராம்மணாதி சரீரத்தை விரும்பாது இருப்பார்களா? அவ்வாறே உலகிலுள்ள எந்த ஸ்திரீயாவது, தனக்கு மாதம் மூன்றுநாள் சிறைச்சாலையில் வாஸமும் இவ்வாழ்க்கையில் பிரஸவம் எனும் பெரும் மரணகண்டமும் பொருந்திய ஸ்திரீதேகத்தை விரும்புவாளா? மேலும் அருமையாகிய பேச்சையும், அடக்கப்பட்டிராத ஸ்வதந்திரமான வாழ்நாளையும் உடையதான மனுஷ ஜென்மத்தை விட்டு மிருகசரீரம் வேண்டுமென விரும்பியதனுலா மிருகங்கள் தோன்றி இருக்கின்றன?

## ஜீவான்மாக்களின் இஷ்டப்படி சரீரங்கள் வருகின்றன என்பதல்ல

அறிவும் ஸுகமும் வசமும் இழந்து வலை முதலியவைகளிற் சிக்கிப் பிற ஜீவர்களுக்கு ஆஹாரமாய் அல்லற்படும் பறவை யினங்கள் அவ்விதம் விரும்பியா அவைகளுக்கு அச் சரீரங்கள் வந்துள்ளன?

இவ்விஷயம் ஒன்றைக் கவனிப்போம். முன்கால்களையும் பின்கால்களையும் இறுக்கி பந்தனம் செய்து, ஆகாரம், தண்ணீரை உட்கொள்வதற்கின்றி வாயையும் கட்டி, சுமக்கமாட்டாத மூட்டைகளையும் சுமந்துழலும் கழுதைச் சரீரத்தைத் தனக்கு வேண்டுமென விரும்பியா அதற்கு அச் சரீரம் வந்துள்ளது? இனி கிருமி, கீடம், முகடு பேன், மூட்டைப்பூச்சி முதலிய சரீரம் வேண்டுமென விரும்பியா ஜீவன்கள் அந்த ஜென்மங்களைப் பெற்றுள்ளன? இஃதிங்ஙன மிருக்க, கோரமாகிய யாதனைகளை அனுபவிப்பவர்களாகிய நரகத்திலுள்ள ஜீவர்கள் தமது விருப்பத்தினலா யாதனு சரீரங்களைப் பெற்றிருக்கின்றனர்? இவ்வாறு ஸனகாதியர்கள் முதல் கிருமி, கீடாந்தங்களாயுள்ள பிராணிகளுள் ஒன்றுக்காவது தம் இஷ்டப்படி சரீரம் வந்திருக்கின்றதென்பதற் கிடமில்லை என்பது விசதமாகின்றது.

## ஜீவர்களுக்கு வாழ்நாள் தம்மிஷ்டப்படி அல்ல

இனி இவ்வாறு தாம் விரும்பிய வண்ணம் ஜீவான்மாக்களுக்கு சரீரங்கள் வந்தனவல்ல என்பது ஓர்புறம் நிற்க, சரீரம் வந்தபிறகு மரிக்கும் வரையிலும் இடையிலுள்ள வாழ்நாளாவது ஒருவருக்காவது தம்மிஷ்டப்படி நடைபெற்று வந்ததெனச் சொல்லமுடியுமா? ஸனக ஸனந்தனதி யோகிவர்யர்கள் ஓர் ஸமயம் இல்லறத்தை வஹிக்க ஆணை செய்த பிரம்ம தேவனது அபிப்ராயத்தை தங்களால் அனுஸரிக்க இயலவில்லையே! என வருந்த நேர்ந்ததும் பிரசித்தம். பரம்பொருளை அறிந்து அந்நிலையிலேயே அமர்ந்து ஆனந்திக்க வேண்டுமெனும் கோரிக்கை நிறைவேருத வாழ்நாள்களைப் பலகாலம் கழித்துப் பிறகு பசுபதியாகிய இறைவனை அவர்கள் உபாஸித்து தத்வஞானிகளாய் உலகெங்கும் ஸஞ்சரித்து வரும்போது, வைகுண்டத்திலுள்ள ஜய விஜயர்களெனும் த்வாரபாலகர்களின் பிரம்பால் முதுகில் அடிபடுதற்கு இடமாக வாழ்நாட்களை விரும்பி இருப்பார்களா? வஸிஷ்டாதியர்களுக்கு புத்ர சோகாதிகளால் துன்புறுதலுக்கு இடமாகிய வாழ்நாளில் விருப்பம் ஏற்பட்டிருக்குமா? பதிவிரதைகளில் உத்தமி யாகிய இந்திராணியை நகுஷன் துராகிருதமாய் விரும்பிய ஸமயத்தில் கதறிக் கதறிக் கலங்கி ஸஹிக்க முடியாத சோகத்தை அடைவதற்கு ஹேதுவாக, பிரம்ம ஹத்தியால் பிடிக்கப்பெற்று உருவமிழந்து எங்கேயோ ஓரிடத்தில் உள்ள தாமரை நூலுக்குள் அடங்கி வருத்தமுறும்படி நேர்ந்த வாழ்நாளை இந்திரன் தனக்கு விரும்பினுன் என்பது பொருந்துமா? இனி மனிதர்களின் வாழ்நாளைக் கவனிப்போம். க்ஷணம் பாலகனுகவும், க்ஷணப்போது யுவர்வாகவும், ஓர் க்ஷணம் தனிகனுயும், ஓர் க்ஷணம்

தரித்திரனுகவும், ஓர் க்ஷணம் ஆரோக்யமுடையவனுகவும், ஓர் க்ஷணம் வியாதி யுடையோனுகவும், அவ்வாறே ஜரையால் பீடிக்கப்பட்டு துன்புற்று அறிவிழந்து மரித்தலுக்கு இடமாகிய வாழ்நாள் மனிதர்களாகிய நமக்கு நமது விருப்பத்தினுலா நேர்ந்திருக்கின்றது? இல்லவே யில்லை. உலகிலுள்ள எண்ணிறந்த பிராணிகளுள் ஒன்றுக்காவது தன்னிஷ்டப்படி வாழ்நாள் கழிக்கப்படுவதில்லை என்பதே உண்மை.

## ஜீவர்களுக்கு மரணமும் தம்மிஷ்டப்படி யல்ல

மரணம் நேருதலும் நம்மிஷ்டப்படி யல்ல. உலகிலுள்ள எந்தப் பிராணிக்காவது "நான் உங்கிடம் வரலாமா? உனக்கு அது இஷ்டமா," எனக் கேட்டுக்கொண்டு அவ்வதன் இஷ்டப்படிக்கு மரணம் நேருகின்றதில்லை. நமக்கு இஷ்டமிராம லிருக்கும் போதே மரணம் திடீரென நேருகிறது. இவ்விதம் ஜீவாத்மாக்களுக்குப் பிறவியாவது, வாழ்நாள் கழித்தலாகிய ஸ்திதியாவது,மரணமாவது அவரவரிஷ்டப்படிநேருகின்றதில்லை எனின், பின்னை யாருடைய இஷ்டப்படி நேருகின்றதெனக் கூறலாம் என்பதை ஆலோசிப்போம். எவரிஷ்டப்படியும் நேருகின்றதில்லை. எதோ தற்செயலாய் நேருகின்றதெனக் கூறலாமே எனின் அது பொருந்தாது. அதாவது சேதநனுடைய அறிவுக்கு விஷயமாகாமல் ஒரு காரியமும் நேருகின்றதில்லை. தற்செயலென்பது சேதனமல்லவாதலால் அறிவுடையதான ஓர் காரணப் பொருளிருந்தே யாகவேண்டும் என நிச்சயிக்கப்படுகின்றது.

இனி அவரவர்களின் பூர்வகர்மாக்களின் அநுஸாரமாக அவரவர்களுக்குப் பிறவி மரணங்கள் நேருகின்றன எனக் கூறக்கூடாதோ எனின் ஸரி, அதை நாம் மறுக்கவில்லை. ஆனுல் கர்மாமட்டும் அதற்கும் போதுமென்பதல்ல. அவரவரின் கர்மாவை அறிந்துகொண்டு அதற்கேற்ப பிறப்பிறப்புகளை விதிப்பவனுகிய ஓர் பேரறிவாளன் இருந்தே யாகவேண்டுமென்பதே யாமிங்கு கூறவந்த விஷயம். அதாவது, கர்மா என்பது தொழில் மாத்திரமே ஆகையால் அது அறிவுப்பொருளல்லாத அசேதனமே. அசேதனமாவது இந்தக் கார்யத்திற்கு இது பயன் என அறிந்துகொள்வதற்கு இயலாதது என்பதாம். கர்மாவுக்குத் தக்கபடி இன்பதுன்பங்கள் ஏற்படுகின்றன என்பது நமக்கு ஸம்மதமே. ஆனுல் கர்மா மாத்திரமே அதற்குப் போதும் என்பது ஒவ்வாது. கூலிக்காரன் செய்யும் வேலையே அதன் பயனைக் கொடுத்துவிடுகின்றதென்பது பொருந்துமா! வேலையை அறிவோனுகிய, சேதனன எஜமானனேயன்றே வேலைக்குத்தக்க கூலியைத் தருவதைக் காண்கின்றேம். படிக்கும் பையன்களெழுதிய எழுத்துக்களே பரீக்ஷைதேறிய தென்பதாக

வாவது தவறிய தென்பதாகவாவது சொல்லுமா? பையன்களது விடை களை யறிந்த பரிக்ஷாதிபதிகளன்றோ தேறியதென்றாவது தவறியதென் றாவது சொல்லுகின்றனர். அதுபோல ஸகல ஜீவர்களின் கர்மாக்களை யும் அவைகளுக்குத் தக்க பயன்களையும் அறிந்துகொண்டும், இந்த கர் மாவின் பயனை இந்த தேசத்தில் இந்த ஸமயத்தில் இவ்வாறு அனுப விக்க வேண்டுமெனக் கட்டளையை விதிக்கின்றவனும், அவ்விதியால் வரும் துன்பத்தை மீறிவிட வேண்டுமெனும் எண்ணத்தோடு செய்யும் மாந்தர்களின் முயற்சிகளை வீணாகச் செய்துவிடும் வல்லமை பொருந்தி யவனுமான ஓர் பேரறிவாளன் கர்மாவுக்குத் தக்கபயனைத் தருவோனா யிருக்கவேண்டும் என்று நிச்சயிக்கத் தக்கதாகின்றது.

## ஸர்வக்ஞத்வம்

கூலிக்காரனுடைய வேலைக்குத் தக்க ஸரியான கூலியைத் தரும் யஜமானனால் அவனது வேலை நன்றாய்க் கவனிக்கப்பட்டிருப்பது போலவே ஸகல ஜீவர்களுக்கும் கர்ம பலத்தைத் தருவோனாகிய ஈச்வர னால் ஸகல ஜீவர்களின் கர்மாக்கள் ஸகலமும் அறியப்பட்டிருக்க வேண்டுமென்பதும் நிர்ணயம். ஜீவர்கள் மனவினாலும் வாக்கினாலும் தேஹத்தாலும் பாப புண்ணியங்களைச் செய்கின்றனர். ஆகையால் அம் மூவ்வகைச் செயல்களையும் ஈஸ்வரன் அறிந்துகொண்டிருப்பவன் என் பது மறிக. ஒரு ஜீவனுடைய கர்மாவை மற்றோர் ஜீவனுடைய தெனத் தவறுதலாக எண்ணினால் கர்மபயனைத்தருவதும் தவறுதலாக ஏற்படும். ஆகையால் அவரவர் கர்மாவை தனித்தனியாகவும் மிகவும் ஜாக்ரதை யாகவும் கவனித்துக்கொண்டு அந்தந்த கர்மாவுக்குத் தக்கபடி பயனைத் தருவோன் என்பதும் விளக்கமாகின்றது. பாபகர்மங்களின் பயனாகத் துக்கம் வரும்போது ஜீவாத்மாக்கள் தங்களுக்கு அத்துக்கம் வாராமலிருப்ப தற்காக முயற்சிகளைச் செய்வார்கள். அந்த முயற்சிகளையும் ஈச்வரன் வீணாக்குவோனாக இராவிடில் கர்மபல தாதாவாக இருக்கமுடியாது. ஆகையால் ஈச்வரன் ஜீவர்கள் செய்யும் அரும்பெரும் பிரயத்தினங்களை யும் வீணாக்கும் ஆணையை யுடையவன் என்பதும் நிச்சயமாகின்றது. புண்ணியம் செய்வோர்களிடம் பிரீதியும் பாபம் செய்வோர்களிடம் கோபமு முண்டாவது உலகில் இயல்பு. காமக்குரோதங்க ளேற்படும் போது உள்ளது உள்ளபடி விளங்காது. ஆதலால் ஈச்வரன் காமக்ரோ தங்கள் சிறிதும் இராதவன் என்பதும் அறியப்படுகின்றது. காமக்ரோ தங்கள் சிறிது மிராமல் ஸகல ஜீவர்களின் கர்மாக்களையும் அறிந்து கொண்டு அவர்களது முயற்சிகளையும் வீணாக்கும் செயலை உடையவனை அஸங்கன் என்பதாம். ஈச்வரனுடைய இப்படிப்பட்ட அஸங்கத் தன்

ண்மையயுங் அறிவின் வல்லமையையும் நாம் சற்று ஆழ்ந்து யோசித்துப் பார்ப்போமாயின் இவன் ஆச்சர்யமாகவும் ஒப்புயர் விராததுமாகிய பேரறிவோடு கூடியவன் என்பதும் வியக்தமாகின்றது. இப்படிப்பட்ட ஆச்சரியமான அறிவு வல்லமை பொருந்தியவனை ஸர்வக்ஞன் எனும் சொல்லால் வழங்குவதே தகும். ஆதலால் ஈச்வரன் ஸர்வக்ஞன் என சாஸ்திரம் வழங்குகின்றது. ஸர்வக்ஞன் எனின் எல்லா மறிவோன் என்பது பொருள். இவ்வுண்மையையே,

"யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப: தஸ்மாதே தத்ப்ரஹ்ம நாம ரூபமந்நஞ்ச ஜாயதே".

"யாதொரு இறைவன் எல்லா மறிவோனு யிருத்தலால் ஸர்வக்ஞன் எனப்படுகின்றானோ எவனது ஆலோசனை ஞானமயமோ அவனையே ஹேதுவாய்க் கொண்டு இந்த நாமரூபபோக்கியங்க ளடங்கிய ஜகம் உண்டாகின்றது" என்பது முதலிய முண்டகாதி யுபநிஷத் வாக்கியங்களும்,

"வேதாஹம் ஸமதீதாநி வர்த்தமாநாநி சார்ஜுந
பவிஷ்யாணி ச பூதாநி மாம் து வேத ந கஸ்சந".

"ஏ அர்ஜுனா! நான் இதற்குமுன் நடந்தவைகளையும் (பகவத்கீதை ஏழாம்-26) இப்போது நடக்கின்றவைகளையும் இனி நடப்பவைகளையும் நன்கறிவோன். இப்படிப்பட்ட என்னை யாரும் அறிகின்றிலர்" என்பது முதலிய கீதா ச்லோகங்களும் உபதேசிக்கின்றன. இதனால் ஈச்வரன் ஸர்வக்ஞன் என்பது நிரூபிக்கப்பட்டது.

## நித்யத்ருப்தத்வம்

இனி இவன் நித்திய த்ருப்தன் என்பது மறிக. அதாவது இங்ஙனம் பிரபஞ்சத்திலுள்ள ஸகல ஜீவர்களுக்கும் அவரவர் பூர்வ வினைக்குத் தக்கபயனை அளித்துக்கொண்டிருத்தல் என்பது எவ்வளவு காலத்திற்கு முன்னர் ஏற்பட்டது? அது இன்னம் எவ்வளவு காலம் நடைபெறும்? எனின், இதற்கு ஆதியுமில்லை அந்தமுமில்லை யென் றறிக. ஆதியந்தமில்லாமல் இடையிலும் ஓர் க்ஷணப்போதும் ஓய்வொழிவின்றி இப்படிப்பட்ட செயலைச் செய்துகொண் டிருக்கும் இவ்விறைவனை எப்படிப்பட்டவனு யிருக்க வேண்டுமெனின், துக்க ரோகாதிகள் சிறிதுமின்றி எப்போதும் ஓர் பெரிய திருப்தியையுடையவனாகவே யிருக்கவேண்டும் என்றறியப்படுகின்றது. ஏனெனின் உலகில் அரிய தான ஓர் வேலையைச் செய்துகொண்டிருக்கும் மனிதனுக்கு மனவினில்

யாதேனும் ஓர் வியாகூலசிந்தை ஏற்படுமாயின் அவனால் செய்யப்படும் வேலை ஸரிவர நடைபெறாமல் தாறுமாறாகக் கெட்டுக் குற்றமுற்றதா கின்ற தென்பது பிரத்தியக்ஷமாய் நம்மால் காணப்படுகின்றது. இதற்கே இப்படியானால் மனதினாலும் எண்ணுதற்கியலாததாகிய ஸகல ஜீவர் களுக்கும் கர்மபல தாதாவாக இருத்தல் எனும் செய்கையைச் சிறிதும் ஓய்வொழிவின்றி நிர்வஹித்துக்கொண் டிருப்பவனாகிய இறைவனுக்கு உள்ளத்தில் ஒப்பில்லாத அரும்பெருந் திருப்தி யிருக்கவேண்டு மென் பதில் சிறிதும் ஸந்தேஹிக்க இடமில்லை. ஆதலால் கர்மபலதாதாவாகிய இவ்விறைவன் [1]நித்திய திருப்தியுடையோன் 'நித்யத்ருப்த:' என்ப தும் யுக்திவாயிலாகவே நிர்ணயிக்கப்படுகின்றது.

## அனாதி போதத்வம்

இவ்விறைவன் அனாதிபோதன் என்பது மறிக. அதாவது க்ஷணிகமாகிய பொருளை யனுபவிப்பவனுக்கு க்ஷணிகமான திருப்தியும், நித்தியமான பொருளை யனுபவிப்பவனுக்கு நித்தியமான திருப்தியும் ஏற்படும் என்பதே உசிதம். இதுமாத்திர மென்பதல்ல. ஸுகத்திற்கு ஸாதனமாயுள்ள பொருளை யனுபவித்தலால் திருப்தியும் துக்கத்திற்கு ஸாதனமான பொருளை யனுபவித்தலால் துக்கமுமே ஏற்படும் என்பதும் நிர்ணயம். ஆதலால் நித்தியமான திருப்தியோடிருப்பவனால் நித்ய மான இன்பப் பொருளே அனுபவிக்கப் பட்டுக்கொண் டிருக்கவேண்டு மென்பது நிச்சயம். தன்னா லறியப்பட்டிராத பொருளைத் தான் அனுப விக்க இயலாததலால் அப்படிப்பட்ட நித்திய ஸுகப் பொருளை யனுபவிக்கும் அவ்விறைவனால் அப்பொருள் அறியப்பட்டிருக்க வேண்டுமென்றே ஏற்படுகின்றது. அப்படிப்பட்ட நித்திய ஸுகவஸ்து அவ்விறைவனால் எந்தஸமயம் முதல் அறியப்பட்டது எனின், அது கர்மபலதாத்ருத்துவம் போலவே அனாதியாகவே உள்ளது. ஆதலால் அவன் அனாதிபோதன் என்பதே தகும். இவ்விதம் கர்ம பல தாதா வைப்பற்றி விசாரித்துப் பார்க்கின் யுக்திவாயிலாகவே அவன் (அநாதி போத:) அனாதிபோதன் என்பதும் சித்திக்கின்றது.

## ஸ்வதந்த்ரத்வம்

இனி இவன் ஸ்வதந்திரன் என்பது மறிக. அதாவது ஸகல ஜீவர்களுக்கும் கர்ம பல தாதாவா யிருப்பவனை எவனுக்காவது பர தந்திரப்பட்டிருக்கின்றா னென்பது பொருந்தாது. அன்றியும் எவனுக் காவது பாரதந்திரப்பட்டு அடிமையாயுள்ளவனுக்கு நித்தியமான திருப் திக்கு இடமில்லை. ஆதலால் அவன் ஸ்வதந்திரனாகவே இருக்கவேண்டு

மென்பதும் ஊஹிக்கப்படுகின்றது. இந்த நியாயத்தினால், ஸர்வஞ்ஞனும் நித்தியதிருப்தனும் அனுதிபோதனுமா யுள்ளவனை ஸ்வதந்திரனென்றும் நிர்ணயிக்கத் தகும். (ஸ்வதந்த்ரஃ) "தன்னிச்சைப்படி நடப்பவன் பிறனுக்கு அடங்கியவனல்லன்" என்பது பொருள்.

## அலுப்த சக்தித்வம்

இவன் அலுப்தசக்தி யுடையோன் என்பதும் அறியத்தக்கது. அதாவது ஒருவன் ஓர் வேலையைச் சிலகாலம் இடைவிடாது செய்வானாயின் அவனது சக்தி குன்றுகின்றதென்பது உலகில் பிரத்தியக்ஷம். அனுதியாகவே சிறிதும் ஓய்வொழிவின்றி ஸகல ஜீவர்களின் செயல்களையும் அறிந்துகொண்டு அவைகளுக்குத் தக்க பயனையும் தந்துகொண்டிருப்பவனது சக்தியானது ஓர் காலத்தும் சிறிதும் குன்றாததாகவே யிருக்கவேண்டுமென்பது நிர்ணயம். குன்றாதசக்தி யுடையோனை (அலுப்தஶக்திஃ) அலுப்த சக்தியுடையோன் என்று சொல்லுவதாம்.

## அனந்த சக்தத்வம்

இவ்விறைவன் அனந்த சக்தனாகவு மிருப்பவன் என்பதாம். அதாவது, உலகில் ஓரோர் மனிதனுக்கு ஓரோர் செய்கையிலேயே மிகவும் திறமை யிருக்கக்கூடுமென்றி பல செயல்களில் ஸமானமான திறமையுள்ள தென்பது பொருந்தாது. சிலர் பலவகையான செயல்களில் ஸமானமான சக்தியுள்ளவராக ஸாமான்னியமாய் நம்மால் எண்ணப்படுவோ ராயினும் நன்றாய்க் கவனிப்போமாயின் அவர்களிடம் உள்ள பலவகைச் சக்திகளில் மிகவும் தாரதம்மியம் காணப்படும் என்பது நிச்சயம். மனஸாலும் சிந்திக்கவொண்ணாத அற்புதமான பற்பல செயல்களைத் தாரதம்மியமின்றிச் செய்யும் ஆற்றலுடையவனை அநந்தங்களான சக்திகளை யுடையோன் என்பதே தகும்.

ஆதலால் ஸகலப் பிரபஞ்சங்களின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், ஸம்ஹாரம், திரோதானம், அனுக்கிரஹம் எனும் பஞ்சகிருத்தியங்களையும் நடாத்துவோனும், ஸர்வக்ஞனும், நித்திய திருப்தனும், அனுதிபோதனும், ஸ்வதந்திரனும், அலுப்த சக்தனுமாயுள்ள இவ்விறைவனை அநந்தசக்தன் (அநந்தஶக்திஃ) என்றும் சொல்லப்படுகின்றது. இவ்வுண்மை

"பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே"

"இவனது ஸர்வோத்கிருஷ்டமாயுள்ள சக்தியானது பலவாறுயுள்ளது." என்பது முதலிய சுவேதாச்வதராதி ச்ருதிகளாலும்,

“𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌤𑌾 𑌤𑍃𑌪𑍍𑌤𑌿𑌰𑌨𑌾𑌦𑌿𑌬𑍋𑌧𑌃 𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌲𑍁𑌪𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌃 । 𑌅𑌨𑌨𑍍𑌤𑌶𑌕𑍍𑌤𑌿𑌶𑍍𑌚 𑌵𑌿𑌭𑍋𑌰𑍍𑌵𑌿𑌧𑌿𑌜𑍍𑌞𑌾𑌃 𑌷𑌡𑌾𑌹𑍁𑌰𑌙𑍍𑌗𑌾𑌨𑌿 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌯”.

ஸர்வஞ்ஞத்துவம், திருப்தி, அனாதிபோதம், ஸ்வதந்திரத்துவம், அலுப்தசக்தி, அநந்தசக்தி எனும் இவ்வாறும் வியாபகனாகிய இறைவனுக்கு அங்கங்களாம்.”

“𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂 𑌤𑌪𑌃 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃।”
𑌸𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌸𑌮𑍍𑌬𑍋𑌧𑍋 𑌹𑍍𑌯𑌧𑌿𑌷𑍍𑌠𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌚 ॥
𑌅𑌵𑍍𑌯𑌯𑌾𑌨𑌿 𑌦𑌶𑍈𑌤𑌾𑌨𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑌿 𑌶𑌙𑍍𑌕𑌰𑍇 ॥

“ஞானம், வைராக்யம், ஈச்வரத்துவம், தபஸ், ஸத்தியம், க்ஷமை, தரித்தல், ஸ்ருஷ்டித்தல், அந்தர்யாமியாயிருத்தல், அதிஷ்டாதாவாயிருத்தல், இவை பத்தும் இறைவனிடம் நித்தியமாயிருக்கின்றன.” எனும் தூர்வாஸ வியாஸாதி வசனங்களாலும் இவ்வுண்மை யறியலாம்.

பரம்பொருளின் குணங்களைப் பற்றிய இவ்வாராய்ச்சியினால் இவ்விஷயம் ஸங்கிரஹமாக அறிந்துகொள்ள வேண்டியது. ஆரம்பத்தில் ஈச்வரன் ஸர்வ வல்லமையும் ஸர்வக்ஞானமும் பொருந்திய வஸ்துவென லக்ஷணம் கூறப்பட்டது. பிறகு ஸர்வ வல்லமை யென்பது எவ்வாறெனெ விசாரிக்க ஆரம்பித்து விபரமாகச் செய்த விசாரணையால் ப்ரம்மாண்டத்தில் அடங்கியுள்ள சூர்ய சந்திர கிரஹ நக்ஷத்ராதிகளுக்கும் அக்னீந்திர வாயுவருண ம்ருத்யுவாதிகளான மற்றுமுள்ள ஆதிகாரிகர்களான தேவர்களுக்கும் அவரவர் காரியங்களிலுள்ள ஆற்றல்களெல்லாம் இறைவனுடைய சக்தியாலேயே என்பதும் அப்படியே தேஹத்திற்குள்ளிருப்பவையாகிய இந்திரிய ப்ராண மனோபுத்திகளுக்கும் இறைவனுடைய சக்தியே போகமாயுள்ள தென்பதும் நிரூபிக்கப்பட்டது.

## ஸர்வக்ஞன், ஸர்வசக்தன் எனும் இருவகை தன்மைகளில் சக்திபேதங்கள் எல்லாம் அடங்கும்

பிறகு எல்லாமறிவோன் எனும் விஷயத்தைப் பற்றிச் செய்த விசாரணையால் இறைவன் ஸர்வக்ஞன் நித்யதிருப்தன் அனாதிபோதன் ஸ்வதந்திரன் அலுப்தசக்தன் அனந்த சக்தனெனக் கூறி அவனது ஞானமயமாகிய ஆற்றல் ஆறு வகையாக உலகில் செய்துகொண்டிருக்கும் கார்யங்களும் யாவை என்வும் நிரூபிக்கப்பட்டன.

ஆகாசமானது தன்னிடமுள்ள சப்தமெனும் குணத்தோடு வாயு முதலிய ஸகல வஸ்துக்களிலும் வியாபித்துக்கொண் டிருப்பதுபோலவும் முரபா போடப்பட் டிருப்பவைகளான இஞ்சி நெல்லிக்காய் முதலியவைகளில் தேன் தனது மதுரச் சுவையோடு கூட வியாபித்துக்கொண் டிருப்பதுபோலவும் இறைவன் தன்னிடம் நித்தியமாயுள்ள ஸர்வக்ஞத்துவம் நித்திய த்ருப்தத்வம் அனாதிபோதத்வம் ஸ்வதந்த்ரத்வம் அலுப்த சக்தத்வம் அனந்த சக்தத்வம் என ஆறு வகையாயுள்ள அற்புத ஆற்றல்களையுடைய பராசக்தியோடு கூட ஸகல சராசரங்களையும் வியாபித்துக்கொண்டு ஜ்வலிக்கின்ற பேரானந்த வஸ்துவென நிர்ணயிக்கப் பட்ட தறிக. இவ்வாறுள்ள பரசிவ தத்வரஹஸ்யமானது,

"தே த்யாநயோகாநுகதா அபஶ்யந் தேவாத்மஶக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்। பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச"॥

"அவர்கள் த்யான யோகத்தில் பலகால மிருந்தவர்களாய்க் கொண்டு தனது குணங்களால் வெளிப்படையாக விளங்காமல் ரஹஸ்யமாயுள்ள இறைவனது ஆத்ம சக்தியை அறிந்துகொண்டனர். இவனது பராசக்தியானது தன்னுடைய ஆற்றல்களால் பலவாறாகக் காணப்படுமெனவும், இறைவனிடம் அவினாபாவ ஸம்பந்தத்தோடுள்ள ஞானம், பலம், க்ரியா என உபதேச பரம்பரையில் கேழ்கப்படுகின்றது" என்பது முதலிய ச்வேதாச்வதராதியுபநிஷத்வாக்கியங்களாலும் அறியப்படுகிறது.

ஜீவாத்மாக்கள் தேஹம், இந்திரியம், ப்ராணன், மனம், புத்தி எனும் ஸாதனங்களைக்கொண்டு கிரியைகளைச் செய்வதுபோல ஈச்வரன் இங்கு ஆறுவகையாய்க் கூறப்பட்டுள்ள அரூபமாகிய மஹா மாயாசக்தி மாத்திரத்தினாலேயே ஜெகத்ஸ்ருஷ்டி, ஸ்திதி லயாதி ஸகல கார்யங்களையும் செய்கின்றான். இவனுக்கு தேஹாதிகள் இராமையால் பாப புண்யங்களுக் கிடமில்லை. ஜராமரணங்களுக்கும் இடமில்லை. நித்ய திருப்தனாதலால் இவனுக்குச் சோகம் சிறிதுமில்லை. ஸ்தூல தேஹமில்லாமல் மஹா மாயையே தேஹமாய்க் கொண்டுள்ளவனாதலால் பசி தாகாதிகளுமில்லை. இவ்விறைவன் அனாதி முக்தனாதலால் இவனது ஸங்கல்பம் உடனே ஸபலமாகும். இவ்வுண்மையை,

"ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ விஜிகத்ஸோ அபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:"

என்பது முதலிய வாக்கியங்களால் சாந்தோக்யம் தஹர வித்யா ப்ரகரணத்தில் சொல்லப்பட்டுள்ளது. ஈஸ்வரனை ஸருணனென்பது இவ்வாறு

வகைக் குணங்களோடு கூடியவனா யிருத்தலினாலேயே. ஸகுணனென்பதின் குணங்களோடு கூடியவனென்பதே பொருள். எனும் இவ்விஷயமும் ஏற்கெனவே சொல்லப்பட்டதாயினும் இச்சமயம் ஞாபகப்படுத்திக் கொள்க.

மஹாமாயை, பராசக்தி முதலிய சொற்களால் அறிந்துகொள்ள வேண்டிய தத்வமானது இவ்வாறுவகை சக்தியே. ஈஸ்வர ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்துகொண்டு அதனிலேயே சித்தத்தைச் செலுத்திக் கொண்டு ஆனந்தானுபவ நிலையில் நிற்றலாகிய ராஜயோக மென்பதற்கு மூலம் இவ்வாறுவகை சக்திகளை அறிந்துகொள்வதே. ரிஷிகள், முனிவர், தேவர், முதலியவர்களும் சங்கராசார்யர், பத்மபாதாள் முதலிய ஆசிரிய பரம்பரைகளும் இங்கு கூறிய ஆறு மஹா சக்திகளை உபதேச பரம்பரையாய் அறிந்துகொண்டவர்களே. இவ்வுபதேச உண்மையை துர்வாஸஸ் முதலிய மஹாமுனிவர்க ளியற்றியுள்ள பரசம்பு மஹிம ஸ்துதி முதலியவைகளில் காணலாம்.

𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌤𑍃𑌪𑍍𑌤𑌃 𑌸𑍍𑌵𑌯𑌮𑌥 𑌪𑌰𑌮𑍋𑌽𑌨𑌾𑌦𑌿𑌬𑍋
𑌧𑌃 𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌲𑍁𑌪𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌮𑌹𑌿𑌮𑌾 𑌨𑌨𑍍𑌤
𑌜𑍍𑌞𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌮𑍇𑌶𑍇 𑌷𑌡𑌙𑍍𑌗𑍈𑌃 | 𑌷𑌡𑍍𑌭𑌿𑌰𑍍𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 𑌹𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌯𑍇𑌦𑌿𑌹 𑌯𑌦𑌿 𑌶𑌿𑌵 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇
𑌦𑍇𑌶𑌿𑌕𑍋𑌕𑍍𑌤𑍍𑌯𑌾.

ஓ இறைவனே! நீ ஸர்வக்ஞன் நித்யதிருப்தன் அனாதிபோதன் ஸ்வதந்த்ரன், நித்தியாலுப்த சக்தன், அனந்தன் எனும் இவ்வாறு அங்கங்களையுடையோனாகையால் ஸத்குருவின் உபதேசத்தினால் இவ்வாறு வகை சக்திகளையும் அறிந்துகொண்டவன் எவனோ அவனுக்கே உமது ரூபம் அறியப்பட்டிருக்கும்.

𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰 𑌨𑌰𑌨𑌾𑌗𑌜𑌾𑌤𑌾𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌜𑍀𑌵𑌾
𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑍍𑌵 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑍍𑌡𑌮𑍇𑌵𑌂 𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨 𑌭𑌵𑌨𑌵𑍍𑌯𑌾
𑌪𑌕𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌤𑌦𑍇𑌵𑌂 | 𑌤𑌤𑌾𑌵𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌤𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑌿𑌤 𑌇𑌹 𑌭𑌗𑌵
𑌨𑍍𑌨𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑍀𑌨𑌂 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌷𑌡𑍍𑌭𑌿𑌃 𑌸𑌾𑌂𑌵𑌰𑌮𑌿𑌵 𑌤𑌦𑌾𑌤𑍍𑌮𑌾
𑌤𑌮𑍇𑌤𑍍𑌯 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍.

ஓ பரமசிவனே! ஸகல தேவாஸுர நரநாகர்களும் மற்றுமுள்ள ஸகல ஜீவர்களும் க்ஷேத்ரக்ஞர்க ளெனப்படும். கீழ்மேல் நடுவிலுள்ள ஸகல புவனங்களாக வியாபித்திருக்கும் ப்ரம்மாண்டங்கள் க்ஷேத்ர மெனப்படும். இவ் விருவகைத் தத்துவங்களிலும் அந்தர்யாமியாய் வியாபகமா யிருந்து

கொண்டு இறுதியில் ஸகல கார்யங்களாகிய அநந்தத்தைப் புசித்து உபஸம் ஹரிக்கும் மஹாக்ஞாநியாயுள்ள உம்மை இவ்வறு மஹா சக்திகளால் அறிந்துகொண்ட ஞானவர்யன் மஹா ம்ருத்யுவைத் தாண்டுகின்றான்.

ஸவெடுஶ ஶ்ரீவ‌ரெஶ த்ரிஹுவநஹவநவ்யாத்ய ஶக்த யஸ்ஸ நாநாவெஷாஃ வாஷா ஙிஜயிவிஹவா ஶாத்ரகாந்தா ஷகாந்தாஃ । விஜாதாஃ ஸ்ஜயுஷ்ஸெயதி ஶிவகுருணா விஶ்வஶ்வரூவஞ்ஞம் ஸ்வாத்மஜ்யோதிவிடுஶீநம் விஷயதிவிஷ வொயொமிநலெஸ்ஸவகீக்திஃ

ஓ ஸர்வேச்வரா! ஸ்ரீ, புரேச! மூவுலகிலுமுள்ள ஸகல சராசரங்களிலும் கண்டுகொள்ளக் கூடியவைகளான உமது சக்திகள் எல்லையற்ற மஹிமை யுடையவைகளாய் பராமுதலிய பலவாறு யறிந்துகொள்ளக் கூடியவைகளாய் நாதர்களோடு கூடிய மாத்ருகைகளீருக விளங்குகின்றன. அவ்வாறுள்ள இவ்வறு மஹாசக்திகளை சிவகுருவின் உபதேசத்தினுல் இச்சரீரத்தினுள் அறிவார்களாயின், அவர்கள் ஸகல த்ருச்ய ப்ரபஞ்சங்களையும் ஸ்வாத்ம ஜ்யோதியில் லயமடையச் செய்து கொள்வார். ஞானியாகிய யோகிக்கு அதுவே முக்தி.

விஷெஷாக்ஷளஶிகெ ஸ்ஜிநு நவவிவஶவரெ வஞ்சு ஹஶதெந்திஶாவெ வதஃஸெஸ்ஸணெ யஷாணெ ஶிவ குருவவஶெந ரக்ஷா விஜாயஸெவெசஃ । கெநாவ்யந்நாவஸீ த்வஹுதீதி ஙிரவஶோநா கொஶாத்ரஶாஶிஸம் ஷொஶாஹிந் தெதிஃ வாஶிவ ஸவெரயொ விஶ்வரூவகஷியாக.

ஓ பரமசிவமே! ஆறு கோசங்களை யுடையதும் ஒன்பது துவாரங்களை யுடையதும் புருஷன், ஸ்த்ரீ, அலி ஆகிய மூன்று விதங்களில் அடங்கியதும் ஐம்பூத இந்திரியங்களோடு கூடியதுமாகிய இந்தச் சரீரத்தினில் அன்னமய ப்ராணமய மனேமய விக்ஞானமய ஆனந்தமயங்களெனும் ஐந்து கோசங்களிலும் வியாபித்துள்ளவனும் ஸர்வக்ஞத்துவாதி ஆறு சக்திகளால் பகுத்தறியக் கூடியவனுமாகிய நீ எவனுலாவது ஸத்குரு வசனங்களால் அறிந்துகொள்ளப் படுவாயாயின் அவ்வாறறிந்துகொண்டவன் விஸ்வரூபத்துவத்தை அடைவான்,

"யாஷெஷா வஞ்சுயாவஶகபிதவிஹவா ஶ்ரீவராஷெ வஶம்ஹொ வெஸவஶீவஸுஹீதி ஶ்ரீதிஹிரஹிஹிதாவகர ராஜாவஸநஸா.

"ஓ சம்போ! இறைவனே! ஸர்வக்ஞத்வாதி ஆறுவகையாகவும் ஸ்ருஷ்டி ஸ்திதிலயதிரோதானுநுக்ரஹாதி க்ருத்ய காரிணியாயிருத்தலால் ஐந்து வகையாகவும் உள்ள மஹாமாயா, பரா என பிரஸித்தமாயுள்ள உமது சக்தி என்பது யாதோ அந்த தத்வமே த்ரிபுரஸுந்தரி எனும் நாமாவை யுடையவளும் ஸ்ரீ சக்ரமாகிய ஆஸனத்தில் விஜயம் செய்துள்ளவளுமாகிய ஜகதீஸ்வரீ என ச்ருதிகள் கூறுகின்றன.

என்பது முதலிய அருமையாகிய ச்லோகங்களால் இந்த ரஹஸ்யம் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. இறைவனுடைய குணங்களாயுள்ள இந்த ஸர்வக்ஞத்வாதி சக்திகளை இச்சாசக்தி, க்ரியாசக்தி, ஞானசக்தி எனவும் உல்லாஸசக்தி, நிரோதசக்தி எனவும் பற்பலவாறாகச் சொல்லி நம் சாஸ்திரங்கள் உபாஸனு ரஹஸ்யங்களை உபதேசிக்கின்றன. யோக வாஸிஷ்டமெனும் மிகவும் பெருமை பொருந்திய க்ரந்தத்தில் நிர்வாண ப்ரகாணத்தில் தேவபூஜாத்யாய மென ஓர் அரிய பாகம் உள்ளது. அதாவது கைலாஸ மந்திரத்தில் வஸிஷ்ட மஹரிஷியானவர் பூர்வம் ஓர் காலத்தில் மிகவும் உக்ரமாகச் செய்த தபஸ்ஸினுல் பிரஸந்நரான பரமேச்வரன் அருளிய உபாஸனு ரஹஸ்ய உபதேச விஷயங்கள் அங்கு சொல்லப்பட்டிருக்கின்றன.

## ஞானவாஸிஷ்டம் தேவபூஜா சரிதம்

"அஜ்ஞாத ஶிவதத்த்வாநாம் ஆகாராத்³யர்ச்சநம் ஸ்ம்ருதம்
த்³ருஶ்யாதீதைவ [illegible] ஹ பாராவாரவிவர்ஜிதம்
ஸர்வத்ரா ஸம்ப⁴வ[illegible] [illegible] ச ஶிஷ்யதே
ஸர்வஶக்திமயோ ஹ்யாத்மா ஶக்தீ[illegible] தாண்ட³வை꞉
ஸம்ஸாரம் தந்நிவ்ருத்திம் ச ஸர்வமாஸாத்³ய [illegible]
ஜ்ஞாநஶக்தி꞉ க்ரியாஶக்தி꞉ கர்த்ருதாऽகர்த்ருதாபி ச
இத்யாதி³காநாம் ஶக்தீநாமந்தோ நாஸ்தி பராத்மந꞉".

"ஈஸ்வர ஸ்வரூபத்தை யறியாதவர்களுக்கு காசரணுதி அவயவங்களையுடைய வடிவத்தை அர்ச்சித்தல் சொல்லப்பட்டுளது. இறைவனுடைய ஸ்வரூபமானது ஞானவடிவமாகிய எல்லை யற்றுள்ள ஓர் பெரிய ஆகாசம் போன்றது. அந்த ஸ்வரூபம் மற்ற வஸ்து யாதுமின்றித் தனியாய் கல்பாந்தத்தில் எஞ்சுகின்றது. ஸர்வசக்திமயனுன அவ்விறைவன் தனது சக்தி மண்டல தாண்டவங்களால் ப்ரபஞ்சத்தைத் தோன்றவும் துலையவும் செய்கின்றனர். பரமாத்மாவான அவ்விறைவனிடமுள்ள ஞானசக்தி க்ரியாசக்தி கர்த்திருத்வசக்தி அகர்த்திருத்வசக்தி இவை

முதலிய சக்திகளுக்கு அந்தமில்லை. அவ்விறைவன் உல்லாஸ சக்தியால் ப்ரபஞ்சத்தைத் தோன்றவும் நிரோத சக்தியால் ஸகலத்தையும் துலையவும் செய்கின்றான்," என்பவை முதலிய ச்லோகங்களினால் அவ்விறைவனது சக்தி ஸ்வரூபமும்,

𑌹𑍃𑌤𑍍𑌕𑍋𑌶𑌕𑍋𑌣 𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍𑌤 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑍍𑌡𑍌𑌘 𑌸𑌹𑌸𑍍𑌰𑌕𑌂
𑌚𑌿𑌦𑌾𑌕𑌾𑌶 𑌸𑌾𑌵𑌕𑌾𑌶 𑌸𑍀𑌮𑌾𑌸𑍀𑌮 𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌂
𑌅𑌧𑌶𑍍𑌚𑍋𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌚 𑌦𑌿𑌕𑍍𑌷𑍁 𑌵𑌿𑌦𑌿𑌕𑍍𑌷𑍁 𑌚 𑌨𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑌂.

ஹ்ருதய கமலத்துள்ளடங்கி யொடுங்கிய ப்ரம்மாண்ட பரம்பரைகளையுடையதும் ஞானவடிவமான பரமாகாச எல்லையை யடைந்ததும் எல்லை கடந்துளதும், கீழ்ப்ரதேசத்திலும் மேல் பிரதேசத்திலும் நான்கு திசைகளிலும் அவாந்தரதிசைகளிலும் எங்கும் வியாபகமாயுள்ளதும் என்பவை முதலிய ச்லோகங்களினால் ஈஸ்வரனுடைய ஸ்வரூபத்தின் உண்மையும்,

𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌰𑌮𑍍𑌭𑌕𑌾𑌰𑌿𑌣𑍍𑌯𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌯𑍋 𑌜𑌗𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌰𑌜𑍍𑌜𑌵𑌃
𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌶𑍍𑌶𑌕𑍍𑌤𑌯𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌾𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑌗𑌾𑌃.

"பற்பலவாறான க்ரியைகளைச் செய்கின்றவையும் ஸகல ஜகங்களாகிய யந்திரங்களுக்குக் கயிறுகளுமாயுள்ள அவ்வீஸ்வர சக்திகள் சரீரத்தில் வியாபித்துள்ளன என்றறிய வேண்டியவையாம்." என்பவை முதலிய ச்லோகங்களினால் ப்ரம்மாண்டம் முதல் தேஹமீறாக எல்லாவிடங்களிலும் ஈஸ்வர சக்திகள் வியாபித்து நிற்றலும் நன்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. ஈச்வரனுடைய சக்திகள் எங்கும் வியாபித்துக்கொண்டிருக்கின்றன எனின் ஈஸ்வரனும் ஸர்வ வியாபகன் என்பது சொல்லாமலேயே ஸித்திக்கும். ஏனெனின் பராசக்திக்கு ஆதாரமாயிருந்துகொண்டு அந்த சக்தியாலேயே ஸகல பெருமைகளையுமுடைய சைதந்ய வஸ்துவே ஈஸ்வரன் என்பது சாஸ்திர ரஹஸ்யம்.

## பதஞ்ஜலி ஸூத்ரபாஷ்ய விமர்சம்

பதஞ்ஜலி சூத்ரபாஷ்யத்தில் வேதவியாஸரால் கூறப்பட்டிருக்கும் ஈச்வர குணங்களும் இவ்வறுவகை சக்திகளேயாகும். ஈச்வர குணங்களைப்பற்றி இதுவரையிலும் விசாரணை செய்ததில் அவன் ஜகத்கர்த்தா எனும் தன்மை அறியப்பட்டது. ஜகத்கர்த்திருத்வம் எனும் குணத்தை யாராய்ந்ததினின்றும் அவன் எல்லா மறிந்தவன் எல்லா வல்லமையும் பொருந்தியவன் என்பதாக ஏற்பட்டது. இவ்விரு

குணங்களையும் பற்றி ஆராய்ச்சி செய்ததினின்றும் அவனது சக்தி யானது ஸர்வக்ஞசக்தி நித்யத்ருப்திசக்தி அனுதிபோதசக்தி ஸ்வதந் திரசக்தி அலுப்தசக்தி அனந்தசக்தி என ஆறுவகையாய் விவேகித்துக் கொள்ளத்தக்க தென்பதும் அறியப்பட்டது. தவிரவும் அவன் எவ்விந் திரியங்களாலும் காணக்கூடாத அரூபன், மீறமுடியாத ஆணையோன், கர்மஸாக்ஷி, கர்மபலதாதா, ஞானவைராக்யாதி விசேஷங்களையுடை யோன், சரீரேந்திரியாதிக ளிராமலே பராசக்தி மாத்திரத்தால் ஸர்வ ஞான விசேஷங்களும் பொருந்தியவன் என்பதாகவும் ஏற்பட்டது. ஈச்வர குணங்களைப்பற்றிய இவ்வளவு பிரிவுகளும் விசேஷங்களும் ஸர்வக்ஞன் ஸர்வசக்தன் எனும் இவ்விரு சொற்களின் அர்த்தங்களை விபரமாக விசாரிக்கும்போது அறியப்படுகின்றமையால், குணங்களைப் பற்றிய இத்தனை விசேஷப் பிரிவுகளை மனவில் கருத்தாய் வைத்துக் கொண்டே ப்ரம்ம ஸூத்ரபாஷ்யத்தில் ஆசார்ய ஸ்வாமிகள் ஸர்வக்ஞன் ஸர்வசக்தன் எனும் இவ்விரு சொற்களையும் அடுத்தடுத்துப் பல இடங் களில் உதஹரித்திருக்கின்றனர்.

## ப்ரம்ம ஸூத்ரபாஷ்ய விமர்சம்

"ஆத்மா என்பது ஞானத்தினாலும், ஸத்தா ஸ்புரணத்தினால் வியாப்தி யினாலும், புசித்தலாகிய உபஸம்ஹாரத்தினாலும், மூன்று பரிச்சேத மின்மையாலும், ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தனுமாகிய பரமாத்மா" என ஐதரேய உபநிஷத் பாஷ்யாரம்பத்திலும்,

"... ஸர்வஜ்ஞாத் ஸர்வ-

ஶக்தே: காரணாத்3 ப4வதி தத்3 ப்3ரஹ்ம".

மனவினாலும் சிந்திக்க இயலாத ரசனையை யுடையதுமாகிய இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்கள் ஸர்வக்ஞனும் ஸர்வசக்தனுமான எந்தக் காரண வஸ்துவினு லேற்படுகின்றனவோ அது ப்ரம்மம் என ஜந்மாத்யதிகரண பாஷ்யத்திலும்,

"... நித்யம் ஸர்வஜ்ஞம்

ஸர்வஶக்தி ப்3ரஹ்மேதி".

இந்த மஹத்தான வஸ்துவுக்கு ஸர்வக்ஞத்துவமும் ஸர்வ சக்தத்வமும் இந்த ஜனிப்பு ஸ்திதி லயங்கள் மூலம் சாஸ்திரயோனித்வாதி காணத்திலும், ஒப்புயர்விராதவையாகும். என

“தத் ப்ரஹ்ம ஸர்வஜ்ஞம் ஸர்வசக்தி ஜகதுத்பத்தி ஸ்திதிலய காரணம் வேதாந்தசாஸ்த்ராதேவாவகம்யதே”.

“ஸர்வக்ஞமும் ஸர்வசக்தமும் ஜகதுத்பத்தியாதிகளுக்குக் காரணமுமாகிய அந்தப் பரம்பொருள் வேதாந்த சாஸ்திரத்தினலேயே அறியப் படுகின்றது” என ஸமந்வயாதி கரணத்திலும்,

“ஜந்மாத்யஸ்ய யத இத்யாரப்ய சாஸ்த்ரயோநித்வாத் இத்யந்தை: ஸூத்ரை: யாந்யுபநிஷத்வாக்யாநி வேதாந்தவாக்யாநி தேஷாம் ஸர்வஜ்ஞ: ஸர்வசக்திரீச்வரோ ஜகஜ்ஜந்மாதிகாரணமிதி தாத்பர்யம் ப்ரதிபாதகத்வம் ந்யாயபூர்வகம் ப்ரதிபாதிதம்”.

“ஜந்மாதி ஸூத்ரம் முதல் இந்த ஸூத்ரம் முடிய உள்ளவைகளால் பிரதிபாதிக்கப்பட்ட உபநிஷத் வாக்யங்களுக்கு ஸர்வக்ஞனும் ஸர்வ சக்தனுமாகிய ஈச்வரன் ஜகத்காரண னென்பதாகிய அர்த்தம் ந்யாய பூர்வமாக பிரதிபாதிக்கப்பட்டது” என ஈக்ஷத்யதிகரணத்திலும்,

“ஸர்வஜ்ஞம் ஸர்வசக்தி மஹாமாயம் ச ப்ரஹ்ம”.

“ஸர்வக்ஞமும் ஸர்வ சக்தமும் மஹா மாயையுடையதும் ப்ரம்மம்” என ஸர்வ தர்மோபபத்யதிகரணத்திலும், பின்னும் பல அதிகரணங்களிலும் இவ்வாறே சொல்லப்பட் டிருத்தலைக் காண்க முடிவாகிய ஒன்றை யறிக. அதாவது ஸர்வக்ஞன் ஸர்வசக்தன் எனும் இவ்விரண்டு சொற்களுக்கும் விபரமாகிய அர்த்த விசாரணையே இந்த பாகத்தில் இதுவரையிலும் செய்திருக்கும் ஆராய்ச்சி என்பதாகும்.

இனி ஸர்வக்ஞனும் ஸர்வசக்தனுமா யிருந்துகொண்டு ஸகல ஜகத் வியவஹாரங்களையும் நடாத்துவோனன ஈச்வரனுக்குத் துக்கம் சிறிதுமிராமல் பேரானந்தமே உளதென்பதே உண்மை யாகையால் இவனை ஆனந்த ஸ்வரூபன் என்பது மறியத்தக்கது. இவன் ஆனந்த ஸ்வரூபன் என்பது ஸுஷுப்தியவஸ்தையைப் பற்றிக் கொஞ்சம் விசாரணை செய்தால் ஸந்தேஹ விபரீதமின்றி மிகவும் நிச்சயமாய் விளங்கும். ஸுஷுப்தியில் தேஹேந்திரிய மனோபுத்திகள் வேலையில் லாமல் ஒய்ந்திருக்கின்றமையால் அந்தச் சமயம் உலகப்பொருள்களின் அறிவுக்குச் சிறிது மிடமில்லை. ஸுகமானது அப்போது அனுபவிக்கப் படும். இதனல் உலக வஸ்துக்களினலாவது மனக் கல்பனையினலாவது அந்த ஸுகம் அனுபவிக்கப்படுகின்ற தெனச் சொல்லமுடிவதில்லை.

## ஈச்வரன் நிரதிசயானந்த வடிவன்

இப்போது ஓர் சங்கை யுதிக்கக்கூடும். ஸுஷுப்தியில் ஸுகமுமில்லை துக்கமுமில்லை. துக்கத்தின் அபாவமே ஸுகம்போலத் தோன்றுகிறது என ஏன் கொள்ளக்கூடாது? என்பதாம். அப்படிக் கொள்வதாயின் ஸுஷுப்தியை விரும்புவோரெல்லோரும் ஸுகதுக்கம் இரண்டுமில்லாத ஸ்திதியை விரும்புகின்றனரென்று ஏற்படும். கல், கட்டை, மண் முதலியவைகளுக்கு ஸுகதுக்கங்களாகிய இரண்டுமில்லை, ஸுஷுப்தியை விரும்புவோர் கட்டை, கல், மண் முதலியவைகளின் ஸ்திதியை அடைய விரும்புகின்றனர் என்பதாக ஏற்படும். அது உசிதமாகுமா? அல்லவன்றோ. தவிரவும், துக்கத்தில் மூழ்கியவர்கள் துக்காபாவத்தை விரும்புவது பொருந்தும். அபாரமான லௌகிக இன்பங்களை அனுபவிக்கின்றவர்கள் ஸுஷுப்தியை விரும்ப இடமில்லாமற்போகும். ஆதலால் அந்த ஸமயம் ஸுகானுபவமுள்ளது என்பதே நிச்சயம். அந்த ஸுகானுபவம் யாதெனின்,

"ரஸோவை ஸ: ரஸꣳஹ்யேவாயம் லப்த்வா நந்தீ பவதி"

"அவன் ஓர் பெரிய ரஸவடிவன். இவன் (ஸுஷுப்தியில்) அவனையடைந்தே ஆனந்தானுபவி யாகின்றான்" என தைத்திரியாதி உபநிஷதங்கள் போதிக்கின்றன. இங்கு ஓர் சங்கை ஏற்படக்கூடும்.

அதாவது ஸுஷுப்தி காலத்தில் ஸகல ஜீவர்களும் பேரின்ப வடிவனான பரம்பொருளையே அனுபவிக்கின்றார்களெனின் அதுவே போதுமானதன்றோ. அதற்கென ஸத்குருவைத் தேடித்திரிந்து அவரிடம் உபதேசாதிகளைப்பெற்று ஸமாதி நிஷ்டை முதலியவைகளை ஸாதிப்பதில் ஏன் வீணாக உழலவேண்டும்? என்பதாம்.

உண்மை யறிந்தால் இந்தச் சங்கை நிகழாதாதலால் அதனைச் சொல்லுவோம். ஸுஷுப்தியில் ஸகலப் பிராணிகளாலும் அனுபவிக்கப்படும் இன்பமானது பரம்பொருளே. ஆயினும் அவ்வனுபவம் அஞ்ஞானம் எனும் ஓர் பெரிய பிரதிபந்தகத்தோடு அனுபவிக்கப் படுகின்றதேயன்றி ஞானத்தோடு அனுபவிக்கப் படுகின்றதில்லை. ஞானத்தோடு அனுபவிக்கப்படின் அது ஸுஷுப்தியாயிராது. அந்த அஞ்ஞானமெனும் பிரதிபந்தகமும் நீங்கி ஞானத்தோடு அவ்வின்பத்தை அனுபவித்தால் அது துரியநிலை என்பதே. நம் சாஸ்திரங்கள் ஜாக்கிரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி எனும் மூன்று அவஸ்தைகளையும் ஒழித்து ஞானத்தோடு பரம்பொருளானந்தத்தை அனுபவித்தலாகிய துரீயானுபவத்தைப் பெறுதற்குரிய வழியைக் கூறுவதற்காகவே பிரவர்த்தித்திருக்

கின்றன. இங்கு ஓர் திருஷ்டாந்தம் கவனிக்கத்தக்கது. அதாவது ஸமுத்திரத்தைப் பார்த்திராத ஒருவன் அதைப் பார்க்கவேண்டுமெனும் ஆசையோடு ஸமுத்திரக்கரை சென்றான். வெகு தூரத்திலிருந்து வந்தவனாகையால் அங்கு வரும்போது இரவில் ஜாமப்பொழுது சென்று விட்டது. இருளும் அடர்ந்துள்ளது. அந்த நிலைமையில் ஸமுத்திரத்தைப் பார்த்துத் திரும்பிவிட்டானாயின், அது எப்படி ஸமுத்திரத்தை ஸரியாகப் பார்த்ததாகாதோ, கண்டு களிக்கவேண்டுமாயின் இருளிராத ஸமயம் பார்க்கவேண்டுமோ, அப்படிப்போலவே ஸுஷுப்தியில் ஸுகானுபவம் என்க. இருளாகிய பிரதிபந்தகத்தோடு பார்க்கும்போது ஸமுத்திரத்தின் காக்ஷி, உள்ளபடி ஸரியாக எப்படிக் காணமுடியாதோ அப்படியே அஞ்ஞானமெனும் பிரதிபந்தக மிருக்கின்றமையால் ஸுஷுப்தியில் நிகழும் அனுபவமானது ஸரியான அனுபவமாகின்றதில்லை.

“ஸுஷுப்திகாலே ஸகலே விலீநே தமோபிபூத: ஸுகரூபமேதி”.

“ஸுஷுப்தி காலத்தில் எல்லாம் ஒடுங்கியடங்கவே அஞ்ஞானத்தில் தடைப்பட்ட ஸுகவடிவத்தை அடைகின்றான்”, எனக் கைவல்யாதியுபநிஷதங்களும் இவ்வுண்மையைக் கூறுகின்றன. அஞ்ஞானமெனும் பிரதிபந்தகமானது ஸுஷுப்தியில் போலவே ஜாக்ரத் ஸ்வப்நகாலங்களிலு மிருக்கின்றது. ஆனால் ஜாக்ரத் ஸ்வப்னங்களில் அஞ்ஞானத்தோடுகூட காமக்ரோதலோப மோஹாதிகளாகிய சித்தவ்ருத்தி ரூபமான மற்றோர் பிரதிபந்தகமு மிருக்கின்றது. சங்காதப் பிரதிபந்தத்தோடுகூட வீணைமீட்டிக்கொண் டிருக்குமிடத்தில் பேரிமுழக்க நாதமாகிய மற்றுமோர் பிரதிபந்தகமு மேற்பட்டால் வீணை நாதமானது எப்படி அனுபவிக்க இயலாதோ, அப்படியே ஜாக்கிரத் ஸ்வப்னங்களில் காமாதி சித்தவிருத்திகள், அஞ்ஞானம் எனும் இரண்டு பிரதிபந்தகங்களிருக்கின்றமையால் பரம்பொருள் ஸுகம் சிறிதும் புலப்படுகின்றதில்லை. ஸுஷுப்தியில் அக்ஞானமெனும் ஒரே பிரதிபந்தகமாதலால் அப்போது ஈஸ்வர ஸ்வரூப ஸுகானுபவமானது ஏதோ ஓர் பிரதிபந்தகமிருக்கும்போது எவ்வளவு ஏற்படக்கூடுமோ அவ்வளவு ஏற்படுகின்றது. அந்த அக்ஞானமெனும் பிரதிபந்தகத்தை ஈஸ்வர ராஜயோக ஞானத்தினால் ஒழித்துவிட்டால் தடையற்று பரமாத்மஸுக மனுபவிக்கப்படும். இவ்விரண்டு பிரதிபந்தகங்களுள் அக்ஞானம் காரணமும் ராகத்வேஷாதிகள் கார்யமுமாதலால் ஜாக்ரத் ஸ்வப்னங்கள் கார்யப் பிரதிபந்தகம், காரணப் பிரதிபந்தகமென இரண்டுவிதப் பந்தகங்கள் எனவும், ஸுஷுப்தியில் கார்யபந்தகங்களாகிய ராகத்வேஷாதிக ளில்லாமையால் காரண

பந்தம் மாத்திரமும், பிரதிபந்தகங்களிரண்டு மொழிந்த ஞானத்தோடு பரம்பொருள் ஸுகத்தை அனுபவித்தலாகிய துரீயத்தில் தடையற்ற அனுபவமுமெனும் இவ்வுண்மையானது,

"கார்யகாரணபத்தௌ தாவிஷ்யேதே விச்வதைஜஸௌ
ப்ராஜ்ஞ: காரணபத்தஸ்து த்வௌ தௌ துர்யே ந ஸித்யத:"

"கார்ய காரண வடிவங்களான இரண்டு பிரதிபந்தகங்கள் ஜாக்ரத் ஸ்வப்ன ஜீவர்களுக்கும், ப்ராக்ஞ னெனும் ஸுஷுப்தி ஜீவனுக்குக் காரணபந்தம் மாத்திரமும் என்பதறிக. துர்யனிடம் இவ்விரண்டு பந்தங்களும் ஸித்திப்பதில்லை" என மாண்டுக்யோபநிஷத்காரிகையில் கௌடபாத ஸ்வாமிகளால் உபதேசிக்கப்பட் டிருக்கின்றது. உண்மையை இன்னமும் சற்று ஆழ்ந்து விசாரித்தால் ஜாக்ரத் ஸ்வப்னங்களில் அனுபவிக்கப்படுவதாகிய லௌகிகமான விஷய ஸுகமும் பரமாத்ம ஸுகமே என்பதில் சிறிதும் ஸந்தேகத்திற் கிடமில்லை. கண்ணாடி சலித்துக்கொண்டே யிருக்கும்போது அதனில் பிரதிபிம்பமாகிய முகத்தைக் காணமுடியாது; சலனத்தை நிறுத்திக் கண்ணாடியை நிச்சலமாய் வைத்துக்கொண்டால் அதனில் முகத்தின் பிரதிபிம்பத்தை நன்றாய்க் காணலாம். நம் சித்தம் கண்ணாடி போன்றது. இதுவேண்டும் அதுவேண்டா மென்பதாக எண்ணுதலாகிய காமக்ரோதாதிகளால் சித்தம் ஸதா யாதா யாதமாக உழன்று சலித்துக்கொண் டிருக்கும்போது நமசித்த மெனும் கண்ணாடியில் பரம்பொருள் பிரதிபலிக்கின்றதில்லை. எப்போதாவது காமக்ரோதாதி வ்ருத்திகள் நீங்கிச் சித்தம் சலிக்காமல் நிச்சலமாகச் சற்று நிலைபெறுமாயின், அச்சமயம் சித்தத்தில் பரம் பொருளின்பமானது நன்றாய்ப் பிரதிபலிக்கும். இவ்விஷயம் இந்நூலில் பூர்வம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

## விஷயஸுகம் ஈச்வரானந்தமே

நம் சித்தமானது ஆசையினால் அதுவேண்டும் இதுவேண்டுமென யாதாயாதமாய் உழன்று சலித்துக்கொண் டிருக்கும்போது நம்பூர்வ கர்மவசத்தால் கோரிய பொருள் யதிருச்சையாய்க் கிடைத்துவிடுமாயின் நத்தாங் கூட்டின் மீறல்கோடு எழுத்தாவதுபோல அப்போது சித்தத்தின் சலனம் க்ஷணப்போது ஓய்வடைகின்றமையால், அப்போது நமக்கு ஸுகம் ஏற்படுகின்றது. அந்த இன்பம் ஆனந்த ஸ்வரூபமாகிய பரம்பொருளின் பிரதிபிம்பமே. உண்மை யிவ்வாறிருக்க நாம் மூடத்தன்மையால் இவ்வுண்மையை யறியாமல், கோரிக்கொண்

மிழன்று கிடைத்ததாகிய அந்த லௌகிகப் பொருளினின்றும் அந்த ஸுகம் ஏற்படுகின்றதாக எண்ணுகின்ருேம். இது எதுபோலென்னின் திருஷ்டாந்த மொன்றை இங்கு கவனிக்கவேண்டும்.

## ஸுஷுப்திஸுக மறியாமை

கஸ்தூரிமான் எனும் மிருகமானது தனது அண்டத்திலிருக்கும் கஸ்தூரியின் வாஸனையை காற்றின் வசத்தினுல் முகரவே, அப்போது அந்த ம்ருகம் ஹாஹா இவ்வாச்சரியப் பரிமள வாஸனை எங்கிருந்து வருகின்றது? இது எந்த வஸ்துவினுடையது? அந்த வஸ்துவை எப்படியாவது நாம் கைப்பற்றி அனுபவிக்க வேண்டுமெனக் கோரிக்கொண்டு (அந்த பரிமள வாஸனையானது தனது அண்டகோசத்தி லிருக்கும் கஸ்தூரியினுடைய தென்பதை யறியாமல்) அந்தப் பொருளை வன முழுதும் அலைந்து திரிந்து தேடிப்பார்க்கும். வனத்தில் எவ்வளவோ அலைந்து திரிந்து தேடியும் அந்தப் பரிமளவாஸனைப் பொருள் தனக்குக் கிடைக்கவில்லையே என ஏங்கித் துன்புற்றுவருந்தும். அதுபோல் மாந்தர் எங்கும் வியாபகமாய், உள்ளத்திலும் அந்தர்யாமியா யிருக்கும் ஆனந்தப் பரம்பொருளைத் தன் உள்ளத்திலிருக்கின்ற தென்பதை அறியாதவர்களாய் பெண்டீர் பிள்ளைவீடு செல்வம் ஆபரணம் புகழ் வாஹனம் முதலியவைகளி னின்றும் ஸுகம் உண்டாகின்றதென எண்ணி அவைகளுக்கு ஹானியேற்படும்போது அந்தோ எனக்கு இப்படி துக்கம் வந்துவிட்டதே எனக் கதறுகின்றனர்.

உண்மையில் ஸுக வஸ்துவானது எங்கும் வியாபகமாய்த் தன் உள்ளத்தில் ஆனந்தப் புதையலாய் ஆதியந்தமிராத இன்ப வாரிதியாய் இருக்க அவ்வின்பத்தையே தினந்தோறும் ஸுஷுப்தியில் அனுபவித்துக்கொண்டே "நான் யாது செய்வேன்? புத்ர பார்யா தனதிகள் இஷ்டப்படி யமையாததினுல் நான் அனுபவிக்கும் துக்கம் இவ்வளவெனச் சொல்ல இயலாது" எனச் சொல்லித் தவிக்கும் மாந்தர்களின் வாழ்நாளை யாதெனக் கூறுவாம்? இங்கு ஓர் திருஷ்டாந்தம் கவனிக்கத்தக்கது.

## ஸுவர்ணநிதி திருஷ்டாந்தம்

"ஓர் ஏழை மனிதன் வனத்தில் குடிசை ஒன்றினில் தனது முன்னோர் பரம்பரை முறையாக வெகு காலமாக வஸித்துக்கொண்டு காலம் கழித்து வந்தான். அவன் தனது ஏழ்மைத் தன்மையைக் குறித்துத் துன்புறாத க்ஷணமில்லை. அப்படி இருக்கும்போது பூமியில் புதைந்துள்ள நிதியைக் கண்டுகொள்ளும் அஞ்ஜன நிலைமையறிந்த ஓர் யோகி புருஷன்

அவ்வேழையின் குடிசையண்டை வந்து அப்பனே உன் முகத்தில் ஏனிப்படி துக்கக்குறி காணப்படுகின்றது! என்று வினவ, அவ்வேழை, யோகி புருஷனை நோக்கி ஓ ஸ்வாமி நான் பரம்பரையாகவே ஏழைத் தனத்தினால் ச்ரமம் வாய்ந்த துர்ப்பாக்கியன்; என்னைப்போல தாரித் திரத்தன்மையால் துக்கமனுபவிப்பவர் ஒருவருமிரார் எனச் சொல்லி அவர் முன்னிலையில் கதறலானான். அந்தப் பெரியோர் அவ்வே ழையை நோக்கி, அப்பனே, உனது குடிசையில் தினம்தோறும் இர வில் எந்த இடத்தில் படுத்துறங்குகின்றனையோ அந்த இடத்தில் பூமிக்குள் இரண்டு மூன்றடி அகழம் பரித்துப்பார் எனச் சொன்னார். ஏழை மனிதன் அவ்வாறே பரித்துப்பார்க்க அங்கு கோடிக்கணக்கிலும் அடங்காத திவ்யரத்ந ஸ்வர்ணநிதி ஒன்று இருக்கக்கண்டான். அடங்காத ஆனந்தங்கொண்டான். அப்பெரியோரது அடிகளில் வீழ்ந்து வணங்கி தன்யனானான். அந்த ஸ்வர்ணநிதியை வீட்டில் வைத்துக்கொண்டு அதற்கு மேலாகவே படுக்கை உடுக்கை ஸஞ்சாரம் முதலியவைகளைச் செய்துகொண்டே அவன் மிகவும் தரித்திரத்தன்மையால் துக்கமுடை யோன் என எவ்வாறு எண்ணினானோ அவ்வாறே, மாந்தர்கள் தினந் தோறும் ஸுஷுப்தியில் இவ்வானந்தப் பரம்பொருளை அனுபவித்துக் கொண்டே யிருந்தும் அஞ்ஞானத்தினால் அதனை யறியாதவர்களாய் தம்மை மிகவும் துக்கிகளென்றெண்ணித் தவிக்கும்போது பூர்வஜன்மப் புண்ணிய பரம்பரைகளின் பயனாக ஓர் மஹாபுருஷன் வந்து தோன்றி பரம்பொருளைப்பற்றிய உண்மை நிலையை உபதேசிக்கவே அனுபவ சக்தி வாய்ந்துள்ள அவ்வுபதேச மொழியின் பெருமையால் அஞ்ஞான மொழிந்து, ஆனந்தப் பரம்பொருளை யறிந்து, அனுபவானந்த வெள்ளத் தில் அழுந்தி, ஸமாதி நிலைமைகூடி விகல்பம் நீங்கப்பெற்ற விமலமான நிலைமையிலமர்ந்து சில நேரத்தினில் சித்தம் வெளிமுகப்படவே அஹோ என்ன ஆச்சரியமிது, எனது புண்ணியமே புண்ணியம், யானே தன்னி யன். இப்படிப்பட்ட ஆனந்தப் பரம்பொருள் எங்கும் வியாபகமாய் உள்ளத்திலும் ஜ்வலித்துக்கொண்டிருக்க அதனில் சிறிதும் புத்தி யைச் செலுத்தாமையால் எண்ணிறந்த ஜென்மகோடிகளை எடுத்துழன் றோமே," என எண்ணத்தகும். இதே திருஷ்டாந்தமானது சாந்தோக்ய உபநிஷதம் தஹரவித்யாப் பிரகரணத்தில்,

"தத்யதா ஹிரண்யநிதிம் நிஹிதமக்ஷேத்ரஜ்ஞா: உபர்யு
பரி ஸஞ்சரந்தோ ந விந்தேயு: ஏவமேவேமா: ப்ரஜா: அஹர
ஹர்கச்சந்த்ய: ஏதம் ப்ரஹ்மலோகம் ந விந்தந்தி அந்ருதேந ஹி
ப்ரத்யூடா:"

"அது எப்படியெனின், தன் இருப்பிடத்தில் புதைத்துள்ள ஸ்வர்ணப் புதையலை அறியாதவர்களாய் அதன் மேலாகவே ஸதா நடமாடிப் புழங்கிக்கொண்டிருந்தும் 'யாம் ஒன்றுமில்லாத தரித்திரனாயிருக்கின்றோமே' என ஏங்கி வருந்துவதுபோல, இம்மாந்தர்கள் பிரதி தினமும் இவ்வானந்த வஸ்துவை அனுபவித்துக்கொண்டிருந்தும் அஞ்ஞானத்தினால் அதை யறியாதவர்களாய்க்கொண்டு அல்லற்படுகின்றனர்."

எனும் வாக்கியத்தினால் உபதேசிக்கப் பட்டிருக்கின்றது. இவ்வானந்தப் பொருளின் விசேஷத்தை இன்னமும் சற்று கவனிக்க வேண்டும்.

𑌅𑌷𑍍𑌟𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍋 𑌦𑍈𑌵𑌸𑍍𑌤𑍈𑌰𑍍𑌯𑌗𑍍𑌯𑍋𑌨𑌶𑍍𑌚 𑌪𑌞𑍍𑌚𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 ।
𑌮𑌾𑌨𑍁𑌷𑍍𑌯𑌶𑍍𑌚𑍈𑌕𑌵𑌿𑌧𑌃 𑌸𑌮𑌾𑌸𑌤𑍋 𑌭𑍌𑌤𑌿𑌕𑌃 𑌸𑌰𑍍𑌗𑌃 ॥

என ஸாங்க்ய காரிகையில் கூறியபடி ப்ராம்யம், ப்ராஜாபத்யம், ஐந்த்ரம், பைத்ரம், காந்தர்வம், யாக்ஷம், ராக்ஷஸம், பைசாசம் எனும் எட்டு விதமான தேஹபேதங்களோடு கூடிய தேவ சரீரங்களையோ, பசு, ம்ருகம், ஊர்வன, பக்ஷிகள், ஸ்தாவரங்களான புல் பூண்டு செடி கொடி விருக்ஷாதிகள் எனும் ஐந்துவகையாகிய பேதங்களையுடைய திர்யக்ஜந்து தேஹங்களையோ, அல்லது மானுஷ சரீரங்களையோ தத்தம் பூர்வகர்ம வசத்தால் அடைந்துள்ள ஜீவான்மாக்களுள் சரீரங்களில் எவ்வளவோ தாரதம்மியங்க ளிருக்கின்றன. அவரவரது நல்வினை தீவினைகளிலும் புத்தி பரிபாகத்திலும் லௌகிகமாகிய வாழ்விலும் எவ்வளவோ தாரதம்மியங்க ளிருக்கின்றன. ஜீவான்மாக்களிடம் இப்படித் தாரதம்மியங்களிருக்கினும் ஸுஷுப்தியில் ஸகல ஜீவான்மாக்களுக்கும் இவ்விறைவன் ஒரேவிதமாய், சிறிதும் பாரபக்ஷவைஷம்யாதிக ளில்லாமல் தனது ஸ்வரூபானந்த ஸுகத்தைத் தருகின்றான். நரகலோகத்தில் யாதனைகளை யனுபவிக்கச் சென்றவர்களாகிய மஹா பாபிகளுக்கு ஸுஷுப்தியில் எந்த ஸுகத்தைத் தருகின்றானோ அந்த ஸுகத்திற்கும் மஹா புண்ணிய பலன்களை யனுபவிக்க தேவலோக மடைந்திருக்கும் புண்ணியவான்க ளாகிய தேவேந்திராதிகளுக்கு ஸுஷுப்தியில் அருளும் ஸுகத்திற்கும் லேசமும் தாரதம்மியமில்லை. உலகில் இவ்விறைவனை நம்பாத நாஸ்திகர்க ளாகிய மனிதர் எவ்வளவு கோடிக்கணக்காயிருக்கின்றனரோ, ஈச்வரனை நிந்திக்கும் த்வேஷிகளாகிய மனிதர் எவ்வளவோ, ஈச்வரனை ஸ்துதிப்பவர்கள் யாவர்களோ, இவர்க ளெல்லோருக்கும் ஸுஷுப்தியில் ஒரே இன்பத்தைக் கொடுத்தருளுகின்றானே யன்றி சிறிதும் வித்தியாஸம் செய்யப்படுகின்றதில்லை எனின், இவ்விறைவனது ஸர்வஸம பாவனையின் பெருமையும் இனிது விளங்கும். இப்படிப்பட்ட

மஹிமையோடு ஈச்வரன் கூடியிருத்தலானது அவனிடமுள்ள மாயா சக்தியினுலேயே அன்றி வேறல்ல.

## ஈச்வரன் பரமார்த்தத்தில் நிர்க்குணன்

இப்படிப்பட்ட மாயா தர்மங்களோடு கூடியவனுகிய இந்த ஸகுணப்பிரம்ஹ ஸ்வரூபத்தினது குணங்களைக் காட்டியே எக்குணமும் எக்கிரியையு மில்லாத இவனுடைய உண்மை ஸ்வரூபத்தைப் போதிக்க வேண்டியதா யுள்ளது. இதுவரையிலும் இந்நூலில் சொல்லப்பட்ட ஈச்வர குணங்க ளெல்லாம் மாயா சக்தியினுலேயே இறைவனிடம் ஸம்பவித்திருப்பவை யாதலால் பரமார்த்தமாகிய மோக்ஷ நிலையில் பொய்யாய்ப் போகும். பரமாத்மா ஸச்சிதானந்தமாகிய அத்வைத வஸ்துவே. அதற்கன்னியமான இரண்டாவது வஸ்து உண்மையில் இல்லவே யில்லை. ஆனுல் அநேக கோடி ஜென்மங்களில் நிஷ்காமமாய் செய்த கர்மானுஷ்டானங்களாலும் மாயா சக்தியோடு கூடியவனென இங்கு விவரமாய்ப் போதிக்கப்பட்ட இறைவனை பக்தியோடு செய்த உபாஸ்தியாலும் சித்தத்தூய்மை பெற்று இஹலோக வாழ்க்கை முதல் பிரும்மபதமீருயுள்ள ஸகல போகங்களிலும், அணிமாதி அஷ்ட மஹா சித்திகளிலும் ஆசை ஒழிந்த உத்தம பரிபாகிகளான முமுக்ஷு புருஷர்களே அத்வைத பரமார்த்த நிலையை அடையத்தக்கவராவர். முமுக்ஷுத்வமும் அப்படிப்பட்ட உத்தம வைராக்கியமும் இராதவர்க ளாகிய நம் போன்றவர்கள் இங்கு இதுகாறும் கூறிய ஸகுணனுகிய இறைவனை உபாஸிக்க வேண்டும்.

## பாரமார்த்திகம் வ்யாவஹாரிகம் பிராதிபாஸிகம் என ஸத்தியம் மூவ்வகை

இங்கு இதனை யறிக. முற்கூறிய உத்தம பரிபாகிகளும், குணக்கிரியாதிகளிராத ஈச்வரனுடைய பரமார்த்தமான ஸ்திதியான அத்வைத நிலையை வ்யாவ ஹாரிகமாயுள்ள இந்த ஸகுணவஸ்துவின் ஞானத்தினுலேயே அடையவேண்டியதாகும். அதாவது இங்கு அறியவேண்டிய விஷயச் சுருக்கம் இதுவே. ஸகுணேச்வரனுடைய உபாஸ்தியினுலும் ஸகுணத்தைக் கூறும் தடஸ்த லக்ஷண வாக்கியங்களாலும் நிர்க்குணப் பிரும்ம ஸ்வரூபம் அறியத்தக்க தென்பதாம். பரமார்த்தம் வ்யாவ ஹாரிகம் எனும் சொற்களின் அர்த்தம் யாதென்பதை இங்கு அறிந்து கொள்ள வேண்டும்.

ஸத்யம் என்பது பிராதிபாஸிகம் வ்யாவஹாரிகம் பாரமார்த்திகம் என மூவ்வகை யாகும். பிரதிபாஸம் எனும் சொல்லுக்குத் தோற்ற

டுமன்பது அர்த்தம். பிராதிபாஸிக ஸத்தியமென்பது உண்மையில் ஸத்திய மல்லாததும் தோற்றமாத்திரத்திற்கு ஸத்தியம் போலுள்ளது மாகிய ஸ்வப்ன உலகம், கயிற்றரவம் இந்திரஜாலப்பொருள் முதலியவை யாம். வியாவஹார காலத்தில் அதாவது பரம்பொருளை அறிவதற்கு முன்னர் ஸத்தியமாகக் காணப்படுகின்றனவாகிய ஈச்வரன் ஜகத்காரணனா யிருந்துகொண்டு செய்யும் ஜகத்ஸ்ருஷ்டி லயம் முதலிய க்ருத்யங்களும் ஜகங்களும் ஜீவாத்மாக்களின் ஸகல வியவஹாரங்களும் ப்ரும்ம ஞானம் வந்தவர்களுக்குப் பொய்யாய்ப் போகின்றமையால் வ்யாவஹாரிக ஸத்தியமெனப்படும். பாரமார்த்திக ஸத்தியமாவது குணக்கிரியை யாது மிராத அத்வைதப் பரம்பொரு ளொன்றேயாம். அப்படிப்பட்ட அத்வைதப் பரம்பொருளே பரமார்த்த ஸத்தியமல்லாததாகிய மாயா சக்தியோடு கூடி ஸகுணனாகிய ஈஸ்வரனாய் ஜகத் ஸ்ருஷ்டியாதி கிரியைகளைச் செய்யும் பொருளாயிருக்கின்றமையால், வியாவஹாரிக ஸத்திய மாயுள்ள அந்த ஸகுணேஸ்வர ஸ்வரூபத்தையே எடுத்துக்காட்டி அவனது பரமார்த்த ஸ்வரூபமாகிய நிர்க்குண ப்ரும்ம ஸ்வரூபத்தைப் போதிக்கவேண்டிய தாகின்றது.

## ஆச்ரயத்திற்கு மோஹத்தை மாயாசக்தி உண்டாக்காது

வ்யாவஹாரிக ஸத்தியமாகிய ஸகல சராசரங்களையும் பரமார்த்த ஸத்திய வஸ்துவாகிய நிர்க்குண ப்ரும்மமானது தன்னிடம் வியாவஹாரிக ஸத்தியமா யமைந்துள்ள மாயா சக்தியாலேயே ஸ்ருஷ்டிக்கும் வஸ்துவாக இருக்கின்றதுபோல, வியாவஹாரிக ஸத்திய வஸ்துவாயிருக்கும் ஜீவாத்மா ப்ரமத்தினாலும் நித்ராதோஷத்தினாலும் கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலிய ப்ராதிபாஸிக ஸத்திய வஸ்துக்களை ஸ்ருஷ்டி செய்வோனாக இருக்கின்றான். இதனால் ஸங்கிரஹமாக இதனை யறிக. வெளி ப்ரபஞ்சங்கள் ஈச்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவை. கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலியவை ஜீவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவை. தானிருக்கும் ஆதார வஸ்துவாகிய ஈச்வரனுக்கு வ்யாமோஹத்தை மாயாசக்தி யுண்டுபண்ணாது. ப்ரமம் நித்ராதோஷம் முதலியவைகளுக்குக் காரணமாயிருக்கும் அஞ்ஞானமோ எனின், தனக்கு ஆதார வஸ்துவாக இருக்கும் ஜீவாத்மாவுக்கு வ்யாமோஹத்தை உண்டாக்கும். ஈச்வரனிடமுள்ள மாயாசக்தி மிகவும் சுத்தமானது. ஜீவாத்மாவினிலுள்ள அஞ்ஞானமோ எனின் மிகவும் அசுத்தமானது. ஆதலால் ஈச்வரனுக்கு வ்யாமோஹத்தை

யுண்டாக்காமலே மாயாசக்தியானது ஜகத் ஸ்ருஷ்டியாதிகளைச் செய்விக்கின்றது. அஞ்ஞானமோ எனின் ஜீவாத்மாவுக்கு வ்யாமோஹத்தையுண்டுபண்ணியே கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலிய ப்ராதிபாஸிக ப்ரபஞ்சங்களை ஸ்ருஷ்டிக்கின்றது. ஈச்வரன் வியாவஹாரிக ஸத்தியமாயுள்ள ஸகல சராசரங்களுக்குக் கர்த்தாவா யிருக்கின்றது போல ஜீவன் பிராதிபாஸிக ஸத்தியமாயுள்ள கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலியவைகளுக்குக் கர்த்தாவாக இருக்கின்றான்.

## ஜகத்ஸ்ருஷ்டி வாக்கியங்களுக்குக் கருத்து அத்வைதத்திலேயே

இனி ஜீவாத்மவஸ்து யாது? என வினவுவோனுக்கு "கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலியவைகளை ஸ்ருஷ்டிக்கின்றவன் ஜீவாத்மா எனப் போதிப்பதுபோல, அத்வைதமாகிய பரமார்த்த வஸ்து யாது என வினவும் ஜிக்ஞாஸுக்களுக்கு ஜகத்ஸ்ருஷ்டியாதிகளுக்குக் கர்த்தாவாக இருக்கும் பொருள் அத்வைத பரம்பொருள் என வேதாந்தங்கள் உபதேசிக்கின்றன. பிராதிபாஸிகங்களான கயிற்றரவம் ஸ்வப்ன உலகம் முதலியவைகளைப்பற்றிக் கூறும் வாக்கியங்களுக்கு வியாவஹாரிக ஸத்தியமாகிய ஜீவாத்மாவைப் போதிப்பதிலேயே எப்படி கருத்துளதோ, அப்படியே வியாவஹாரிக ஸத்யமாகிய ஈச்வரன் செய்யும் ஜகத்ஸ்ருஷ்டியாதிகளைக் கூறும் வேதாந்த வாக்கியங்களுக்கு நிர்க்குணமாகிய அத்வைதப் பரம்பொருளைப் போதிப்பதிலேயே கருத்தாம் என்றறிக. இப்போது ஓர் சங்கை ஏற்படக்கூடும். அதாவது, காரண காரியங்களிரண்டும் ஸமானத்தன்மை யுடையவைகளாகவே இருத்தல் லோகானுபவஸித்தம். பொன் காரணம், ஆபரணங்கள் கார்யம்; மண் காரணம், குடம் முதலியவை கார்யங்கள். பொன்னாலாகிய ஆபரணங்கள் பொன்னாகவே இருக்கும். ஈயம் பித்தளை முதலியவையாகின்றதில்லை. மண்ணாலாகிய குடம். மண் குடமாகுமேயன்றி பொன்குட மாகின்றதில்லை. இதுபோல ஸத்தியமாகிய காரணத்தினின்றும் பொய்யாகிய கார்யம் உண்டாகின்றதில்லை. அதுபோலவே பொய்க்காரணத்தினின்றும் ஸத்யகார்ய முண்டாகாது. கயிற்றரவத்தினின்றும் ஸத்தியமாகிய நாகரத்தினம் கிடைப்பதில்லை. ஸ்வப்னத்தில் ஸம்பாதித்த பணத்தை ஜாக்ரத்தில் செலவழித்தலென்பது ஒவ்வாது. உண்மை இவ்விதமிருக்க "வ்யாவஹாரிக ஸத்தியமாகிய ஜகத்ஸ்ருஷ்டியாதிகளைக் கூறும் வேதாந்த வாக்கியங்களால் பாரமார்த்திக ஸத்தியமாகிய அத்வைத தத்வம் போதிக்கப்படுகின்றதெனக் கூறிய தெப்படிப் பொருந்தும்" என்பதாம்.

## வயாவஹாரிகமாகிய காரணத்தில் பாரமார்த்திகப் பயன் கிடைக்கும்

இச்சங்கை சிறிதும் உசிதமாகாது. அதாவது ஜகத்ஸ்ருஷ்டியாதிகள் வியாவஹாரிக ஸத்தியமேயாயினும் அதனைக் கூறும் வேதாந்த வாக்கியங்களால் பாரமார்த்திக ஸத்தியமாகிய பரப்ரும்ம வஸ்து அறியப்படுதல் உசிதமே. பிராதிபாஸிகமாகிய கயிற்றரவும் ஸ்வப்ன உலகம் முதலியவை வியாவஹாரிக ஸத்தியமாகிய பயகம்பாதிகளையும் ஸந்தோஷாதிகளையும் உண்டாக்குதல் நமக்கு அனுபவஸித்தம். அதாவது ஸ்வப்னத்தில் நம்மைத் துரத்திய புலி பொய்யேயாயினும் ஸத்தியமாகிய ஜாக்ரத்தை (விழித்துக்கொள்ளுதலை) உண்டாக்குவதுபோல ஜகத்ஸ்ருஷ்டியாதிகள் பரமார்த்த ஸத்தியங்க ளல்லவாயினும், அவைகளைக்கூறும் வேதாந்த வாக்கியங்கள் பரமார்த்த ஸத்தியமாகிய பரம்பொருளின் ஞானத்தை உண்டாக்குதல் உசிதமேயாகும் என்றறிக. ஆகையால் இச்சங்கை அநுசிதமே.

## ஸ்வரூப தடஸ்த லக்ஷணபேதம்

உண்மை இவ்விதமாகையால் பரமார்த்த ஸத்தியமாகிய அத்வைத வஸ்துவைப் போதிப்பதிலேயே கருத்தோடு ஜகத் ஸ்ருஷ்டியாதிகர்த்தாவாகிய ஸகுண ப்ரும்மத்தை வேதாந்தங்கள் கூறுதலானது முற்றிலும் பொருத்தமுடையதே என்றறிக. தவிரவும் யாதேனும் ஓர் வஸ்துவைப்பற்றிய நிச்சயஞான மேற்படுவதாயின் அதன் லக்ஷணத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும். லக்ஷணமானது ஸ்வரூபலக்ஷணம் தடஸ்த லக்ஷணம் என இருவகைப்படும். ப்ரும்மம் ஸச்சிதானந்த ஸ்வரூபம் எனும் வாக்கியம், ஸ்வரூப லக்ஷணத்தைச் சொல்லுவதாகும். தடஸ்த லக்ஷணமாவது,

"யாவல்லக்ஷ்யகாலமநவஸ்திதத்வே ஸதி யத்வ்யாவர்த்தகம்"

"லக்ஷ்யமுள்ள போதெல்லாம் அதனிடம் அந்த லக்ஷணமுமிருக்கவேண்டு மெனும்|நியமம் இல்லாததாய்க்கொண்டு மற்ற வஸ்துக்களினின்றும் வஸ்துவைத் தனித்துக் காட்டிக்கொடுக்கும் லக்ஷணம் தடஸ்தலக்ஷண மெனப்படும் எனும் வேதாந்த பரிபாஷையை இங்கறிக. இங்கு ஓர் திருஷ்டாந்தம் வருமாறு.

## தடஸ்த லக்ஷண விசாரம்

ஓர் பெருங்கூட்டத்தின் நடுவில் உள்ள அரசனை யாவனென அறிந்துகொண்டிராத மனிதனொருவன் தன்னருகிலிருந்த ஓர் பெரி

யோனை நோக்கி ஐயா, இக்கூட்டத்தின் நடுவில் அரசன் வருகிறுனுமே. அவன் யாவன்? என வினவினன். அதற்கு அப்பெரியோன் அதோ அழகு நிறைந்த பொன்மேனியனுக ஒருவன் காணப்படுகின்றுனன்றே அவனை அரசனென்றறி என்றுன். அவ்விதம் சொல்லியது அரசனுடைய உருவத்தைக் குறிப்பதாதலால் ஸ்வரூபலக்ஷண மென்பதாம். அவ்விதம் ஸ்வரூபலக்ஷண வாக்கியத்தினுல் அரசன் இவனே என நிச்சயமாக அறிந்துகொள்ள இயலவில்லை. அது கண்டு அப்பெரியோன், அதோ மதித்தயானையின் முதுகினில் முத்துமய ஜாலங்களின் இடையில் சந்திரன்போலச் சொலிக்கின்ற குடையின் நிழலில் திவ்விய ஆடையாபரணங்களினுல் விளங்கும் புருஷனை அரசனென்றறி எனச் சொன்னுன். அவ்வாக்கியத்தைக் கேட்டதும் அரசனிவனே எனும் நிச்சயஞானம் உண்டாய்விட்டது. இதுவே தடஸ்தலக்ஷண மெனப்படும். அரசன் யாவனென வினவிய மனிதன் இந்த தடஸ்த லக்ஷண வாக்கியத்தைக் கேட்டதும் யானைமே லம்பாரம் வெள்ளைக் குடை திவ்யமாகிய ஆடை யாபரணம் முதலிய விசேஷணங்களை விடுத்து அரசனுகிய புருஷவிசேஷனை மாத்திரம் உடனே அறிந்துகொள்கின்றுன். அதுவேயன்றி அந்த விசேஷணங்களைச் சேர்த்து அரசனென்றறிகின்றுனில்லை. விசேஷணங்களையும் சேர்த்து அரசனென அறிகின்றுனெனின் பிறகு அவ்வாஹன சுவேதச்சத்ர வஸ்திராபரணுதிகளைவிட்டு வேறு விதமான வாஹன வஸ்திராபரணுதிகளோடு கூடியிருக்கும்போதும் அரசனிவனென எற்படும் ஞானத்திற் கிடமிராமற் போகும். அனுபவமோ அப்படிக்கில்லை. ஆதலால் தடஸ்தலக்ஷண வாக்கியங்களில் சொல்லப்படும் விசேஷணங்கள் வஸ்துவின் ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்துவிட்டு அந்த ஸ்வரூபத்தோடு சேராமல் தாம் விலகிவிடும். இதுவே தடஸ்த லக்ஷணத்தினியல்பு. இவ்விஷயமும் இதுவே திருஷ்டாந்தமும் ஸ்வாராஜ்யஸித்தி எனும் அரியநூலில் அபவாத ப்ரகாரணத்தில்,

"[illegible]
[illegible]
[illegible] ! [illegible]
[illegible]
[illegible]॥"

"இக்கூட்டத்தில் அரசன் யாரென வினவியதற்கு, மதித்த யானையின் முதுகினில் முத்து ஜாலங்களின் நடுவினில் சந்திரன்போல் வெண்ணிறம்

பொருந்திய குடைநிழலில் விளங்குவோனை அரசனென்றறி" எனும் லக்ஷண வாக்கியத்தைக் கேட்டதும், அந்த விசேஷணங்க ளெல்லாவற்றையும் விடுத்து, இவனே அரசன் என அரசனுடைய ஸ்வரூபத்தை மாத்திரம் அறிந்துகொள்கின்றான். அவ்வரசன் அவ்விசேஷணங்களை விட்டு வேறுவிதமான விசேஷணங்களோடு விளங்கும்போதும் காலாந்தரத்திலும் அரசனிவனென்றே அறிகின்றான்" எனும் ச்லோகத்தினால் அமலானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகளால் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விதம் தடஸ்தலக்ஷணம் கூறப்பட்டது. ஸ்வரூப லக்ஷணமாகிய ஸத்து, சித்து, ஆனந்தம் எனும் வாக்யமானது மாயா ஸம்பந்தம் நீங்கிய ஸன்மாத்ரம், சின்மாத்ரம், ஆனந்தமாத்ரமாகிய நிர்விசேஷ வஸ்துவையே போதிப்பதாம். இப்படிப்பட்ட ஸ்வரூபலக்ஷணம் மாத்திரம் அத்வைத தத்துவத்தை அறிவதற்குப் போதுமானதாகாது. ஆதலால் தடஸ்த லக்ஷணமும் கூறவேண்டியது அவச்யமாகும். இங்கு மற்றுமோர் உதாஹரணம்.

## தடஸ்த லக்ஷண திருஷ்டாந்தம்

நகரத்திற்குப் புதிதாக வந்த ஒருவன் ராஜவீதியில் வந்து, மந்திரியின் வீடெயாதென ஒருவனை வினவினான். அதற்கவன் "அதோ நான்கு மெத்தையை உடைய வெண்ணிறமாகிய மாளிகை தெரிகின்றதே, அதுவே மந்திரியின் இல்லம்" என்று கூறினான். ஆனால் அவன் கூறியபடி மற்றும் சில வீடுகளும் அதே வீதியில் உள்ளனவாதலால் எது மந்திரியின் வீடு என்று அவனால் நிச்சயிக்க இயலவில்லை. அதனால் அவனுக்கு மந்திரியின் வீடு யாதென நிச்சயம் வாராதது கண்டு நகரத்தான், "அதோ மெத்தையின்மேல் காக்கை இருக்கின்றதே அதுவே மந்திரியின் வீடு" எனக் கூறினான். அதைப் பார்த்துக்கொண்டு மந்திரியின் வீட்டுக்குச் செல்லலானான். வீட்டின் ஸமீபத்தில் போகும்பொழுது காக்கை பறந்தோடிப்போய்விட்டது. ஆயினும், மந்திரி வீட்டையறிந்த நிச்சயம் போகவில்லை. காக்கை இருக்கும் வீடு எனும் அடையாள வாக்கியமானது மந்திரியின் வீட்டை மாத்திரம் எப்படிக் காட்டிக்கொடுத்து விடுகின்றதோ, காக்கையின் இருப்பானது எப்படி வீட்டின் ஸ்வரூபத்தில் சேருவதில்லையோ, அவ்வாறே தடஸ்த லக்ஷணத்தால் கூறப்படும் மாயா தர்மங்கள் பரம்பொருளின் உண்மை ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்துவிட்டு அந்த ஸ்வரூபத்தில் சேராமல் தாம் விலகிக் கொள்கின்றன. இதுவே தடஸ்த லக்ஷணத்தின் இயல்பாம். தடஸ்த லக்ஷணமென்பதின் விவரம் ஏற்கெனவே லக்ஷண வாக்யத்தால் கூறப்பட்டதானது இவ்வுண்மைபற்றியே என்பதறிக.

## லக்ஷண வாக்கியம்
## விதிமுகம் நிஷேதமுக மென இருவிதம்

இன்னமும் ஒன்று இங்கறியவேண்டும். பரப்பிரம்ம லக்ஷண வாக்கியமானது விதிமுகம், நிஷேதமுகம் என இருவகைப்படும். விதி முகம் என்பது முதலில் ஸ்வரூபத்தைப் போதித்து அதன் பிறகு அது வொழிந்த மற்ற வஸ்துக்களை விலக்குவதாகிய இயல்புள்ளது. அதாவது ஸத்து, சித்து, ஆனந்தம் எனும் சொற்களடங்கிய லக்ஷண வாக்கியமானது "எக்காலத்திலும் எத்தேசத்திலுமுள்ளது, அறிவு ஸ்வரூபமானது, ஆனந்த வடிவமானது" எனப் பரம்பொருளின் ஸ்வரூபத்தை முன்னர் போதித்துவிட்டுப் பின்னர், அது மாயாசக்திபோல அஸத்துப் பொருளல்ல, ஆகாசாதிகள்போல் ஜடப்பொருளல்ல, உலகவஸ்துக்கள்போல துக்கப்பொருளல்ல, என அஸத்து ஜட துக்கப்பொருள்களை விலக்கும் இயல்புள்ளதாம்.

"நிஷேத முகமாவது பரப்பிரும்ம வஸ்து ஸ்தூலமல்லாதது, ஸூக்ஷ்ம மல்லாதது, குறுகிய தல்லாதது, நீண்டதல்லாதது, இந்திரியங்க ளல்லாதது, பாணி பாதங்களல்லாதது, மனோபுத்திப் பிராணன்க ளல்லாதது," எனக் கூறும் லக்ஷணவாக்யமாம். இவ்வாக்கியம் ஸ்தூல சூக்ஷ்மாதி வஸ்துக்களை முன்னர் விலக்கிவிட்டுப் பின்னர் லக்ஷ்யமாகிய பரப்பிரும்ம ஸ்வரூபத்தைப் போதிக்கும் இயல்புள்ளதாம். இப்படிப் பட்ட ஸ்வரூப தடஸ்த லக்ஷணங்களுள் மாயாசக்தி விலாஸம் பொருந்திய ஸகுணேச்வரத் தன்மைகளைக் கூறும் வாக்கியம் தடஸ்த லக்ஷணத்தையே சேர்ந்ததாகும்.

## நிர்க்குண ப்ரும்மம் ஸகுணமா யிருத்தலுக்கு த்ருஷ்டாந்தம்

இப்போது விரிவாகிய ஓர் திருஷ்டாந்தம் கவனிக்கத்தக்கது. அதாவது ஸாம்ராஜ்ய பதத்திலுள்ள மஹாராஜன் ஒருவனிருக்கின்றான். அவனது வடிவத்தை உள்ளபடி முற்றும் எல்லோரும் பார்க்க வியலாது. ஆயினும் அவனது பட்டமகிஷி ஒருத்தியே அவனது வடிவத்தை உள்ளது உள்ளபடி முற்றும் பார்க்க வியலும். இனி, அவ்வரசன் ஜபம் முதலிய அனுஷ்டானங்களைச் செய்யும் ஸமயங்களில் புரோகிதர் முதலியவர்கள் பார்க்கலாம். ஆயினும் பட்டமகிஷிபோல முற்றும் அவனது வடிவத்தைப் பார்க்க அவர்களால் இயல்கின்றதில்லை. அவனது வடிவத்தை முற்றும் பார்க்க முடியாவிடினும் அச்சமயம்

அதிக வேஷமாகிய ஆடையாபரண அலங்காராதிகள் இராமையால் சற்று ஏகதேசமாகவே பார்க்கவியலும். பிறகு அவ்வரசன் அந்தரங்க மாகிய ராஜ்ய கார்யங்களை ஆப்தர்களாகிய மந்திரிகளோடு ஆலோசிக்கும் அவஸரத்தில் இருக்கும்போது, ஜபாதி அனுஷ்டான காலத்தைப் போல் இராமல் அந்தரங்க ஆலோசனை ஸமயத்திற்குரிய ஆடை ஆபரணம் முதலிய முன்னிலும் அதிகமாகிய ஆவரண அலங்காராதிகளோடு இருப்பானாதலால், அவ்வந்தரங்க மந்திரிகளால் அச்சமயம் அவனது தேகவடிவம் முந்திய ஸந்தர்ப்பத்திலுள்ளதைக் காட்டிலும் சற்றுக் குறைவாகவே காணத்தகும். அவ்வரசன் மற்றுமுள்ள ராஜாலங்காரங்களாகிய கிரீட, குண்டலாதி தாரணத்தை யுடையவனாய் திவ்ய ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து ராஜஸபையில் அமர்ந்திருக்கும் ஸந்தர்ப்பத்தில், ஸமீபத்திலுள்ளவர்களான மந்திரி பிரதானி, அங்கரக்ஷகர், நகரத்திலுள்ள பிரமுகர்கள், வித்வான்கள் முதலியவர்கள் ராஜாலங்காரத்தினால் நன்றாய் மறைபட்டிருக்கின்றதாகிய தேஹவடிவத்தையே காணவியலும். அவ்வரசன் அலங்கரிக்கப்பட்ட யானையின் முதுகில் அம்பாரிமீது அமர்ந்து சத்ரசாமராதி உபசாரங்களுடன் கூடியவனாய் ஸைன்யங்கள் முன்னும் பின்னும் புடைசூழ, வீதியில் பவனி வரும்பொழுது வீதியிலுள்ள ஜனங்களால் அவனது தேஹவடிவத்தில் முகம் முதலிய ஏகதேச அவயவங்களையே பார்க்க வியலும். அவ்வரசனே மாறுவேடம் பூண்டு நகரசோதனைக்காக இரவில் வீதி முதலியவைகளில் ஸஞ்சரிப்பானாயின் அச்சமயம் பவனி வருங்காலத்தில் போல அல்லாமல் மாறுவேஷத்தினால் வேற்றுமைப் பட்டிருக்கும் வடிவமே காணவியலும். அவ்வேற்றுமைப்பட்ட மாறு வேஷவடிவமே பலதடவை காணப்படுமாயின் வேஷமில்லாமலிருக்கும் அவனது மேனியை, அப்படிக் காண்போர் அடையாளங் கண்டுகொள்ள வியலும். இதுபோலவே பிரகிருதத்திலறிக.

## நிர்க்குண ப்ரும்மத்தை அறிய வைராக்யம் தீவ்ரமாயிருத்தல் அவசியம்

அதாவது மாயா தர்மங்கள் நீங்கிய ஸச்சிதானந்த மாத்திரமான பரம்பொருளின் யதார்த்த வடிவமாகிய அத்வைத தத்வத்தை உள்ளபடி அறிவதற்கு, ராஜத்வத்தைக் கருதாமல் கணவனென்றே கருதும் பட்டமகிஷிபோல் ஸகுணவஸ்துவின் மாயா தர்மங்களை யுபாஸித்தலால் ஸம்பவிக்கும் அணிமாதி ஸித்திகளையும் கருதாமல் ஸச்சிதானந்த ஆத்ம ஸ்வரூப மாத்திரத்தில் பரமபக்தி வைராக்யங்களோடு கூடியவர்களான உத்தம பரிபாகிகளே தக்கவராவர்.

## அந்தர்யாமித்துவம் முதலிய ஸகுண ஸ்வரூபபேதங்கள்

இனி, இப்படிப்பட்ட உத்தம பரிபாகமிராத மற்றவர்களோ வென்னின் மாயா தர்மங்களோடு கூடிய ஸகுணேச்வர ஸ்வரூபத்தையே உபாஸிக்க வியலுமாதலால், அத்வைதமாகிய பரப்பிரும்ம தத்துவத்தை த்வைதமாகிய வ்யாவஹாரிக நிலைமையைச் சேர்ந்த அவ்யாகிருத அந்தர் யாமியாகிய ஸகுணேச்வர ஸ்வரூபமாக உபநிஷதம் கூறுகின்றது. இப்படிப்பட்ட அந்தர்யாமியினிடமுள்ள மாயா சக்தி தர்மங்கள் ஸ்தூல ஸூக்ஷ்ம தத்வங்களுக்கு அதீதமாகிய காரண தத்வமாதலால் மனோ வாக்குகளுக்கு ஸுலப மல்லாததாகிய இவ்வடிவத்தையும் எல்லோரும் சிந்திக்கத்தக்க பரிபாக முடையவர்களல்லர். ஆகையால், இதற்கும் யோக்யதை இராத குறைந்த பரிபாக முடையவர்க ளாகிய மற்றவர்க ளையும் அனுக்ரஹிப்பதற்காக முற்கூறிய மாயா தர்மங்களால் சிருஷ்டிக் கப்பட்டுள்ள ஸமஷ்டிஸூக்ஷ்ம தத்வத்தோடு வ்யாபித்து ஸமஷ்டிஸூக்ஷ்மப் பொருள்களை உபாதியாய்க் கொண்ட ஹிரண்யகர்ப்ப நிலைமையி லுள்ள ஈச்வர ஸ்வரூபத்தை உபநிஷதம் கூறுகின்றது. இனி, இதற்கும் தக்க பரிபாகமிராத முமுக்ஷு மனிதர்களை அனுக்ரஹிப்பதற்காக முற் கூறிய ஸூக்ஷ்ம தத்வங்களின் பஞ்சீகரணத்தால் ஸ்தூல சிருஷ்டியில் அமைந்துள்ள ஸமஷ்டி ஸ்தூல வஸ்துக்களான சராசரங்க ளடங்கிய ஸகலப் பிரும்மாண்டங்களையும் உபாதியாய்க் கொண்ட விராட் ஸ்வ ரூபத்தை உபநிஷதங்கள் உபதேசிக்கின்றன. எண்பத்துநான்கு லக்ஷம் வகையாயுள்ள ஜீவராசிகள் அடங்கிய ஸகலப் பிரும்மாண்டங்களிலும் வியாபித்திருக்கும் மாயா சக்தியுடன் கூடிய ஈச்வர ஸ்வரூபமே "விராட்" எனப்படும். இங்கிதனைச் சுருக்கமாயறிக. ஸர்வ காரண மாத்ரமாயுள்ள மாயா சக்தியோடு கூடிய பரம்பொருளுக்கு 'அந்தர்யாமி,' 'ஜகத்கர்த்தா' 'மஹேச்வரன்' என்பன முதலிய பெயர்களும், மாயா சக்தியால் சிருஷ்டிக்கப்பட்ட ஸமஷ்டி ஸூக்ஷ்மப் பிரபஞ்சத்தோடு கூடி யிருத்தலால் 'ஹிரண்ய கர்ப்பன்' எனும் பெயரும், ஸமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சங்களான பிரும்மாண்டங்களோடு கூடியிருத்தலால் 'விராட்' 'விச்வரூபன்' எனும் பெயர்களும் வழங்கப்படுவனவாம். இம்மூன்று நிலைமைகளும் அரசனுக்கு அரண்மனையி லிருக்கும்போது உள்ள அலங் காரங்கள் போன்றனவாம். அரூப வஸ்துவாகிய இப்படிப்பட்ட "விராட்" ஸ்வரூபத்தையும் சிந்திக்கத்தக்க பரிபாகமிராமல் பெண்டீர், பிள்ளை, புகழ், ஐச்வர்யம் முதலியவைகளில் ஆசையோடு ஈடுபட்டுக் கொண்டிருக்கும் ஸாமான்ய மாந்தர்களின் சித்தத்தையும் தன்னிடம் இழுத்து அனுக்ரஹிப்பதற்காக, அவ்விறைவனே கைலாஸ வைகுண்

டாதி உலகங்களை சிருஷ்டித்து அவ்விடங்களில் சிவ விஷ்ணுவாதி மூர்த்திகளோடு கூடியவனாய் விளங்குகின்றான். இம்மூர்த்தி விலாஸங்கள் அரசன் யானை மீதேறி வீதியில் பவனிவருதல் போன்றனவாம். இனி, கைலாஸ வைகுண்டாதிகளிலுள்ள சிவ விஷ்ணுவாதி மூர்த்திகளையும் சிந்திக்கத்தக்க பரிபாக மிராதவர்களாய் இப்பூவுலக மாத்திரத்திலுள்ள அற்ப வஸ்துக்களிடம் ஆசையால் ஈடுபட்டுழலுவோர்களாகிய மிகவும் மந்த பரிபாகிகளையும் அனுக்ரஹிப்பதற்காக இறைவன் இப் பூவுலகிலேயே ராம கிருஷ்ணாதி அவதார வேஷம் பூண்டு ஸாமான்ய மனிதர்கள்போல் நடித்துக் காட்டுகின்றான். இது அன்னமூட்டும் தாய், குழந்தை அன்னமுண்பதற்காக 'குரங்கு முகம் காட்டுதல்' முதலிய விளையாட்டுப் பராக்குகளைச் செய்வது போன்றதாம். அன்றியும் ஈச்வரனால் காமக்குரோத லோபாதிகளுள்ளவர்போல் அவதாரங்களில் நடித்துக்காட்டப்பட் டிருத்தலானது அரசன் நகர சோதனைக்காக மாறு வேஷம் பூண்டு வீதிகளில் ஸஞ்சரித்தல் போன்றதாம். அரசன் செய்யும் தர்மானுஷ்டானங்களும் அந்தரங்க மந்திராலோசனையும் ஸபையில் செய்யும் தர்பார் விசாரணையும் வீதிபவனி வருதலும் மாறு வேடம் பூண்டு நகரிசோதனைக்கு வருதலும் பிரஜைகளின் க்ஷேமத்திற்காகவே எப்படி ஏற்படுகின்றனவோ அவ்வாறே பரம்பொருளுக்கு அந்தர்யாமியாயுள்ள ஈச்வரத்வம், ஹிரண்யகர்ப்பத்வம், விச்வரூபத்வம், கைலாஸ வைகுண்டாதிகளிலுள்ள சிவ விஷ்ணுவாதி மூர்த்தத் தோற்றம், ராமகிருஷ்ணாதி அவதார விலாஸம் முதலிய ஸகலமும் பலவித பரிபாகமுள்ள ஜீவாத்மாக்களின் அனுக்ரஹார்த்தமாகவேயாகும் என்பதே அறியவேண்டிய உண்மை.

## ஸகுண ப்ரும்மத்தின் அவதாராதிகள் மனிதர்களின் அநுக்ரஹார்த்தங்களே

இங்கிது சுருக்கமாயறிக. அதாவது பரமார்த்தத்தில் நிர்க்குணமாய் அத்வைதமாய் மாயாசக்தி ஸம்பந்தமிராததாயுள்ள பரப்ரும்மதத்வமே வ்யாவஹாரிகமாகிய மாயாசக்தியோடு கூடி ஸகுணமாகிய ஸர்வேச்வர தத்வமாயுள்ளது. மாயாச்க்தியும் அரூபதத்வமே. அதனோடு கூடிய ஸச்சிதானந்த ஸ்வரூபமும் அரூபமே. அந்த ஈச்வரனே தன்னிடமுள்ள மாயாசக்தி மஹிமையால் ஸூக்ஷ்ம பூதங்களையும் ஸகல ஸூக்ஷ்ம சரீரங்களையும் ஸ்ருஷ்டித்து அவைகளோடு கூடியவராய் ஹிரண்ய கர்ப்பனெனும் பெயருடையவ ராகின்றார். பிறகு ஸ்தூல பூதபௌதிக ப்ரும்மாண்டங்களை ஸ்ருஷ்டித்து அவைகளோடு கூடி விராட் வைச்வானரன் விச்வரூபன் எனும் பெயர்களால் வழங்கப்படுகின்றார். அவ்

விறைவனே, தான் அரூபப் பொருளாகவே இருந்தால் மந்தமதிகளுக்கு நற்கதிக்கிடமிரா தெனும் உண்மைபற்றியே கைலாஸ வைகுண்டாதிகளை ஸ்ருஷ்டித்து சிவ விஷ்ணுவாதி மூர்த்திபேதங்களோடு கூடி ஸரூப ஸகுண மூர்த்தியாயிருக்கின்றார். அதுவும் மிக்க மந்தமதிகளால் உபாஸிக்க இயலாதெனக் கண்டு ராமக்ருஷ்ணாதி அவதாரங்களை எடுத்து அருளுகின்றார். ஆதலால் மாயாசக்தியோடு கூடியது முதலாக அவதார வடிவமிறுதியாகவுள்ள நிலைமைகள் ஸகலமும் ஸகுணம் எனப்படும். ஸகுணத்தைச் சேர்ந்த ஸகல நிலைமைகளும் நிர்க்குணமாய் பரமார்த்தமாயுள்ள அத்வைத தத்வத்தை அறிந்து மோக்ஷம் பெறுவதன் பொருட்டாகவே எனும் உண்மையை அறிந்துகொள்ள வேண்டும்.

## உபநிஷத ப்ரும்ம ஸூத்ரங்களில் ஸகுணம் சொல்லப்பட்டிருத்தல் நிர்க்குண ப்ரும்ம ஞாநார்த்தமாகவும் உபாஸநார்த்தமாகவுமாம்

நிர்க்குணமாகிய அத்வைத தத்வத்தை ஸகுணமாகிய பரம் பொருளை யறிந்தாலொழிய அனுபவிக்க இயலாது. ஆதலால் ஜகத் கர்த்தாவாகிய அரூப ஸகுணத்தைக் காட்டியே வேதாந்தமானது அத்வைத தத்வத்தைப் போதிக்கின்றது. அன்றியும் ஸகுணனை இறைவனது மாயாசக்தி விலாஸங்களை உபாஸித்து அநுக்ரஹம் பெற்றவரே நிர்க்குண ப்ரும்மத்தை அறிவதற்கு வேண்டிய அவச்யமாயுள்ள வைராக்யாதி ஸாதநங்களையுடையவராவர். ஆதலால் ஸகுணப்ரும்ம உபாஸ்தியும் அவச்யமாயுள்ளது.

இவ்விதம் உபாஸநார்த்த மாகவும் அத்வைத தத்வஞாநார்த்த மாகவும் எனும் இரண்டு காரணங்களைக் கொண்டு ஸகுண ஸ்வரூபம் உபதேசிக்கப்படுகிற தெனும் ப்ரும்ம வித்யையிலுள்ள ரஹஸ்யத்தை சங்கர பகவத்பாதாசார்ய ஸ்வாமிகள் முதலியவர்களது பாஷ்யாதி நூல்களில் நன்கறியலாம். அதாவது,

"ஏகமேவ ப்ரஹ்ம வெகதிஶொ மாயிஸம்ப3ந்தம் நிர
ஷாமாயி ஸம்ப3ந்த4ம்வ உபாஸ்யவெந ஜ்ஞெயவெந வெதா
ந்தேஷு உபதிஶ்யதெ"

"ப்ரும்மம் ஒன்றேயாயினும், மாயாசக்தி உபாதியுடையதாகவும் மாயா சக்தி ஸம்பந்த மிராததாகவும் உபாஸனைக்காகவும் ஞானத்திற்காகவும் வேதாந்தங்களில் உபதேசிக்கப்படுகின்றது" என "ஸூத்ரபாஷ்ய"

எனும் ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் உள்ள வாக்கியங்களைக் காண்க. அன்றியும் அந்த ஸூத்ர பாஷ்யத்திலேயே

𑌦𑍍𑌵𑌿𑌰𑍂𑌪𑌂 𑌹𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇 𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌵𑌿𑌕𑌾𑌰𑌭𑍇𑌦𑍋𑌪𑌾𑌧𑌿
𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌂 𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑍀𑌤𑌂 𑌚 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌮𑍍.

"ப்ரும்மம் இருவுருவ முடையதென அறியப்படுகின்றது. நாமரூப விகாரமாகிய ப்ரபஞ்ச ஸம்பந்தமான குணங்களை யுடையதாகவும் அதற்கு எதிரிடையாய், ஒருகுணமுமிராத தெனவுமாம்."

𑌤𑌤𑍍𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌯𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑍋𑌪𑌾𑌸
𑌕𑌾𑌦𑌿𑌲𑌕𑍍𑌷𑌣𑌃 𑌸𑌰𑍍𑌵𑍋 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 | 𑌤𑌤𑍍𑌰 𑌕𑌾𑌨𑌿𑌚𑌿𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣 𑌉𑌪𑌾𑌸𑌨𑌾
𑌨𑍍𑌯𑌭𑍍𑌯𑍁𑌦𑌯𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 | 𑌕𑌾𑌨𑌿𑌚𑌿𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 | 𑌕𑌾𑌨𑌿𑌚𑌿𑌤𑍍𑌕𑌰𑍍𑌮
𑌸𑌮𑍃𑌦𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 |

அங்கு அவித்யாவஸ்தையில், ப்ரும்மம் உபாஸிக்கப்படும் பொருள், நான் உபாஸகன் என்பதாதி வடிவமான ஸகல வியவஹாரமுமாம். அதில் சில உபாஸனைகள் காமசாராதி அணிமாதி ஸித்திகளைப் பயனாக உடையன. (அதாவது ப்ரதிகோபாஸ்திகள்) சில உபாஸ்திகள் ப்ரும்மலோக ப்ராப்தி மூலமாக மோக்ஷபயனை உடையன. சில உபாஸ்திகள் கர்மாக்களை ஸம்ருத்தி செய்விப்பன.

𑌏𑌕 𑌏𑌵 𑌤𑍁 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌤𑍈𑌸𑍍𑌤𑍈𑌰𑍍𑌗𑍁𑌣𑌵𑌿𑌶𑍇
𑌷𑍈𑌰𑍍𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑍋 𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌭𑌵𑌤𑌿 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌯𑌥𑌾
𑌗𑍁𑌣𑍋𑌪𑌾𑌸𑌨𑌮𑍇𑌵 𑌫𑌲𑌾𑌨𑌿 𑌭𑌿𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇.

"பரமாத்மாவாகிய ஈச்வர னொருவனாகவே இருந்துகொண்டு அவ்வக் குண விசேஷங்களோடு கூடியவனாய் உபாஸிக்கப் படுகின்றானாயினும் அவ்வக்குணோபாஸனைகளுக்குத் தகுந்தபடி பயன்களும் வெவ்வேறாகின்றன" என்பவை முதலிய வாக்கியங்களால் சங்கர பகவத்பாத ஸ்வாமிகளால் இவ்விஷயம் சொல்லப்பட்டிருக்கின்றது. தவிரவும் ஷை பாஷ்யத்திற்கு வியாக்யான கர்த்தாவாகிய வாசஸ்பதி மிச்ர ஆசார்யராலும் ஸகுணத்தைக் காட்டியே நிர்க்குணம் உபதேசிக்கக் கூடியதென்பதும்,

"𑌯𑌦𑍍𑌯𑌪𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿 𑌰𑍂𑌪𑌂
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨 𑌤𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣𑍋𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑌂 𑌶𑌕𑍍𑌯𑌮𑌿𑌤𑌿
𑌉𑌪𑌹𑌿𑌤𑍇𑌨 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌉𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿"

"உண்மையில் எந்தவிதமான உபாதியுமிராத வடிவம் ப்ரும்மம். அவ்வித

மாயினும் அந்த ஸ்வரூபம் உபதேசிக்க இயலாததென்பதனுல் குண விசேஷத்தோடு கூடிய ரூபத்தைக்கொண்டே உபதேசிக்க ஸாத்தியம் என்பதுகொண்டு" என்பவை முதலிய வாக்கியங்களினுல் வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஸகுணத்தை அறியாமல் நிர்க்குணமறிய இயலாது

மாயா சபளமாகிய ஸகுணமென்பது திவ்யகுணங்களுடன் கூடிய பரம்பொருள் ஆகையால் அந்த குணங்களை அறிந்துகொண்டால் அவனுடைய நிர்க்குண ஸ்வரூபத்தில் சித்தத்தைச் செலுத்த இயலும். மாயா குணங்களை விட்டுப்பிரிந்த நிர்க்குண சைதந்யத்தில் சித்தத்தைச் செலுத்துவது முற்கூறிய உபாஸனையின்றி ஒருபோதும் ஸாத்தியமாகாது. கீதையில் பனிரண்டா மத்தியா யாரம்பத்தில் பிரஸ்தாபிக்கப்பட்ட விஷயமொன்றை இங்கு கவனிக்கவேண்டும்.

ഏവം സതതയുക്താ യേ ഭക്താസ്ത്വാം പര്യുപാസതേ
യേ ചാപ്യക്ഷരമവ്യക്തം തേഷാം കേ യോഗവിത്തമാഃ.

"இவ்வாறு திவ்யமாயா சக்தியுடன்கூடிய ஸகுணனை உன்னை எந்த பக்தர்கள் உபாஸிக்கின்றனரோ, ஸர்வோபாதி ஸம்பந்தங்களும் அற்ற நிர்விசேஷமாகிய நிர்க்குணமாகிய அவ்யக்த அக்ஷர வஸ்துவாயிருக்கும் உம்முடைய ஸ்வரூபத்தை எவர் உபாசிக்கின்றனரோ இவ்விருவர்களுள் எவர் சிறந்தவர்" என வினவிய அர்ஜுனனுக்குப் பகவான் மாயா சபளமாகிய தனது ஸகுண ஸ்வரூபத்தை உபாஸிப்பதே சிறந்ததென்பதை,

മയ്യാവേശ്യ മനോ യേ മാം നിത്യയുക്താ ഉപാസതേ
ശ്രദ്ധയാ പരയോപേതാസ്തേ മേ യുക്തതമാ മതാഃ.

"ஸர்வக்ஞனும் விஸ்வரூபனும் ஸகுணனுமான என்னிடம் ச்ரத்தையோடுகூட எவர் மனஸைச் செலுத்தி உபாஸிப்பவர்களோ அவர்களே உத்தமர் என எனக்கு அபிமதர்களாம்" எனும் ச்லோகத்திஞல் உபதேசித்திருக்கிருர். எனிப்படி எனும் சங்கை நிகழ,

ക്ലേശോഽധികതരസ്തേഷാമവ്യക്താസക്തചേതസാം.

"தேஹாபிமான முள்ளவர்கள் அந்த நிர்க்குண ஸ்வரூபத்தில் சித்தத்தைச் செலுத்துதல் மிகவும் க்லேசத்திற்கே ஹேதுவாகும்" என வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நாலைந்து ஆள் பிரமாண ஆழமுள்ள அகாத ஜலத்தில் ஒருவர் நீந்திக்கொண் டிருக்கிறதாக வைத்துக் கொள்வோம். அவரிடம் நீந்தக் கற்றுக்கொள்ள வேண்டுமென நீந்தத்

தெரியாத மற்றொருவன் விரும்புகிறான். அப்படி விரும்புவோன் கரையிலிருக்கிறான். 'எனக்கு நீந்தக் கற்றுக்கொடுங்கள்' என அவன் மிகவும் அகழத்தில் நீந்திக்கொண் டிருப்பவரை வேண்டுகிறான். நீந்தத் தெரிந்தவர் தாம் நீந்திக்கொண்டிருக்கும் அகழத்திலிருந்துகொண்டே 'இங்குவா, நீந்தக் கற்றுக்கொடுக்கிறேன்' எனச்சொல்லுவாராயின் நீந்தத் தெரியாதவன் அவ்வகழத்துக்குச் செல்ல ஸாத்தியப்படுமா? அல்லது கரையிலிருப்பவன் "நான் ஜலத்தில் இறங்கமாட்டேன். கரையில் நீங்கள் வந்து நீந்தப் பழக்கிக்கொடுங்கள்" என்பானாயின் அதுதான் ஸாத்தியப் படுமா? இரண்டும் அஸாத்தியமே. கற்றுக்கொள்ள விரும்புவோன் கரையைவிட்டு ஜலத்தில் இறங்கியே யாகவேண்டும். கற்றுக்கொடுப் பவரும் தாம் நீந்திக்கொண்டிருக்கும் ஆழத்தைவிட்டு மாரளவு கழுத் தளவு ஆழமுள்ள இடத்திற்கு வந்தே யாகவேண்டும். அதுபோல மாந்தர், மனஸுக்குத் தோன்றியவாறே நடந்துகொண்டிருத்தலாகிய தமது ஸாதாரண நிலைமையைவிட்டு விதிவரம்பு மீறாது நடந்துகொள்வ தாகிய கர்மயோக நிலைமையி லிறங்கவேண்டும். அப்படிப்பட்டவர்களை அநுக்ரஹிப்பதற்கென மாயாசக்தியோடு கூடிய ஜகத்காரண வஸ்து வாகிய ஸர்வக்ஞ ஸர்வேச்வர ஸகுண ஸ்வரூபம் உள்ளது. ஆதலின் அந்த ஸ்வரூபத்தை அறிந்து பக்தியோகத்தில் ஈடுபடுதலாகிய அப்பியா ஸத்தைச் செய்தால் அவ்வப்பியாஸம் முதிர்ச்சிபெறின் ஸம்ஸாரமாகிய மஹாநதியைக் கைநீச்சாக நீந்திக் கரையேறிவிடலாம்.

நிர்க்குண ப்ரும்ம ஸ்வரூபம் அகாதமான அகழம் போன்றது. ஸகுண ஸ்வரூபம் நீந்தக் கற்றுக்கொள்ளத் தகுந்த மிதமான அகழம் போன்றது. ஆதலால் மிதமான அகழத்திலிருந்து கற்றுக்கொண்டபிறகே அகாதமாகிய அகழத்தில் நீந்தவேண்டும். அதுபோலவே ஸகுண ஸ்வ ரூபத்தில் சித்தத்தை நிறுத்தி யப்பியாஸம் கைகூடி ஈச்வராநுக்ரஹத்திற் காளானால் நிர்க்குணமாகிய அத்வைத ஸ்வரூபத்தில் சித்தம் செல்லப் பெறலாம். இனி ஸகுணம் நிர்க்குணம் எனும் இவ்விரண்டையும் நன்றாய் விவேகித்துக்கொள்ளத்தக்க அடையாளங்களை இவ்வித மறியவேண்டும்.

## ஸகுண நிர்க்குண வாக்கியங்களின் அடையாளம்

பரமாத்மா ஹ்ருதயகமல தஹராகாசத்தி லுள்ளவன், நேத்திரத்தி லுள்ளவன், ஜடராக்நியிலுள்ளவன், மனத்தில் வியாபித்துக்கொண்டு ப்ராணனை சரீரமாய்க் கொண்டவன், ஆதித்திய மண்டலத்திலுள்ளவன் என்பதாதி ஸ்தாநவிசேஷ ஸம்பந்தமாவது, ஸத்தியகாமன் ஸத்திய ஸங் கல்பன், கர்மபலதாதா, ஜகத்கர்த்தா, ஸர்வக்ஞன், என்பதாதி குண விசேஷ ஸம்பந்தமாவது, ப்ரணவம் அவனுக்கு தேஹம், காயத்ரி அங்

க்ம், நாமா அவனுக்கு அங்கம் என்பதாதி ப்ரதீக விசேஷ ஸம்பந்தமா வது சொல்லப்படுமாயின் அங்கு ஸகுணனாகிய பரம்பொருள் அர்த்த மென்க் கண்டுகொள்ளவேண்டும். உண்மையில் இப்படிப்பட்ட ஸம்பந் தங்கள் சிறிதும் சொல்லப்படாமல், அவனுக்கு அந்நியமாகிய பொருள் இல்லவேயில்லை அவன் குணக்கிரியாதிகள் இராதவன். அவனிடம் எல்லாம் கயிற்றில் ஸர்ப்பம்போல கற்பிதம் என்பதாதி வாக்கியங்கள் நிர்க்குணத்தை அர்த்தமாய்க் கொண்டவை என்பதாக அறியத்தக்கது. முற்கூறிபபடி ப்ரதேச விசேஷ ஸம்பந்தமாவது குணவிசேஷ ஸம்பந்த மாவது ப்ரதீகவிசேஷ ஸம்பந்தமாவது ஸகுணத்தைக் குறிப்பதெனும் இந்த உண்மையானது.

ஸர்வ்த்ர ப்ரஸித்த்யுபதேஶே ஸர்வகதஸ்யாபி ப்ரஹ்மண உபாஸநார்த்தஃ ப்ரதேஶவிஶேஷபரிக்ரஹஃ । யத்ர து குண விஶேஷ ஸம்பந்தோ வா ப்ரதீகவிஶேஷஸம்பந்தோ வா ப்ரஹ்மணோ வதிஶ்யதே.

"எங்கு முள்ளதாகிய ப்ரம்மத்திற்கு ப்ரதேசவிசேஷ ஸம்பந்தம் சொல் லப்படுமாயின் அது உபாஸனார்த்தமேயாம். எங்கு குணவிசேஷ ஸம் பந்தமாவது ப்ரதீக விசேஷ ஸம்பந்தமாவது சொல்லப்படுகின்றதோ" என்பவை முதலிய வாக்கியங்களால் ப்ரும்ம ஸூத்ரம் ஜ்யோதிஸ் சரணாதி கரணபாஷ்யத்தில் சங்கர பகவத்பாத ஸ்வாமிகளால் உபதேசிக்கப்பட் டிருக்கின்றது. பரமாத்ம ஸ்வரூபத்தைப்பற்றி இந்த மூன்றும் பாகத் தில் இதுவரையிலும் செய்த ஆராய்ச்சியால் ஸகுணமென்பது சிவ விஷ்ணுவாதி மூர்த்தப்பொருளே எனவும், அமூர்த்தமாயுள்ளது நிர்க் குண ப்ரம்மமே எனவும் எண்ணுதலுக்கு ஹேதுவாகிய விபரீதமான ஞானமொழிந்து அவனை உள்ளபடி அறிந்துகொள்ளலாம். அதாவது அமூர்த்தனாய் ஸர்வ ஜகத்காரணனாய் ஸர்வாந்தர்யாமியாய் திவ்யமாயா சக்தி யவச்சின்னனாய் மனோவாக்குகளுக் கெட்டாத மஹிமை யுடை யோனாய் புத்திகளில் பிரதிபிம்பித்திருக்கும் சிதாபாஸர்களான ஜீவான் மாக்களுக்கு ஆதாரத்தலைவனாய் ஸகல ஜீவர்களுக்கும் கர்மபல தாதா வாய் ஸர்வஸாக்ஷியாய் ஆகாசத்திலும் நுட்பனாய் ஸர்வக்ஞத்வாதி குண விசேஷங்களை யுடையவனாய் எங்கும் வியாபகனாய் ஸுக நிதியாயுள்ள பொருளே ஸகுணமெனப்படுவது என்பதாகிய நிச்சயமான ஞானமே பரமாத்மாவைப்பற்றிய யதார்த்த ஞானமாகும். இப்படிப்பட்ட ஞான முதித்தால் ஈச்வரனை நன்கறிந்து செய்வதாகிய உபாஸனை கைகூடும்.

இனி உபாஸனையாவது யாதெனின் அதனை இதற் கடுத்ததா யுள்ள பாகத்தில் கூறுவாம்.

பரமாத்ம ஸ்வரூபம் எனும் மூன்றும் பாகம் முற்றிற்று.

## நான்காம் அத்தியாயம்

# ஈஸ்வரோபாஸனை

ஈஸ்வரோபாஸனையாவது யாது எனும் விஷயத்தைப் பற்றிய விசாரணை இப்போது பிரகிருதம். முந்திய அத்தியாயத்தில் ஈஸ்வர ஸ்வரூபம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. ஈஸ்வர ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டதோடு மாத்திரம் நிறுத்திவிடக் கூடாது. தெரிந்து கொண்டதன் பயன் உபாஸனையே. ஈச்வரனுடைய தன்மைகளை நினைத்து மனமுருகி சித்தத்தை அவ்விறைவனிடத்திலேயே ஸதா செலுத்திக் கொண்டிருத்தலே உபாஸனை யெனப்படும். "உபாஸநம் நாம ஸமாந ப்ரத்யய ப்ரவாஹகரணம்". "ஈஸ்வர ஸ்வரூபாகாரமாகிய சித்தவிருத்தியையே வேறு சிந்தனைக்கு இடையில் இடங்கொடாமல் பிரவாஹம் போலத் தொடர்ச்சியாயிருக்கும்படி அப்பியஸித்தலாம்" என அதன் லக்ஷணம் ஆன்றோர்களால் கூறப்பட்டிருக்கிறது.

### ஈச்வரசக்தியின் பிரிவு

ஸர்வேச்வரனென வழங்கும் பொருள் மாயாவிசிஷ்டமாயுள்ள ப்ரும்மமே. அவ்விறைவனது ஸ்வரூபம் ஒப்புயர்விராத ஆனந்தம். அவனே சராசரங்களாயுள்ள ஸகல பொருள்களிலு மிருப்பவன். மனோ வாக்குகளுக்கு அடங்காத அற்புதக் கிரியைகளைச் செய்யும் சக்தி அவனிடமுளது. அந்த சக்திதத்வம் ஒரே வஸ்துவாயிருக்கினும் அதனால் நடைபெறும் செயல்களை நோக்க ஸர்வக்ஞ சக்தி, நித்தியத்ருப்தி சக்தி, அனுதிபோத சக்தி, ஸ்வதந்த்ர சக்தி, அலுப்த சக்தி, அனந்த சக்தி என ஆறு வகையாய்ப் பிரித்து விசாரிக்கத்தக்கதாயுள்ளது. இந்த ஆறு விதமாயுள்ள சக்தியே இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி எனவும் பிரிக்கப்பட்டு மூவகையாக நிரூபிக்கப்படுகின்றது. ஸர்வக்ஞத்வாதிப் பிரிவு ஒவ்வொன்றிலும் குருமுகமாக விசாரணை செய்துபார்த்தால் அவாந்தரங்களாயுள்ள உட்பிரிவுகள் பலவகையாய் அடங்கியிருப்பவை என்பதை அறியலாம்.

ஸர்வக்ஞத்வாதி அவாந்தரப் பிரிவு ஒவ்வொன்றிலும் அறிய வேண்டியனவாகிய சக்திக்கிரியா விசேஷங்களை நம்போன்றவர் அறிந்து

உஜ்ஜீவிதாராவதன்பொருட்டு தூர்வாஸமாமுனிவர் முதலிய ஆன்றோர் பரசம்பு மஹிமஸ்துதி முதலிய நூல்களில் விபரமாகக் கூறியிருக்கின்றனர். தேவீபாகவதம் யோகவாஸிஷ்டம் சிவரஹஸ்யம் முதலிய புராணேதிஹாஸ க்ரந்தங்களிலும் ஸர்வ ப்ரமாணங்களுக்கும் முதற் பிரமாணமாயுள்ள ருக் யஜுஸ் ஸாம அதர்வ ச்ருதிகளிலும் இவ்விஷயம் விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. தற்காலம் உபாஸனை யின்றி வெறும் வேதாந்த ஆராய்ச்சி மாத்திரம் மிஞ்சியிருத்தலால் நாம் அவைகளை விபரமாக அறிந்துகொள்ள இடமிராமற் போய்விட்டது.

## சிவசக்தித்த்வ ஞானக் கிரியைகள்

ஈச்வரனுக்குள்ள ஸகல மஹிமைகளும் இங்கு சொல்லப்படுவதாகிய பராசக்தியாலேயே. சக்தியானது ஆதாரமின்றி நிராதாரமாக இராதாதலால் இங்கு சொல்லப்படும் பராசக்திக்கும் ஓர் ஆதாரவஸ்து இருக்க வேண்டுமென்பது நிர்ணயம். சக்திக்கு ஆதாரம் சிவமெனப்படும் பொருளே. சிவமே ஸச்சிதானந்த வஸ்து. அந்த வஸ்து ஈஸ்வரனுயிருத்தல் சக்தியாலேயே. இந்த ரஹஸ்யம் அவச்யம் இங்கு அறிந்து கொள்ள வேண்டியது. ஈச்வரன் தன்னிடமுள்ள சக்தி தத்வத்தாலேயே தன்னையும், தன் சக்தியையும், தன் சக்தியின் செயல்களாகிய மாயா வ்ருத்திகளையும் அறிகின்றவனுயுளன். அந்த சக்தித்வமானது தனக்கு ஆதாரமாயுள்ள சிவதத்வத்தையும், தன்னால் நிர்மிக்கப்பட்டிருக்கும் ஸகல சராசரப் பிரபஞ்சங்களையும், தன்னையும் தனக்கு ஆதார வஸ்துவாகிய சிவதத்வ ஸாந்நித்யத்தாலேயே அறிந்துகொண்டிருக்கின்றது. கட்டையும் அக்நியும் கூடியே நெருப்பெனப் பெயர் பெற்றிருத்தல் போல சிவசக்தி தத்வங்களிரண்டும் அவினாபாவமாகச் சேர்ந்தே ஈச்வரனென வழங்கப்படுகின்றது. அந்த சக்தி தத்வமானது மந்தமதிகளிடம் கருணாவிசேஷத்தினால் ஜகத்துக்குத் தாய் தந்தையர்களாயுள்ள ஸ்த்ரீ புருஷவடிவங்களைப் பெற்றுளது. அவ்விதம் ஆதிதம்பதி வடிவங்களோடு விளங்குகின்ற தாயினும் சக்தி தத்வமானது ஸகல ஜகங்களிலும் வியாபகமாயுள்ள அருபவஸ்து என்பதே உண்மை. ஈச்வரனுடைய இப்படிப்பட்ட உண்மை ஸ்வரூபத்தை பிரீதியோடு சிந்தித்தலே உபாஸனை யெனப்படும்.

## உபாஸனையில் சிந்திக்கவேண்டிய குணங்கள்

அதாவது ஸகல ஜகங்களுக்கும் கர்த்தாவும் ஜகத்தில் அடங்கியுள்ள ஸூர்ய சந்திர க்ருஹ நக்ஷத்ராதிகளுக்கும் ப்ருதிவி அப்பு அக்நி

வாயு ஆகாசம் முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் அவ்வப்பொருள்களின் கிரியைகளுக்குத் தக்க சக்திகளைத் தந்துகொண்டிருப்பவனும், அவ்வப் பொருள்களை ஓர் நியமத்தினின்றும் மீறுமலிருக்கும்படி ஆக்ஞையைச் செய்துள்ளவனும், ஸகல ஜீவர்களின் கர்மாக்களையும் எப்போதும் கவனித்துக்கொண்டு அவைகளுக்குத் தக்க பயனை அவர்களால் மீறமுடியாமல் அளித்துக்கொண் டிருப்பவனும், ஸர்வக்ஞனும், நித்ய திருப்தனும், அனுதி போதனும், ஸ்வதந்திரனும், அலுப்தசக்தனும், அனந்தசக்தனும், தர்மாதர்மங்க ளிராதவனும், தேஹேந்திரிய ப்ராணமனுதிக ளிராதவனும், தேஹாதிகளிராமையால் பசிதாக ஜராமரணுதிகளுக்கு இடமில்லாதவனும், தன்னிடமுள்ள மாயை எனும் அற்புத சக்தியால் ஈஸ்வரத் தன்மைக்குரிய ஸகல ஆற்றல்களையும் வஹிப்பவனும், நித்யமுக்த சுத்த ஸச்சிதானந்த வடிவனும், ஸகல சராசரங்களிலும் அந்தர்யாமியா யிருந்துகொண்டு அவைகளை நடத்திக்கொண்டிருப்பவனும், ப்ராகிருத ப்ரளயத்தின் இறுதியில் ப்ரும்ம தேவனைத் தோன்றுவித்து அவனுக்கு வேதங்களை அனுக்கிரஹிப்பவனும், ஸத்திய காமனும், ஸத்திய ஸங்கல்பனும், ஸகல ப்ராணிகளுக்கும் ஸுஷுப்தியில் தனது ஸ்வரூப ஸுகத்தைத் தருவோனும், தன்னிடம் தவிர மற்ற வஸ்துக்களில் செல்லவிடாமல் ஏகாக்ரமாக சித்தத்தை நிறுத்தி யப்பியஸித்தலாகிய உபாஸனையைச் செய்கின்றவர்களின் அனந்த கோடி ஜந்மங்களில் அனுதியாயுள்ள இந்த ஸம்ஸாரத்தில் ஸம்பாதிக்கப்பட்டிருக்கும் கர்மராசிகளை ஒழியச்செய்கின்றவனும், தன்னை யுபாஸிப்பவர்களுக்கு உபாஸ்தி மிகவும் முதிர்ச்சிபெற்றுல் அணிமாதி ஸகல ஸித்திகளையும் அருளுகின்றவனும், தனது அனுக்ரஹத்தினுல் நிர்க்குணமாகிய தனது ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்தலாகிய அபரோக்ஷ ஞானத்தைத் தந்து கைவல்ய முக்தியை அருளுகின்றவனுமாய், எங்கும் வியாபகமாயுள்ளவனும், கண் காது முதலிய இந்திரியங்களுக் கெட்டாதவனும், சுத்தமான மனம் ஒன்றுக்கே எட்டுகின்றவனும், தனது மாயாசக்தியால் சிவ விஷ்ணுவாதி சரீரங்களோடு தோன்றும் மஹிமையுடையவனும், ஏகாக்ரமாயும் நம்பிக்கையோடும் எந்த ரூபத்தை அவன் வடிவமாகச் சிந்திப்பார்களோ அந்த ரூபத்தோடு அவர்கள் முன்னிலையில் தோன்றுகின்றவனுமான மஹிமையுடையோன் இவனென நிச்சயித்துக்கொண்டு அவனை ஏகாக்ரமாகச் சிந்திக்கவேண்டும்.

## ஈச்வரனை அபின்னமாகச் சிந்தித்தல்

இனி இப்படிப்பட்ட திவ்ய மஹிமையுள்ள இறைவனைத் தன்னிலும் அந்நியனுக எண்ணி பேத பாவனையோடு உபாஸிப்பதா? அல்

ல்து இவ்விஷயவனே யான் என அபேதமாக உபாஸிப்பதா? எனும் ஸந்தேஹம் நிகழும். அதனுண்மை இவ்வித மறிக. உலகில் உள்ளதை உள்ளபடி சிந்தித்தல் ஒன்று. அப்படி யல்லாமல் வஸ்துவின் உண்மை ஓர் விதமாயிருக்க அதைவிட்டு வேறு விதமாய்ச் சிந்தித்த லொன்று. இவ்விரண்டு விதமான சிந்தனைகளுள் யதார்த்தமாக அதாவது உள்ளதை உள்ளபடி சிந்தித்தலாகிய யதார்த்த பாவனையே சிறந்த தென்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. சிந்திப்பவனது ஜீவாத்மாவாகிய நான் எனும் வஸ்து பரமாத்மாவைக் காட்டிலும் வேருக இருப்பின் வேருகவே சிந்திக்கவேண்டும். அப்படியின்றி ஜீவாத்மப்பொருளை விசாரித்து ஆராய்ந்து பார்க்கும்போது அது பரமாத்ம ஸ்வரூபமாகவே ஏற்படுமாயின் பரம்பொருள் யானே என்பதாகவே உபாஸிக்கவேண்டும். ஆதலால் அப்படிப்பட்ட விசாரணையைச் செய்து உண்மையைக் கண்டு கொள்வது உசிதம்.

ஜீவாத்மாவாகிய நான் எனும் வஸ்து இந்த தேஹமே என்பதாக நமக்குத் தோன்றுகிறது. அனுபவத்திலும் அப்படியே வந்துகொண்டிருக்கிறது ஆயினும் சற்று விசாரணையைச் செய்து பார்த்தால் அது நான் அல்ல. தேஹம் பஞ்சபூத பரிணமம். தந்தையின் சரீரத்தினின்றும் வெளிப்பட்ட சுக்லம், தாயின் சரீரத்தைச் சேர்ந்த சோணிதமெனும் இவ்விரு வஸ்துக்களின் சேர்க்கையா லுண்டாய், அன்னபாஞதிகளால் வளர்ந்து, மண் முதலிய பஞ்சபூதங்களோடு சேர்ந்து மடிந்து போவதாகிய நச்வரப்பொருளே இந்த தேஹம், என்பதாக விவேகத்தினுல் நிச்சயிக்கப்படுகின்றது. ஆனுல் இவ்வுண்மை ஞானமானது அனுபவத்தில் வருவது அஸாத்தியமாகின்றது. அதற்குக் காரணம் நம்முடைய சித்தத்தில் அனுதி காலந்தொட்டுத் திடமாக ஊன்றிப் பிரவாஹம்போல வந்துகொண்டிருக்கும் பாபகர்ம பாபவாஸனைகளே. பல ஜன்மங்களாக இதற்கு முன் பாபகர்ம வாஸனைகள் ஏற்பட்டிராமல் ஸத்கர்மங்களைச் செய்து ஈச்வரனிடம் பக்தியோடு சித்தம் தெளிவுபெற்றதா யிருக்குமாயின் தேஹம் நானல்ல எனும் நிச்சயஞானம் அனுபவத்திலும் வந்திருக்கும். அப்படிப்பட்ட சித்தசுத்தி நமக்கு ஏற்பட்டிராததால் அது நானல்ல எனும் நிச்சயம் அனுபவத்தில் வருகின்றதில்லை. அது போலவே இந்த தேஹத்திற் குள்ளிருக்கும் ஜீவாத்மாவின் உண்மை ஞானம் அனுபவத்தில் வருகின்றதில்லை. ஜீவாத்மாவாவது புத்தியில் பிரதிபிம்பித்திருக்கும் பரமாத்மவஸ்துவின் பிரதிபிம்பமே என ஏற்கெனவே இந்நூலில் விபரமாகச் சொல்லி இருக்கிறோம். அதனை மீண்டு மிங்கு கூறவேண்டிய தவசியமல்ல.

## பிரதிபிம்பம் பிம்பத்திலும் வேறல்ல

இனி பிரதிபிம்பம் ஆதாரப்பொருளாகிய பிம்பத்திற் கந்நியமா? அல்லது பிம்பவஸ்துவேயா? என ஆராய்ந்து பார்ப்போமாயின், தோற்றத்திற்கு மாத்திரம் வேறாகக் காணப்படுகின்றதேயன்றி உண்மையில் ஆதாரப் பொருளாகிய பிம்பவஸ்துவே என்பது இனிது விளங்கும். கண்ணாடிக்குள் காணப்படுகின்ற பிரதிபிம்ப முகம் உண்மையல்ல. உண்மையெனின் கண்ணாடியின் கனம் எவ்வளவு? முகத்தின் பருமன் எவ்வளவு? சிறிய கண்ணாடியில் அவ்வளவு பருமனுள்ளதாகிய முகம் எப்படி அடங்கியதாகும்? என்பதை யோசிக்கவேண்டும். அந்த ஆலோசனை செய்தால் பிரதிபிம்பமென்பது தோற்ற மாத்திரமே எனவும் அதனுண்மை ஸ்வரூபம் பிம்பமே எனவும் நிச்சயமாகின்றது. இந்த நியாயத்தின்படி பிரகிருதத்தைக் கவனித்தால், பரமாத்மப் பிரதிபிம்பமாகப் புத்தியிலுள்ள சிதாபாஸனாகிய நான் எனும் பொருள் அதற்கு ஆதாரப் பொருளாயிருக்கும் பிம்பமாகிய பரமாத்ம வஸ்துவுக்கு அந்நியமல்ல என்பது நிர்ணயமாகின்றமையால் பரம்பொருளை "யான் இவ்விறைவனே" என அபேதமாகவே உபாஸிக்கவேண்டும் என்பதறிக.

## அபேதத்தில் ஸுகம் என்பதற்கு உலகநியாயம்

லௌகிக நியாயத்தின்படி பார்த்தாலும் பரமாத்மாவை அபிந்நமாக உபாஸிப்பதே உசிதம் என்பது விளங்கும். அதாவது, அறிமுகமுள்ள மனிதனை நாம் "உங்கள் வீட்டில் எல்லாரும் க்ஷேமமா"? என பேத பாவனையோடு வினவுவதைக் காட்டிலும் "நம்மாத்தில் எல்லாரும் க்ஷேமமா?" என அபேத பாவனையோடு வினவுதல் சிறந்ததென்பதை சொல்லவேண்டியதில்லை. ஒருவன் நம்மை "என் வீட்டில் நீங்கள் போஜனம் செய்யவேண்டு"மென பேத பாவனையோடு கூப்பிடுவானாயின் அதனைக்காட்டிலும் "நம்மாத்திலேயே தாங்கள் போஜனம் செய்யவேண்டும்" என அபேதமாகிய பாவனையோடு அழைப்பவனிடம் பிரீதி அதிகமாகவே ஏற்படுகின்றது.

இங்கு த்ருஷ்டாந்தமும் கவனிக்கத்தக்கது. வழி நடப்பவனொருவன் தலையில் சோற்று மூட்டையைச் சுமந்து செல்லும்போது இந்தச் சோற்று மூட்டையைச் சுமந்து செல்லுவது மிகவும் ச்ரமமாயிருக்கின்றதே என எண்ணுகின்றான். அவன் அவ்வாஹாரத்தைப் புசித்துவிட்டு நடக்கும்போது "சோற்று மூட்டை பளு ஒழிந்து ஹாய்யாக இருக்கிறது" என எண்ணுகின்றான். உண்மையில் முன்னிருந்த சோற்று பளுவோடுகூட, அருந்திய தீர்த்தப்பளுவும் பிறகு சேர்ந்திருந்த சோற்று பளுவோடுகூட,

திருக்கின்றது. புசிப்பதற்கு முன் சோற்று மூட்டையால் சிரமமும் புசித்த பிறகு ச்ரமமின்றி ஸுகானுபவமும் ஏற்படுதலுக்குக் காரணம், புசிப்பதற்கு முன்னர் அந்தச் சோற்று பளுவில் பேத பாவனையும் புசித்த பின்னர் அதனில் அபேத பாவனையும் ஏற்படுதலே என்பதைத் தவிர வேறு யாதுளது? இந்த த்ருஷ்டாந்த மொன்றே "அத்வைதத் திலேயே ஸுகம்" "த்வைதத்தில் துக்கமே" என்பதை நிச்சயித்துக் கொள்வதற்குப் போதுமானது.

ஆரண்யங்களில் வஸித்தவர்களாகிய ரிஷிகள் முனிவர்கள் முதலிய ஆன்றோர்கள் புலி, கரடி, பாம்பு முதலிய துஷ்ட ஜந்துக்களினிடம் பயத்தினால் ச்ரம மடைவோர்களாயிராமல், நிர்ப்பயமாக ஸுகமாக வஸித்ததற்குக் காரணமும் அபேத பாவனையே. அதாவது தனது தேஹத்திலிருக்கும் நான் எனும் பொருளே அந்த துஷ்ட ஜந்துக்களின் தேஹங்களிலுமுள்ளது எனும் அபேத ஞானத்தினாலேயே ஆன்றோர்களுக் கின்பானுபவமும், பேதபாவனையினாலேயே நம்போன்றவர்களுக் குத் துன்பானுபவமுமாம். இவ்வுண்மையானது,

## அபேதத்தில் ஸுகமென்பதற்குப் பிரமாண வாக்கியங்கள்

"அபயம் ப்ரதிஷ்டாம் விந்தே அதஸோऽபயம் கதோ பவதி"

"உதரமந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி"

"அபேதஞான நிலையை யடைவோனாயின் அவன் பயம் நீங்கப் பெற்றவனாவன்" "கொஞ்சமாவது பேத பாவனையைச் செய்வோன் எவனோ அவனுக்குப் பயம் உள்ளது."

"யோऽந்யாம் தேவதாமுபாஸ்தே அந்யோऽஸாவந்யோऽஹமஸ்மீதி நஸவேத யதா பசு:"

"எவன் இப்பொருள் வேறு யான் வேறு என பேத பாவனையோடு உபாஸிக்கின்றானோ அவன் உண்மை ஞானமுடையவனல்ல. மிருகம் போன்றவன்."

"த்விதீயாத்வை பயம் பவதி"

"இப்பொருள் என்னிலும் வேறு எனும் த்வைத ஞானத்தினாலேயே பயம் வருகின்றது" என்பவை முதலிய தைத்திரீய சாந்தோக்யாதி

உபநிஷத் வாக்கியங்களாலும், "ஹேது ஹாவ நயாது ஃவ ஹேதுஜ்ஞா நதஸுவம்" "பேத பாவனையால் துக்கமும் அபேத ஞானத்தினுல் ஸுகமும் ஏற்படுவதாகும்" என்பது முதலிய உண்மை மொழிகளாலும் நன்ருய் அறியக்கூடியதே. அன்றியும்,

"ஶிவோஹம்" "ப்ரஹ்மைவாஹம்" "அஹம் ப்ரஹ்மாஸ்மி" "சிவன் யான்" "ப்ரும்மமே யான்" "யான் ப்ரும்மமே" என்பவை முதலிய ச்ருதி வாக்கியங்களால் அபேத பாவனையே உபதேசிக்கப்படுகின் றது. ஆகையால் பரம்பொருளை அபேத ஞானத்தோடு கூடவே உபா ஸிக்கவேண்டும். இக்காரணம் பற்றியே இதனை "அஹங்க்ரஹோ பாஸ்தி" என சாஸ்திரம் வழங்குகின்றது. அபேதமாக உபாஸிப்பதில் ஓர் முக்கியமாகிய விசேஷம் உளது. ஜீவாத்மாவுக்கு பேதபாவனையினு லேயே ஜனனமரண ஸம்ஸார துக்கம் ஏற்பட்டுளது. சேற்றினுல் காலில் அழுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதனை ஜலத்தினுலேயே போக்கி சுத்தி செய்துகொள்ள வேண்டியதுபோல, பேதபாவனையா லேற்பட்டி ருக்கும் ஜனனமரண ஸம்ஸாரத்தை அபேத பாவனையாலேயே நீக்கிக் கொள்ள வேண்டுமேயன்றி வேறு வழியில்லை. பரம ப்ரீதிக்குத் தக்க வஸ்து ஆத்மாவேயன்றி தன்னிலும் பின்ன வஸ்துக்களல்ல. பரமானந் தப் பொருளாயுள்ள பரமாத்மாவை நான் என அபேதமாக உபாஸித் தால் அவ்வானந்தம் கிடைக்கப் பெற்றவனுகலாம். அதனைவிட்டு பேத பாவனையோடுகூட உபாஸித்தல் உண்மையாகிய ஆனந்த லாபத்திற்கு ஏதுவாகாது.

## புத்திர பார்யாதிகள் ஸோபாதிகங்களான பிரியங்களே

புத்திர பார்யாதிகளும் ஐச்வர்யம் முதலிய பொருள்களும் ப்ரியவஸ்துக்களாகத் தோன்றினும் அவை ஸோபாதிகங்களான பிரி யப் பொருள்களேயன்றி நிருபாதிகங்களானப் பிரிய வஸ்துக்களல்ல. ஸோபாதிகமாவது உபாதியோடு கூடியது என்பதாம். உபாதியெனின் நிமித்தமென்பது பொருள். புத்திர பார்யாதிகள் தனக்கு ஹிதம் செய் வார்களாயின் பிரியமாகவும் அஹிதம் செய்வார்களாயின் பிரியமல்லாத வைகளாகவும் ஏற்படுதல் லோகானுபவசித்தம். இவ்விதம் தனக்கு ஹிதம் செய்தல் எனும் நிமித்தமாகிய உபாதியாலேயே பிரிய வஸ்துக் களாகின்றன. இதுவே ஸோபாதிகப்பிரியம் என்பதாம். இது எது போலெனின் அதற்கோர் த்ருஷ்டாந்தம் காண்பிப்பாம். பள்ளிக்கூடத் தில் படிக்கின்ற நம் பையனுடைய ஸ்நேஹிதப் பையனிடம் நமக்குப் பிரிய மேற்படுகின்றது. அந்தப் பிரியமானது நம் பையனுக்கு அவன்

ஸ்நேஹிதன் எனும் நிமித்தத்தினாலேயே. அதாவது, அந்த ஸ்நேஹிதப் பையனே நம் பையனுக்கு விரோதம் செய்வோனாயின் அந்த ஸ்நேஹிதனாயிருந்த பையனிடம் நமக்குப் பிரியமிருக்கின்றதில்லை. ஆதலால் அந்த ஸ்நேஹிதப் பையனிடமிருந்த ப்ரியம் நம் பையனுக்கு அவன் ஸ்நேஹிதனாக இருந்த நிமித்தத்தினாலேயே ஏற்பட்டதாகும். அது போலவே புத்திர பார்யாதிகளிட மிருக்கும் பிரியமானது நமக்கு அவர்களால் ஹிதம் ஏற்படுதல் எனும் நிமித்தத்தினாலேயாம். புத்திர பார்யாதிகளே நமக்கு விரோதம் செய்வோர்களாயின் நமக்கு அவர்களிடம் பிரியம் இருப்பதில்லை. ஆதலால் நம்மிடத்திலிருக்கும் பிரியமே புத்திர பார்யாதிகளிடமுள்ள பிரீதிக்குக் காரணமாம். இனி நம்மிடத்தில் நமக்கிருக்கும் பிரியத்திற்குக் காரணமென்ன என விசாரணை செய்வோமாயின் அதற்கு நிமித்தம் யாதும் தெரியவில்லை. ஆதலால் அது அனுபவித்தமாக ஏற்பட்டுளது என்பதே நிச்சயமாகின்றது. ஹிதம் செய்யும்போது பிரியமும், அஹிதம் செய்யும்போது த்வேஷமும் புத்திர பார்யாதிகளிடம் ஏற்படுவதுபோல நம்மிடம் நமக்கு ஏற்படுகின்றதில்லை. நம்மிடம் பிரியம் நமக்கு மாறாமலேயே இருக்கின்றது.

சங்கை : சிலர் தன்னையே தற்கொலை முதலியவைகளைச் செய்து மாய்த்துக் கொள்கிறார்களே? தன்னிடம் பிரியம் அனுபவித்தமாயுளது என்பதை எப்படி ஒத்துக்கொள்வது? எனச் சிலர் சங்கிக்கலாம். அதனுண்மை வருமாறு.

## தேஹாதிகளிடம் நிமித்தத்தினாலேயே பிரீதி

தம்மிடம் த்வேஷத்தினால் தன்னை மாய்த்துக்கொள்கிறார்களெனும் விஷயத்தைச் சற்று நன்றாய் ஆலோசனை செய்து பார்க்க வேண்டும். தன்னிடம் த்வேஷமென்பது தன் தேஹத்தினிடமா? தன் தேஹத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவினிடமா? தான் என்பது தேஹத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவே யாதலால் அவ்வாத்மாவுக்குத் தேஹத்தின் நிலைமை அஹிதமாக ஏற்பட்டிருக்கப் பெற்றவர்கள் ஆத்மாவுக்கு அஹிதமாயிருக்கின்றதெனும் எண்ணத்தினாலேயே அஹிதர்களாயுள்ள புத்திராதிகளையும் த்வேஷத்தினால் கொலைசெய்வது போலவே, தேஹத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவுக்கு தேஹவாழ்க்கை அஹிதமாயிருக்கிறதெனும் காரணத்தினாலேயே அந்த தேஹத்தை மாய்த்துக் கொள்கிறார்கள் என்பதே உண்மை. ஆத்மாவின் ஸுகத்திற்காக வ்ரதோபவாஸாதிகளால் தேஹத்தை க்லேசம் செய்துகொள்ளுதலை உலகில் காண்கின்றோம். இவ்வோர் விஷயத்தைக் கவனித்தாலேயே

ஆத்மாவின் ஸுகத்திற்காகவே தேஹத்தில் பிரியமென்பது விளங்கும். தேஹத்தையும் ஆத்மாவையும் வெவ்வேறு பொருள் என அறிந்து கொண்டால் இங்கு கூறிய சங்கைக் கிடமிராமற் போகும். ஆதலால் ஆத்மாவினிடம் நிமித்தமிராமல் ஸ்வயம் ஸித்தமான பிரீதியும், புத்திர பார்யாதிகளிடம் "ஆத்மஹிதம்" எனும் நிமித்தத்தினுலேயே பிரியமும் உள்ளது என நிர்ணயித்துக் கொள்க. புத்திர பார்யாதிகளாகிய வெளிப் பொருள்களினிடம் போலவே தன் தேஹத்திலும் ஆத்மஹிதம் எனும் நிமித்தத்தினுலேயே பிரியமாம். இவ்விசாரணையால் தேஹாதிகளில் ஸோபாதிகப் பிரியமும் ஆத்மாவினிடம் நிருபாதிகப் பிரியமும் உளது என்பதாகிய உண்மையை நன்கறியலாம்.

ஆத்மாவினிடம் பிரியம் என இங்கு ஆத்மஸம்பந்தமானது பொது வாகச் சொல்லப்படினும் ஜீவாத்மாவாகிய சிதாபாஸனுடைய உண்மை நிலைமை பரமாத்ம ஸ்வரூபமே எனும் நிர்ணயத்தினுல் பரமாத்ம ஸ்வரூப மொன்றே நிருபாதிகமான பிரீதிக்கு லக்ஷ்ய வஸ்துவென சாஸ்திரம் கூறுகின்றது. தன் தேஹமென்ன, தனது புத்திர பார்யாதிகளென்ன, இப்பொருள்களெல்லாவற்றிலும் பிரியம் மாறிப்போதலையும் ஆத்மாவி னிடம் உள்ள பிரியம் மாத்திரம் மாருதிருத்தலையும் கவனிப்போமா யின், ஆத்மா பரமானந்த வஸ்துவென்பது நிச்சயமாகும். ஸர்வக்ஞத்து வாதி சக்தியோடு கூடியதாகவும் நிருபாதிகமாகிய ஆனந்த வஸ்துவாகவு முள்ள பரம்பொருள் யானென அபேத பாவனையோடுகூட உபாஸித் தலே ஜனனமரண துக்கத்தினின்றும் கரையேறுதலுக்கு ஸாதனமன்றி வேறு வழியில்லை. தவிரவும் வேதாந்த விசார ச்ரவண மனன நிதித் யாஸனங்களை அப்பியஸித்து ஆத்மவஸ்துவை அறிந்தவர்களாகிய ஞானி களுக்கு ஏற்படும் ஸம்ஸாரதுக்க நிவ்ருத்தி ரூபமாகிய பயனேடுகூடிய "நிருபாதிக ஆனந்த வஸ்துவாகிய ஸகுண பரம்பொருள் யானே" எனச் சிந்தித்தலாகிய இந்த அஹங்க்ரஹோபாஸ்தியைச் செய்வோர்களுக்கு அவாந்தரமாகக் கிடைப்பதாகிய மற்றுமோர் ஆச்சரியமாகிய பயனின் லாபமுமுண்டு.

## உபாஸ்தி தீவிரமாயின் ப்ராரப்ததுக்கமும் விலகும்

வேதாந்த விசாராதிகளால் ஞானம் வந்தவர்களுக்குப் பூர்வ ஜன்ம கர்மவசமாகப் புத்திர பார்யாதிகளின் வியோகம் முதலியவை களால் துன்புறும்படி ப்ராரப்தகர்மா ஏற்பட்டிருக்கின் அப்படிப்பட்ட துக்கம் வந்தேதீரும். நிருபாதிகமான ஆனந்த வஸ்துவாகிய இவ் வாத்மா யானே எனச் சிந்தித்தலாகிய இந்த அஹங்க்ரஹோபாஸ்தி

யைச் செய்யும் உபாஸகர்களுக்கு ப்ராரப்தாயத்தங்களான முற்கூறிய துக்கங்கள் விலகிப்போகும். ஆனந்தவஸ்து யானெனும் உபாஸ்தியின் மஹிமையால் அவர்களது புத்திர பார்யாதிகள் ஓர் குறையு மிராதவர்களாய் தீர்க்காயுளோடு கூடியவர்களாய்த் தன் தேஹமும் தீர்க்காயுளை யுடையதாகவே ஏற்பட்டு ஓர் குறைவுமின்றி வாழ்நாள் முழுதும் ஆனந்தமாகவே அமையப் பெற்றவர்களாவர். அதாவது கேவல ஆத்மஞான மாத்திரத்தோடு கூடியவர் ப்ராரப்த கர்மாவை அனுபவித்தே ஆகவேண்டும். இங்கு கூறிய உபாஸ்தியைச் செய்வோர்களுக்கு உபாஸனையின் மஹிமையால் ப்ராரப்த கர்மமும் விலகிப்போகும். ஆனந்த வஸ்துவாகிய பரம்பொருள் யானென் உபாசிக்கும் பெரியோரிடம் சென்று உண்மை யானந்த வஸ்துவாகிய பரம்பொருளுக்கு அந்நியங்களாயுள்ள புத்திர பார்யா தனாதி வஸ்துக்களை, ஸுகவஸ்துக்களென ஒருபோதும் சொல்லக்கூடாது.

## ஞானிகளிடம் ஆத்மாவுக்கு அந்நியம் ஸுக மெனக் கூறக்கூடாது

ஆனந்தப் பரம்பொருள் யானெனும் உபாஸ்தியைச் செய்யும் மஹா புருஷர்களிடம் சென்று புத்திரபார்யா ஐச்வர்யாதிகள் ஸுகமெனக் கூறுவானாயின், அம்மஹா புருஷர்கள் அவனது பொய்வார்த்தைகளை ஸஹிக்காதவர்களாய் "அடா நீ கூறும் புத்திரபார்யாதிகள், உனக்கு அஹிதத்தைச் செய்தலாலும், அவர்களின் வியோகாதிகளாலும் துக்கமே வருகின்றமையால் அவர்கள் பிரியவஸ்துக்களென்பது பொய்யாகும்" எனக் கூறுவார்கள். உபாஸகர்களாகிய அம்மஹான்களது வசனம் பொய்யாவதில்லை. அவ்வசனம் சாஸ்திரங்களிலுள்ள உண்மை. ஆதலால் அப்படிப்பட்ட அவர்களது வசனத்தினாலேயே ஒருக்கால் அவர்களை விட்டுத் தனக்கு நாசமேற்படுதலோ, அல்லது தானிருக்க அவைகளுக்கு நாசமேற்படுதலோ இவைகளில் யாதேனும் ஓர் நிமித்தத்தின் மூலமாக அவை இன்பவஸ்துக்களல்லாமல் துன்பவஸ்துக்களே என்பது யதார்த்தமாகும். ஆதலால் ஆனந்தப் பரம்பொருளை யாத்மாவாக உபாஸிக்கும் பெரியோர்களிடம் சென்று புத்திராதிகளான அனாத்மவஸ்துக்களைப் பிரிய வஸ்துக்களெனச் சொல்லக்கூடாது.

இப்போது இங்கு மற்றோர் சங்கை ஏற்படக்கூடும். அதாவது, ஆனந்த ஸ்வரூபமான பரம்பொருளை யானென அபேதமாக உபாஸிக்கும் பெரியோர்கள் "அடே நீ பிரியப் பொருள்களெனச் சொல்லும் புத்திரபார்யாதிகள் நாசமுடையவையாதலால் துன்பப்பொருள்களே"

எனக் கடோரவசனத்தைச் சொல்லுவார்களா? ராகத்வேஷாதிகளிராத அப்பெரியோர்கள் அவ்வாறு கூறுவார்களென்பது உசிதமாகக் காணப்படவில்லையே என்பதாம்.

## பெரியோர் முன்னிலையில் செய்யும் அபராதம் சிறியதாயினும் கடும்பாபமேயாம்

இச் சங்கையைப் பற்றிய உண்மையைக் கூறுவாம். அதாவது, மஹான்கள் கடோரவசனத்தைக் கூறுவிடினும், புத்திரபார்யாதிகள் ஸுகவஸ்துக்களெனும் பொய் வசனத்தை அவர்களிடம் கூறக்கூடாது. ஏனெனின் அவர்கள் கடோரவசனம் கூறுவோர்களென்பதல்ல. மற்றவர்களுக்கு உண்மை நிலையைப் போதிப்பவர்களே யாதலால், அவர்கள் இதனுண்மையை அறிந்துகொண்டு ஜந்ம ஸாபல்யத்தை அடையட்டுமெனக் கருணையினாலேயே அவ்வுண்மையை உணர்த்துவோர்கள். பரம் பொருளையே உபாஸிக்கும் பரம புருஷர்கள் பரமாத்ம ஸ்வரூபர்களே. அவர்களிடம் பொய்ம்மொழி கூறினால் அவர்கள் கடோரவசனம் கூறுவிடினும் அவர்களின் ஸந்நிதி விசேஷ மாத்திரமே பொய்ம்மொழிக்குப் பயனான துக்கத்தை உடனே கொடுப்பதாகும். மந்திரசக்தி சொலிக்கும் சிவாலயம் சக்தியாலயம் விஷ்ணுவாலயம் முதலியவைகளின் கர்ப்பக்ருஹத்தில் சென்று, அவ்வீச்வர ஸந்நிதியில் செய்யும் பாபமானது அந்த ஸந்நிதி விசேஷ மாத்திரத்தாலேயே உடனே பயன்தருவது போலவே இதுவும் என்றறிக. அதனால் அவ்வீச்வர ஸந்நிதிக்கு தயையின்மை முதலிய கடோர ஸ்வபாவமுள்ளதெனக் கூறுவதுபோலவே மஹான்களிடத்தும் கடோர ஸ்வபாவமுள்ளதெனக் கூறுவதாகும்.

சங்கை, இந்த ஜன்மத்தில் செய்யும் பாபபுண்ணியங்களுக்கு மறுஜன்மங்களில் பயனேயன்றி இந்த ஜந்மத்திலேயே என்பது சாஸ்திர ஸம்மதமல்ல. இப்படியிருக்க மஹான்கள் ஸந்நிதியில் கூறும் பொய்ம்மொழிக்கு இப்போதே பயன்தரும் என்பதை எப்படி ஒத்துக்கொள்வதென்பதாம்.

## கடும்பாப புண்ணியங்கள் அப்போதே பயன்தரும்

இச் சங்கை உண்மை அறியாமையாலேயே என்றறிக. அதாவது இப்போது செய்யும் பாபபுண்ணியங்களுக்கு மறுமையிலேயே பயனென்பது பொது விதியே. அத்யுத்கடங்களான பாபபுண்ணியங்களின் பயன் விஷயத்தில் அந்த விதியல்ல. விசேஷ விதியே. அதாவது படிப்புக்குப் பயன் உத்யோகம் முதலியதே. அது காலாந்தரத்திலேயேயாயினும், மிகவும் புத்திசாலித்தனத்தோடு முதற் பையனாக

விசேஷமார்க்கு முதலியவைகள் பெற்றிருக்கும் பையனுக்குப் படிக்கும் போதே வெகுமதி முதலிய ஸந்மானங்கள் கிடைப்பது போலவும், சாதாரண குற்றம் செய்வோர்கள் விசாரணையான பிறகு தண்டிக்கப் படுகின்றனராயினும் ஸர்க்கார் பணத்தைக் களவாடுதல், நியாயாதிபரின் கையெழுத்துப் போலப் பொய்க் கையெழுத்துப் போடுதல், கொலை செய்தல் முதலிய கடும் குற்றங்களைச் செய்தவர்களுக்கு விசாரணை யாவதற்கு முந்தியே (ரிமாண்டு எனும்) சிறைச்சாலையில் அடைத்துத் துன்ப மேற்படுவதுபோல, ஈச்வர ஸந்நிதி மஹான்களின் ஸந்நிதி முதலிய இடங்களில் பொய்ம்மொழி கூறுதல் முதலியவை கடும்பாபங் களாதலால் அவைகளின் பயன் மறுஜன்மம் வரையில் காத்திராமல் உடனே ஏற்பட்டுவிடும். உண்மை இவ்விதமாதலால் முற்கூறிய சங் கைக் கிடமில்லை. ஆதலால் "பரமானந்த வஸ்துவான பரம்பொருள் யான்" என உபாஸிக்கும் பெரியோரிடம் சென்று "புத்திரபார்யாதி களே இன்பப் பொருள்கள்" எனப் பொய்வசனம் கூறுவோர்களுக்கு "அது பிசகு" என்பதைக் காட்டி உண்மையைப் போதிப்பதற்காகவே முற்கூறியபடி உடனே பயன் நிகழுவதாகும் என்பது நிர்ணயமேயாம். புண்ணியமும் அவ்வாறேயாம். ஜபம் த்யானம் முதலியவை ஸாமான்ய புண்ணியங்களே யாயினும் அச்வத்தம் பில்வம் முதலிய வ்ருக்ஷங்களின் அடியிலாவது புண்ணிய நதீதீரம் ஈச்வர ஸந்நிதி முதலிய இடங்களி லாவது செய்யப்படுமாயின், அவைகள் அபார மஹா புண்ணியங்களாய் மஹாபயனைத் தருவதுபோல பொய்ம்மொழி ஸாமான்ய பாபமே யாயினும், மஹான்களின் முந்நிலையில் ஏற்படுமாயின் அது மஹா கடோர பாபமே யாகுமாதலால் உடனே பயன் வந்துதீரும் என்பதே சாஸ்திரங்களின் ஸித்தாந்தம்.

## உபாஸ்தியானது நிகரற்ற பெரும் புண்ணியம்

தவிரவும் பூர்வ கர்மவசத்தால் ப்ராரப்தாயத்தமாக புத்ரபார்யாதி வியோக துக்கம் விதிக்கப்பட் டிருக்கினும், பரமானந்தமாகிய பரம் பொருள் யானென பரமப்பிரியமாய் உபாஸிப்பவருக்கு அந்த துக்கம் வாராமல் விலகிப்போகும். புத்திரபார்யாதிகள் மிகவும் க்ஷேமத்தோடு கூடியவர்களாகவே இருந்து ஆனந்தமாகக் காலம் கழிப்பவராவர். இவ் விஷயத்தை ப்ரசம்ஸையாக (மிகப்படுத்தி)க் கூறுதலென் றெண்ணக் கூடாது; முற்றும் உண்மை யென்பதை நன்கறிக. இதனை,

"ததேதத் ப்ரேய: புத்ராத் ப்ரேயோ வித்தாத் ப்ரேயோऽந்யஸ்மாத் ஸர்வ ஸ்மாதந்தரதரம் யதயமாத்மா । ஸயோऽந்யமாத்மன: ப்ரியம் ப்ருவா-

வாணம் ப்ரூயாத் ப்ரியம் ரோத்ஸ்யதீதி ஈஸ்வரோ ஹ ததைவ ஸ்யாத் ஆத்மானமேவ ப்ரியமுபாஸீத ஸ ய ஆத்மானமேவ ப்ரியமுபாஸ்தே ந ஹாஸ்ய ப்ரியம் ப்ரமாயுகம் பவதி.''

"அவ்விப் பரம்பொருள் புத்திரன் தனம் மற்றுமுள்ள ஸகல ஸுக வஸ்துக்களிலும் சிறந்த பேரானந்த வஸ்து. எவன் இப்பரம்பொருளுக்கு அந்நியங்களான வஸ்துக்களை இன்பப் பொருள்களெனக் கூறுகின்றானோ அவனை நோக்கிப் பெரியோர் 'அப்பா நீ கூறுவது பொய்யே; உண்மையப்படியல்ல' எனக் கூறுவர். அவர் ஈச்வர ஸ்வரூபராதலின் அவ்வாறேயாகும். ஆதலால் பரம்பொருளை மிகவும் பிரிய வஸ்துவாகிய நான் என உபாஸிக்கவேண்டும். அவ்வாறு எவன் உபாஸிக்கின்றானோ அவனது எண்ணப்படி பிரியமாயுள்ள பொருள் கெடாமல் மிகவும் க்ஷேமமாக வாழும்" என ப்ருஹதாரண்ய உபநிஷதம் மூன்றாம் அத்தியாயத்தில் இவ்வுண்மை உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ப்ரும்ம வித்தையிலுள்ள இந்த ரஹஸ்யத்தை நன்றாய் நிச்சயித்துக் கொள்ளவேண்டும். இதுவரையிலும் நிரூபித்த விஷயத்தின் சுருக்கமிதுவேயாம். அதாவது, ஸர்வஞ்ஞசக்தி, நித்யதிருப்திசக்தி முதலிய ஆறு விதமான பெயர்களை யுடையதும், உல்லாஸசக்தி நிரோதசக்தி என இரண்டு பெயர்களையுடையதும், இச்சாசக்தி ஞானசக்தி கிரியா சக்தி என மூன்று பெயர்களையுடையதும், உண்மையில் பராசக்தி மஹா மாயா என வழங்குவதுமாகிய சக்தி தத்வம் ஒன்றேயாம். அப்படிப்பட்ட ஆச்சர்யமான மாயாசக்தி விலாஸத்தோடு கூடியவனும் பரமானந்தப் பொருளுமாகிய பரமாத்மா யான், அவனே எனக்குப் பரமமான பிரியவஸ்து எனும் நிச்சய ஞானத்தைவிடாமல் வைத்துக்கொண்டு அவனது ஸ்வரூபத்தைத் தியானித்தலே ஈச்வரோபாஸ்தி, அஹங்க்ரஹோபாஸ்தி, ராஜயோகம் முதலிய பற்பல சொற்களால் வழங்கப்படுவதாம். அதனையே யாம் அப்பியஸிக்கவேண்டும் எனும் விஷயமே முக்கியமானது.

## உபாஸனைக்கு ஆஸனநியமம் வேண்டும்

இவ்வுபாஸ்தியைப் பற்றிய மற்றுமுள்ள விபரங்களைக் கூறுவாம். இப்படிப்பட்ட உபாஸ்தியை உட்கார்ந்துகொண்டே செய்யவேண்டுமா, அல்லது சாய்ந்து கொண்டாவது படுத்துக்கொண்டாவது நடக்கும் போதாவது மற்றுமுள்ள உலக வ்யவஹாரங்களைச் செய்துகொண்டிருக்கும் போதாவது செய்யலாமா, எனும் ஸந்தேஹம் உண்டாகும். அவ்வுண்மை யறிக. ஆஸன நியமத்தோடு உட்கார்ந்துகொண்டே

செய்யவேண்டும் என்பதே உண்மை. நடந்துகொண்டோ நின்று கொண்டோ மற்றுமுள்ள வியவஹாரங்களில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் போதோ செய்வோமாயின் சரீரச்ரமும் மனம் ஏகாக்ரமாகா திருத்தலும் ஸம்பவிக்கும். மற்ற வியவஹாரங்களில் ஈடுபடுத்திக்கொண்டு செய்வதாயின் அச்சமயம் சித்தத்தை ஈஸ்வர ஸ்வரூபத்தில் ஏகாக்ரமாக நிறுத்தலாகிய மானஸக்கிரியை விஹித்திக்காது. படுத்துக்கொண்டுள்ள போது நித்ரை சிலஸமயம் வந்து தாக்குமாகையால் உபாஸனை நிலை பெறாது. ஆகையால் உட்கார்ந்து ஆஸன நியமத்தோடு உபாஸிக்க வேண்டும் என சாஸ்திரம் விதிக்கின்றது. உண்மை இதுபற்றியே ப்ரும்ம ஸூத்ரம் நான்காமத்தியாயம் முதலாவது பாதத்தில் "ஆவ்ருத்திரஸக்ருது₃பதே₃ஶாத்" எனும் ஸூத்ரத்தில் தொடங்கி "ஆஸீந: ஸம்ப₄வாத்" 4-1-7 எனும் ஸூத்ரத்தில் உட்கார்ந்தே உபாஸிக்க வேண்டுமென விதிக்கப்பட்டிருக்கின்றது. பகவத்கீதையிலும் ஆறுமத்தியாயத்தில்,

ஶுசௌ தே₃ஶே ப்ரதிஷ்டா₂ப்ய ஸ்தி₂ரமாஸநமாத்மந:

என்பது முதலிய வாக்யங்களினால் இந்த நியமம் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. பதஞ்ஜலிபகவான் சித்தம் ஏகாக்ரமாக நிலைபெறுதற்கு ஆஸன நியமம் வேண்டுமென விதித்தார்.

எப்படி ஆஸன மமைத்துக்கொள்ள வேண்டுமெனும் சங்கையுதிக்கும். பதஞ்ஜலி பகவான் "ஸ்தி₂ரஸுக₂மாஸநம்" ஸ்திரமாயும் ஸுகமாயு மிருத்தலுக்குரிய ஆஸன மென்றார். ஸ்வஸ்திகம், பத்மம் முதலிய ஆஸனங்கள் பல சொல்லப்பட்டிருக்கின்றன. சப்பளாங் கூட்டுதல் முதலிய ஆஸனங்களுள் சாஸ்திரங்களில் சொல்லி யிருப்பதாகிய "தன்தேஹ நிலைமைக்குத் தக்க" ஓர் ஆஸனம் அமைத்து உட்கார்ந்துகொண்டு தியானிக்கவேண்டும்.

## உபாஸனைக்குத் தேச காலாதி நியமங்கள்

இனி எந்த திசையை நோக்கி உட்கார்ந்து உபாஸிக்கவேண்டும், எந்தக் காலத்தில் உபாஸனை செய்யவேண்டும், எந்த இடத்திலிருந்து கொண்டு உபாஸிக்க வேண்டுமெனும் விஷயத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது இவ்விஷயமும்,

யத்ரைகாக்₃ரதா தத்ராவிஶேஷாத்

எனும் ப்ரும்ம ஸூத்ரத்தில் எந்த திக்கைப் பார்த்தலிலோ, எந்த இடத்தில் இருத்தலிலோ, எந்த ஸமயத்தில் முயற்சிப்பதிலோ உபாஸ

னுக்குச் சித்தம் ஈச்வர ஸ்வரூபத்தில் ஏகாக்ரப்படுகின்றதோ அந்த திக்தேச காலங்களைக் கைக்கொள்ள வேண்டுமெனச் சொல்லப்பட்டிருக்கின்றது.

“ஸமே ஶுசௌ ஶர்கராவஹ்னி வாலுகாவிவர்ஜிதே
ஶப்தஜலாஶ்ரயாதிபி: । மனோனுகூலே ந து சக்ஷுபீடனே
குஹாநிவாதாஶ்ரயணே ப்ரயோஜயேத்”

“ஸமமாயும் சுத்தமாயும் சிறு கற்கள் வெய்யில் மணல் இவை யிராததும், கூச்சல் முதலிய சப்தம், தடாகம் மடு முதலியவைகள் இராததும், கொசுகு முதலிய ஜந்துக்கள் இராததும், மனத்திற்கு அநுகூலமுமான குஹை முதலிய, பெருங்காற்று வீசாத இடங்களில் உபாஸனை செய்க,” என ச்வேதாச்வதரம் முதலிய உபநிஷதங்களில் சொல்லப்பட்டபடியாவது, இல்லத்திலேயே மனோத்யானத்திற்குத் தக்கபடியாவது இடத்தையமைத்துக் கொள்ளலாம். அல்லது புனிதமாகிய நதீதீரம், பில்வ வனம் அச்வத்த விருக்ஷத்தினடி, அநுகூலமாயுள்ள நந்தவனம் முதலியவைகளி லமைந்த மடம், ஏகாந்தமான தேவாலயம் முதலியவைகளும் ஸரியான இடம் என்றறிக. பகவத்கீதை ஆறுமத்தியாயத்தில்,

“ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரமாஸனமாத்மன: ।
நாத்யுச்ச்ரிதம் நாதிநீசம் சைலாஜினகுஶோத்தரம்”

என்பது முதலிய ச்லோகங்களால் வீடு முதலியவைகளில் கிரியையால் சுத்தமா யுள்ளதோ, அல்லது நதீதீரவனுதிகளில் இயல்பாகவே சுத்தமாயுள்ளதோ ஆகிய இவ்விடங்களில் வஸ்திரம் மான்தோல் குசாசனம் எனும் நாணலாஸனம் இவைகளில், மிகவும் உயரமாகவோ அல்லது பள்ளமாகவோ இராத இடத்தில், பத்மாஸனம் அல்லது ஸுகாஸனம் முதலியவைகளான ஆஸனத்தில் உட்கார்ந்து அமர்தலைக் கைக்கொண்டு த்யானயோகம் செய்யவேண்டும்” எனக் கூறப்பட்டிருக்கின்றதும் இங்கு கொள்க. கம்பளாஸனம் பலகையாஸனம் முதலியவைகளில் இருந்து தியானிப்பதும் நலமே என்றறிக. ஆஸனம் என்பதில் மற்றுமோர் விசேஷமுண்டு. பிறரது ஆஸனமாகிய பலகை கம்பளம் தோல் முதலியவைகளை உபாஸகர் உபயோகித்துக் கொள்ளக்கூடாது. அப்படியே தனது ஆஸனத்தை மற்றவர் உபயோகிக்கவும் கூடாது. கம்பளாஸனம் வைத்துக்கொண்டால் அதன்மேல் சுத்தமான வஸ்திரத்தைப் போட்டு அதன்மேல் உட்கார்ந்துகொள்ளவேண்டும்.

## உபாஸனைக்கு ஸாத்விக ஆஹாரம் அவசியம்

இவ்வாறு நியமங்களை வைத்துக்கொண்டிருக்கினும், ஆஹார சுத்தியும் வேண்டும். பால், நெய், தயிர், மோர் முதலியவை விசேஷமாக ஆகாரத்தில் சேர்த்துக்கொள்வது நலம். உறைப்பு, கசப்பு, புளிப்புப் பதார்த்தங்கள் சேர்ந்தால் சித்தம் ஏகாக்ரமாகாது. தனக்குரிய கர்மங்களாகிய ஸந்தியாவந்தனம் ச்ராத்தம் ஜபம் முதலியவைகளுக்கு விரோதமாக இந்த உபாஸ்தியை வைத்துக்கொள்ளக்கூடாது. ஸந்தியாவந்தன ச்ராத்தாதி கர்மகாலங்களில் அவைகளைச் செய்துவிட்டு மற்ற ஸமயங்களிலேயே இவ்வுபாஸ்தியைச் செய்யவேண்டும். கர்மானுஷ்டானங்களைவிட்டு எவ்வுபாஸ்தியைச் செய்யினும் எவ்விதமான தபஸ்ஸைச் செய்யினும் அனர்த்தமேயன்றி க்ஷேமம்பெற இயலாது.

விலக்கப்பட்டுள்ள வெங்காயம் முள்ளங்கி முதலிய காய்கறிகளை உபயோகப்படுத்தினால் இவ்வுபாஸனை கைகூடாது. உலகிலுள்ள தான்யம், காய்கறி, கனி முதலிய ஆஹாரங்களில் அம்ருதம், மிருத்யு என இரண்டு அம்சங்களுள்ளன. சங்கினி எனும் ஓர் நாடி மனித சரீரத்திலுள்ளது. அந்த நாடியானது ஹ்ருதயத்திலிருந்துகொண்டு அன்ன ஸாரமாகிய ரக்தத்திலுள்ள முற்கூறிய அம்ருதாம்சத்தைப் பிரித்து மூளைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கு மியல்புடையது. அப்படிப்பட்ட அம்ருதாம்சம் மூளைக்குச் சென்றுகொண்டிருக்குமானால் அதனால் போஷிக்கப்படுகின்ற மூளையில் மனம் நின்று வேலை செய்யும்போது வைராக்கிய சமதமாதிகளும் ஈச்வரஸ்வரூப சிந்தனைகளும் ஏற்படும். அவ்வாறின்றி அம்ருதாம்சம் ஸ்வல்பமேனும் இராமலுள்ள தான்யம் காய்கறி முதலிய ஆஹாரங்களை உபயோகிப்பவர்களாயின் முற்கூறிய சங்கினி எனும் நாடிக்கு வேலை இராமற்போய் அம்ருதாம்சத்திற்குப் பதிலாக நிஷித்த ஆஹாரங்களிலுள்ள மிருத்யு அம்சமே மூளைக்குச் செல்வதாகும். அதனால் வைராக்ய சமதமாதிகளோ ஈச்வரத்தியானமோ இவைகளுக்குச் சிறிதும் ஹேதுவிராமற் போகும். ஸதா ராகத்வேஷாதிகளாகிய துர்ப்புத்திகளும் நித்ராலஸ்யம் முதலிய தாமஸபாவங்களு மேற்பட்டுக்கொண்டு உபாஸனை ஸித்தியாமற்போகும். இவ்வுண்மை பற்றியே நமது சாஸ்திரங்களில் புசிக்கக்கூடியவை புசிக்கத்தகாதவை என இருவிதங்களாக ஆஹாரங்கள் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்விசாரணையைச் செய்தவருக்கு, தோன்றியபடி ஆகாரங்களைச் செய்துகொண்டும், ஸ்வகர்மானுஷ்டானங்களை விடுத்தும் உபாஸ்தி செய்ய விரும்புதல் அனர்த்தகரமே யன்றி சிறிதும் பயன் பெறுதெனும் உண்மை இனிது விளங்கும்.

## உபாஸனைக்கு மற்றுமுள்ள அவச்யங்களான ஸாதனங்கள்

இனி எத்திசையை நோக்கி உட்கார்ந்துகொண்டு தியானிப்பதெனின், ஜபம் ஹோமம் பூஜை முதலியவைகளுக்கு, கிழக்கு வடக்கு முதலிய திசைநோக்க நியமம் விதிக்கப்பட்டிருப்பதுபோல, இவ்வுபாஸ்திக்குத் திசைநோக்க நியமம் விதிக்கப்படவில்லை. ஆயினும் ஈச்வரன், புண்ணிய விருக்ஷம், புண்ணிய புருஷர்களாகிய பெரியோர், சிறியோராயினும் ஜபம் பாராயணம் முதலியவைகளைச் செய்துகொண்டிருப்பவர், தன் குரு முதலியவர்களின் ஸந்நிதிக்குத் தன் பின்புறத்தைக் காட்டிக்கொண்டு உட்காராமல் எதிர்முகமாகவாவது பார்ச்வத்திலாவது இருந்து தியானிக்க வேண்டும். ஆகவே இந்த உபாஸ்திக்கு மிகவும் அவசியமாக வேண்டப்படும் ஸாதனங்கள் ச்ரத்தை பக்தி ஆஹார வியவஹார சுத்தி, முதலியவைகளே. இவைகளிருப்பின் வெளிப்பொருள்களில் ஆசையின்மை, உள்ளதைக் கொண்டு ஸந்தோஷம், ப்ரும்மசரியம் முதலியவை ஸித்திக்கும். ஆசை நீக்கம் ப்ரும்மசர்யம் ஸித்தியாகாவிடில் உபாஸனை கைகூடாது. இவ்விஷயத்தை சாந்தோக்ய உபநிஷதத்தின் எட்டாம் ப்ரபாடகம் தஹரவித்யா ப்ரகரணத்தின் பாஷ்யத்தில் சங்கராசார்ய ஸ்வாமிகள்,

"𑌬𑌾𑌹𑍍𑌯𑌵𑌿𑌷𑌯 𑌵𑌿𑌰𑌕𑍍𑌤𑌾𑌃 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯 𑌸𑌤𑍍𑌯𑌸𑌾𑌧𑌨𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌮𑌾𑌣 𑌗𑍁𑌣𑌵𑌦𑍍 𑌧𑍍𑌯𑌾𑌯𑌿𑌨𑌃. 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌵𑌗𑌮𑍍𑌯𑌤𑍇."

"வெளிப் பொருள்களில் ஆசை யொழிந்தவர்களும் விசேஷமாக ப்ரும்மசர்யம் ஸத்யம், இந்த ஸாதனங்களோடு கூடியவர்களுமாக இருந்து, கூறப்படும் குணங்களோடு கூடியுள்ள பரமாத்மாவை த்யானம் செய்வோர்கள் அவ்வஸ்துவைக் காண்பார்கள்" எனும் வாக்கியத்தினால் கூறுகின்றார். நிற்க, இப்படிப்பட்ட ஸாதநங்களோடு கூடியவராயிருந்தால் இவ்வுபாஸனை ஸித்திக்கும். இவ்வுபாஸனையானது,

"𑌦𑌹𑌰𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌉𑌪𑌕𑍋𑌸𑌲𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌶𑌾𑌣𑍍𑌡𑌿𑌲𑍍𑌯𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌵𑌿𑌦𑍍𑌯𑌾"

தஹரவித்யை, உபகோஸல வித்யை, சாண்டில்ய வித்யை, வைச்வாநர வித்யை என நான்கு வகைப்படும். மனிதரின் ஹ்ருதயகமலத்தின் உட்புறத்து சிறு இடைவெளி ஒன்றுளது. அது தஹராகாசமென வழங்கப்படும். அந்த தஹராகாசத்தில் பரம்பொருளை உபாஸித்தல் தஹரவித்யா எனப்படுவதாம்.

## உபாஸ்தியின் பேதம்

ஸர்வக்ஞத்வாதி சக்தி விசேஷங்களால் ஜகங்கள் முழுதும் வியாபகமாயுள்ள பரமாத்ம ஸ்வரூபத்தை இந்த மனுஷ்ய சரீரத்தின் ஹ்ருதயத்தில் எட்டு தளங்களையுடைய ஹ்ருதயகமலத்தின் தளங்களுக்கு உட்ப்ரதேசமாகிய (ஆகாசத்தில்) இடவெளியில் உபாஸிப்பது தஹர வித்யை எனவும், ஜடராக்நியோடு கூடி சரீரத்தின் ஜீவனத்திற்கு முக்கிய ஆதாரமாயுள்ள பிராணன் எனும் பொருளிலுள்ள இறைவனது ஸ்வரூபத்தைச் சிந்தித்தல் வைச்வாநர வித்யை எனவும், வெளியில் உள்ள ஆதித்தியனது சக்தியை உடையதாய்ச் சரீரத்தின் நேத்திர கோளத்திலுள்ள நேத்ரேந்திரியத்தினில் இருக்கும் இவ்விறைவனது ஸ்வரூபத்தை உபாஸித்தல் உபகோஸல வித்யை எனவும், இச்சரீரத்தினில் ஸகல வியவஹாரங்களையும் செய்துகொண் டிருப்பதாகிய மனம் எனும் பொருளோடு கூடி, தேஹ முழுதும் அறிவு வடிவமாய் சொலிக்கும் இறைவனது வடிவத்தைச் சிந்தித்தல் சாண்டில்ய வித்யை எனவும் உபநிஷதங்கள் வழங்குகின்றன.

உலகெங்கும் வியாபகமாயுள்ளதென்றதனால், ஈச்வர ஸ்வரூபம் சரீரத்திலுள்ள முற்கூறிய பொருள்களிலும் வியாபித்துக்கொண் டிருக்குமென்பது நிச்சயமன்றோ. அப்படிச் சரீரத்தில் முற்கூறிய பொருள்களுள்ள இடங்களில் ஈச்வர ஸ்வரூபத்தை இவ்விதம் உபாஸித்தலே அஹங்க்ரஹோ பாஸ்தியெனக் கூறப்படுவதாம். இவ்வாறு இம்மனித தேஹத்தில் சிந்தித்தலாகிய நான்குவிதங்களான அஹங்க்ரஹோபாஸ்திகளுள் "தஹர வித்யை" எனும் உபாஸ்திக்கு நிகராகவோ மேற்பட்டதாகவோ உள்ள உபாஸ்தி வேறு ஒன்றுமில்லை. ஆதலால் இதன் பெருமை அளவி லடங்காதது.

## பரிபூர்ணனான இறைவன் ஹ்ருதயாகாசத்தில் விளங்குகின்றான்

ஸகல சராசரங்களிலும் வியாபித்துக்கொண் டிருக்கும் ஈச்வர ஸ்வரூபத்தை இந்த மனித தேஹத்திலுள்ள ஹ்ருதயகமலத்திற்குளிருக்கு மிடவெளியாகிய தஹராகாசத்தில் சிந்தித்தலாகிய உபாஸ்தியானது; அகில பூமண்டலாதிபதியான ஸ்ரீராமனை அயோத்யாதிபதி என்பது போன்றதாம். ஸ்ரீராமனது ராஜ சக்தியானது பூமண்டலம் முழுதும் ஸமமாக வியாபித்துக்கொண் டிருக்கினும் அயோத்தியில் அவ்விறைவனை நேரில் காணக்கூடியதா யிருப்பதுபோல, ஸர்வ பரிபூர்ணனான ஈச்வரனை தஹராகாசமென இங்கு கூறிய ஹ்ருதயகமலத்தில்

உள்ளடங்கிய ஆகாசத்தில் நேரில் கண்டுகொள்ளலாம். ஆதலால் இவ்வுபாஸ்தியையே ஸகல வேதங்களும் விசேஷமாய்ப் போற்றுகின்றன.

"𑌅𑌥𑌯𑌦𑌿𑌦𑌮𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇 𑌦𑌹𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌵𑍇𑌶𑍍𑌮
𑌦𑌹𑌰𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌨𑍍𑌤𑌰𑌾𑌕𑌾𑌶 𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌯𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑌨𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌂 𑌤𑌦𑍍𑌵𑌾𑌵
𑌵𑌿𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂"

"இனி இந்த ப்ரும்ம புரமாயுள்ள தேஹத்தில் சிறு தாமரை மலர் போன்ற இல்லமுளது. அதற்குள் யாதொரு ஆகாசம் சிறியதாக உளதோ, அதற்குள்ளிருக்கும் பொருளைத் தேடவேண்டும். அதுவே அறிந்து கொள்ளத்தக்கது" எனச் சாந்தோக்ய உபநிஷதத்திலும்,

"𑌦𑌹𑍍𑌰𑌂 𑌵𑌿𑌪𑌾𑌪𑌂 𑌪𑌰𑌵𑍇𑌶𑍍𑌮𑌭𑍂𑌤𑌂 𑌯𑌤𑍍𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌂 𑌪𑍁𑌰
𑌮𑌧𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌥𑌮𑍍 । 𑌤𑌤𑍍𑌰𑌾𑌪𑌿 𑌦𑌹𑍍𑌰𑌂 𑌗𑌗𑌨𑌂 𑌵𑌿𑌶𑍋𑌕𑌸𑍍 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍
𑌯𑌦𑌨𑍍𑌤𑌸𑍍𑌤𑌦𑍁𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂"

"தேஹ மத்தியிலுள்ளதும், பாபமற்றதும், எப்போதும், பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமுமாயுள்ள சிறிய யாதொரு தாமரைமலர் உள்ளதோ அதனில் மிகவும் நுட்பமான ஆகாசம் யாதுளதோ, அதனில் நிராகுலமாய் விளங்கும் பொருள் யாதொன்றுளதோ அதனை உபாஸிக்கவேண்டும்" என யஜுர் ஆருணத்திலும்,

"𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌧𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿
𑌈𑌶𑌾𑌨𑍋 𑌭𑍂𑌤𑌭𑌵𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑌤𑍇"

"தேஹமத்தியில் அங்குஷ்ட பரிமாணமான ஹ்ருதயகமல ஆகாசத்தில் ஸர்வ பரிபூர்ணனை யாதொரு இறைவன் விளங்குகின்றானோ ஸகல சமாசாரங்களுக்கு அவனை ஈசானனென அறிந்து பின்னர் குறைவற்றவனுவான்" என கடவல்லி யுபநிஷத்திலும்,

"𑌇𑌹𑍈𑌵𑌾𑌨𑍍𑌤𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑍇 𑌸𑍋𑌮𑍍𑌯 𑌸 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍇
𑌤𑌾𑌷𑍋𑌡𑌶𑌕𑌲𑌾𑌃 𑌪𑍍𑌰𑌭𑌵𑌨𑍍𑌤𑍀𑌤𑌿"

"ஓ ஸௌம்ய சரீரத்தின் உள் ஹ்ருதயகமலமாகிய இவ்விடத்திலேயே அவ்விறைவனுளன். எவனிடமிருந்து பதினாறு கலைகளாகிய ஸகல தத்துவங்களும் உண்டாகின்றனவோ" என ப்ரச்நோபநிஷதத்திலும்,

"𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌯 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌞𑍍𑌛𑍇𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯
𑌵𑌶𑍀 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑍇𑌶𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯𑌾𑌧𑌿𑌪𑌤𑌿𑌃"

"இந்த ஹ்ருதயகமலாகாசத்தில் யாதொருவன் விளங்குகின்றானோ, எல்லாவற்றையும் ஆளுகின்றவன், எல்லாவற்றிற்கும் அதிபதி" என ப்ருஹதாரண்ய உபநிஷதத்திலும்,

"𑌯𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌤𑍍 𑌯𑌸𑍍𑌯𑍈𑌷 𑌮𑌹𑌿𑌮𑌾 𑌭𑍁𑌵𑌿
𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌪𑍁𑌰𑍇 𑌹𑍍𑌯𑍇𑌷 𑌵𑍍𑌯𑍋𑌮𑍍𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌃"

"யாதொருவன் ஸர்வக்ஞனும் ஸகல வித்யைகளாலும் பிரஸித்தனுமாயுளனோ, எவனுடைய மஹிமை ஜகத்தில் நன்றாய்க் காணப்படுகின்றதோ, ஜ்வலிக்கின்ற ப்ரும்ம புரமாகிய ஹ்ருதயகமலாகாசத்தில் இவன் விளங்கிக்கொண்டிருக்கின்றான்" எனமுண்டகோபநிஷதத்திலும்,

"𑌸 𑌯 𑌏𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌯 𑌆𑌕𑌾𑌶𑌃 । 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌨𑍋𑌮𑌯𑌃 । 𑌅𑌮𑍃𑌤𑍋 𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑌃"

"அந்தப் பரம்பொருள் ஹ்ருதயத்தின் உள்ளிருக்கும் ஆகாசத்தினுள் விளங்குவோன். அங்கு இவ்விறைவன் மனோமயன் அம்ருதன் ஹிரண்மயன்" எனத் தைத்திரீயோபநிஷதத்திலும் இவ்வாறே மற்றுமுள்ள உபநிஷதங்களிலும் அடுத்தடுத்து விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருத்தல் காண்க. இப்படிப்பட்ட அருமையாகிய உபாஸ்தியே ப்ரும்மவித்தை என்பதாம். இங்கு கூறிய இப்படிப்பட்ட வாக்கியங்களின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்வதனால் மட்டும் இவ்வுபாஸ்தியைச் செய்துவிட முடியாது. இங்கு குருமூலமாகவே அறிந்துகொள்ளவேண்டிய ரஹஸ்யம் விசேஷமாயிருக்கின்றது. அதனைக் கூறுவதற்கே இந்நூல் வந்ததாதலின், இதற்கு ப்ரும்மவித்யா ரஹஸ்யமென இடப்பட்டிருக்கும் பெயர் ஸத்திய மாவதன்பொருட்டு அதனை இனிக் கூறுவாம். அதாவது.

## சரீர அமைப்பு

இந்த மனுஷ்ய சரீரத்தின் அமைப்பு மிகவும் ஆச்சரியமானது. இதன் அமைப்பைச் சற்று விபரமாகத் தெரிந்துகொண்டோமாயின் ஈச்வரனைத் தேடிக் கண்டுகொள்வதற்கெனவே இப்படிப்பட்ட சரீரம் வந்துளதென்பது நன்றாய் விளங்கும். இதன் அமைப்பின் விபரத்தைத் தற்காலப் பரிசோதகர்களது கண்ணாடி கத்தி முதலிய ஸாதனங்களால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் பரிசோதனைகளால், உள்ளது உள்ளபடி ஓர்போதும் அறிந்துகொள்ள இயலாது. ஜீவித்துக்கொண்டிருக்கும் போதுள்ள தேஹத்தின் உறுப்புகளின் நிலைமையை மரித்த சரீரத்தில் கண்டுகொள்ள முடியாது. மணி காட்டுதலாகிய வேலையைச்

செய்துகொண்டிருக்கும் போதுள்ள கடியார உறுப்புகளின் நிலைமையைப் பழுதாய்ப்போன கடியாரத்தில் எப்படிக் காண இயலாதோ அப்படிப் போலவே உயிரோடு கூடியிருக்கும் தேஹத்தினிலுள்ள நாடிகளின் நிலைமையை இறந்த தேஹமாகிய சவசரீரத்தில் கண்டுகொள்ள முடியாது. சரீரமெனும் யந்திரத்தின் உறுப்புகளின் நிலைமை கெட்டுப்போதலினாலேயே மரணம் நிகழுவதாதலால் மரித்த சரீரத்தைப் பரிசோதித்தலினால், உயிர்த்துள்ள சரீர உறுப்புகளின் யதார்த்த நிலைமையைக் கண்டுகொள்ள இயலாதென்பது நிர்ணயம். ஆதலால் உயிர்த்திருக்கும் போதுள்ள ஹ்ருதய கமலத்தின் ஸ்திதியை உள்ளது உள்ளபடி கண்டு கொள்ள மரித்த சரீரசோதனை காரணமாகாது.

இனி உயிர்த்துள்ளபோதே மயக்க மருந்துகொடுத்து ஹ்ருதய கமலத்தை அறுத்துப் பரிசோதித்துப் பார்த்தால் உள்ளது உள்ளபடி அறிந்துகொள்ளலாமே எனின் அதுவும் ஒருக்காலும் ஸாத்தியப்படாது. ஏனெனின்,

"விநாயோகமுந விஜ்ஞாதும் ஹார்தம் லோகே ஶிராஶிதம்।
ஸுஷும்நாம்வா ஸமீஹந்தே மூடாஸ்தே யாந்த்யநர்தகம்॥"

"யோகத்தினால் கண்டுகொள்ள வேண்டிய ஹ்ருதயகமலத்தையாவது ஸுஷும்ந நாடியையாவது உள்ளதுள்ளவாறு கண்டுகொள்ள மூடத்தனத்தால் வேறு விதமான முயற்சியைச் செய்வோன் மிகவும் அனர்த்தத்தை யடைவான்" என்பது முதலிய யோக ரஹஸ்யாதி வாக்கியங்களில் சொல்லியவாறு ஹ்ருதயகமலத்தையாவது ஸுஷும்ந நாடியையாவது கத்திகொண்டறுத்துப் பரிசோதிக்க முயற்சித்தால் அனர்த்த மேற்படுவது நிச்சயம். ஆதலால் உயிருடன் கூடியிருக்கும் காலத்தில் செய்யப்படுவதான யோகம் எனும் ஸாதநமொன்றினாலேயே ஹ்ருதய கமலத்தினுண்மை கண்டுகொள்ளத் தக்கதென அறிக. ஹ்ருதயகமல மென்பது மார்புக்குச் சற்றுக் கீழாக இடதுபுறத்தில் சரீரத்தினுட் பிரதேசத்தில் சிறிய தாமரை மொக்குப் போன்றதாய் மாம்ஸமயங்களான எட்டு தளங்களோடு கூடியதாய் கழுத்திலிருந்து ஒட்டை அளவு தூரத்தில் கீழுள்ளதும் அவ்வாறே நாபிக்குமேலாக ஒட்டை அளவு தூரத்தில் மேலுள்ளதுமாகிய ஓர் அவயவமாம்.

"வக்ஷகோஶ வ்யதீகாஶம் ஹ்ருதயம் சாப்யதோமுகம்
அதோநிஷ்ட்யா விதஸ்த்யாந்தே நாப்யாமுபரி திஷ்டதி"

"மார்புக்கு உட்பிரதேசத்தில் கீழ்முகமாகத் தொங்குகின்றதும், கழுத்

துக்குக் கீழும் நாபிக்குமேலும் ஒட்டை அளவு தூரத்திலுள்ளதுமாகிய தாமரைமொக்குப் போன்றது ஹ்ருதயகமலமாம்'' எனும் உபநிஷத் வாக்கியத்தா லிங்ஙனம் அறிக.

## ஹ்ருதய கமல ஸ்வரூபம்

அந்தத் தாமரை மொக்குப்போன்ற ஹ்ருதயகமலம் ஸுஷும்னை யெனும் நாடியிலிருந்து தோன்றியுளது. ஸுஷும்னையாவது, தேஹத்தின் நடுப்பிரதேச மாகிய இடையிலிருந்து நடுமுதுகின் வழியாக மேனோக்கி நேராகப் புருவ நடுவினில் சென்று அங்கிருந்து சிரஸின் கமலத்திற்கு நடுவிலுள்ள ப்ரும்மரந்திர மெனும் இடம் வரையில் நீண்டுள்ளது.

தேஹத்தின் நடுவிலிருந்து தோன்றிய தென்பதைச் சற்று விபரமாகத் தெரிந்துகொள்ள வேண்டும். அதாவது சரீரத்திற்குள் இடையில் குதம் எனப்படுவதான அபானத்துவாரத்திற்கு இரண்டங்குலத்திற்கு மேலாகவும் குஹ்யமெனும் புருஷாவயவத்திற்கு இரண்டங்குலத்திற்குக் கீழாகவும் உள்ள முக்கோண வடிவமான (△ இதுபோன்ற) ஓர் ஸ்தானம் மூலாதார மெனப்படும்.

## ஸுஷும்னையும் ஆதாரங்களும்

‘‘𑌦𑍇𑌹𑌸𑍍𑌯𑌮𑌧𑍍𑌯𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂𑌮𑍂𑌲𑌾𑌧𑌾𑌰𑌾 𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
𑌅𑌪𑌾𑌨𑌾𑌦𑍍𑌦𑍍𑌵𑍍𑌯𑌙𑍍𑌗𑍁𑌲𑌾𑌦𑍂𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌮𑍇𑌢𑍍𑌰𑌾𑌦𑍍 𑌦𑍍𑌵𑍍𑌯𑌙𑍍𑌗𑍁𑌲𑌾
𑌦𑌧𑌃॥

‘‘தேஹத்தின் மத்தியில் உள்ள ஓர் இடம் மூலாதார மெனப்படும். அபானத் துவாரத்திற்கு இரண்டங்குலம் மேலும் குஹ்யத்திற்கு இரண்டங்குலம் கீழும் உள்ளது,

‘‘𑌤𑍍𑌰𑌿𑌕𑍋𑌣𑌾𑌖𑍍𑌯𑌂 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌾𑌗𑍍𑌰𑌂𑌚 𑌕𑌨𑍍𑌯𑌾𑌕𑌾𑌯𑍋𑌨𑌿 𑌸𑌨𑍍𑌨𑌿𑌭𑌃’’

‘‘முக்கோணமாகவும் மேனோக்கிய நுனியை யுடையதும் கந்நியின் யோனி போன்றதுமானது'' என்பது முதலிய யோகதத்வாதி யுபநிஷத் வாக்கியங்களால் இதனை யறியலாம். அப்படிப்பட்ட மூலாதாரத்தின் நுனிக் கோணத்திலிருந்து ஸுஷும்னை தோன்றி ஓர் சிறு மூங்கிற் குழாய் போன்று இடைவெளித் துவாரத்தையுடையதாய் அவ்விட வெளித் துவாரத்தில் ஸம்பந்தித்த மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை எனும் ஆறு ஆதார ஸ்தானங்களையு

முடையது. எல்லாவற்றிற்கும் அடியில் மூலாதாரமும் அதற்குச் சற்று மேலாக மற்றுமுள்ள ஐந்து ஆதாரங்களும் அமைந்திருக்கின்றன. அதாவது மூலாதாரத்தி லிருந்து மேனோக்கிச் சிரஸில் வந்து சேரு கின்ற அந்த ஸுஷும்னை எனும் நாடிக்குள் யோகாப்பியாஸ முடைய வர்களின் பிராண மனங்களே ஸஞ்சரிக்கும். மற்றவர்களின் பிராண மனங்கள் அதற்குள் ஸஞ்சரிக்க ஹேதுவில்லை. ஸுஷும்னையின் அடியி லுள்ள ஸ்தானம் மூலாதாரமும், அதற்கு மேலாக ஸ்வாதிஷ்டான மணி பூரகஸ்தானங்களும், ஹ்ருதயத்திற்கு நேராக அனாஹத ஸ்தானமும், கழுத்திற்குள் விசுத்தி ஸ்தானமும், புருவத்தினிடையில் ஆக்ஞா ஸ்தான மும் உள்ளதென யோகத்தினு லறியலாம். இவ்வித ஆறு ஸ்தானங் களோடு கூடிய ஸுஷும்னையானது ஸூர்யன் போலப் பிரகாசிக்கும் காந்தியுடையது. அந்த ஸுஷும்னையின் உள்ளிருக்கும் துவாரத்தின் வழியாக மேனோக்கிச் சிரஸ்வரையிலும் யோகிகளின் பிராணனும் சித்த மும் ஸஞ்சரிக்கும்.

## குண்டலிநீநாடி

இந்த ஸுஷும்னு நாடியின் அடிப் பிரதேசமாகிய மூலா தாரத்தில் ஸுஷும்னையின் அடித் துவாரத்தை மறைத்துக்கொண்டு தூங்கும் பாம்பு போன்ற ஓர் நாடி இருக்கின்றது. அதுவே குண்டலிநீ என்பதாம். நாடிகளைச் சுத்திசெய்து பிராணுயாம அப்பியாஸத்தை ஸாதித்துவிட்டால் அந்தக் குண்டலினி நாடி ஸுஷும்னையின் அடித் துவாரத்தை மறைத்துக்கொண்டு இருத்தலை விட்டு விலகியிருக்கும். அதாவது பிராணுயாம அப்பியாஸம் செய்தால் ஸ்வாதிஷ்டான ஸ்தா னத்திலுள்ள அக்கினிதத்வம் ஜ்வலிக்கும்.

## ஹடயோகம்

இங்கு இவ்விசேஷ மறியவேண்டும். மூலாதாரத்தில் பூமி தத்வ மும், ஸ்வாதிஷ்டானத்தில் அக்கினி தத்வமும், மணிபூரகத்தில் ஜல தத்வ மும், அநாஹதத்தில் வாயு தத்வமும், விசுத்தியில் ஆகாச தத்வமும்; ஆக்ஞை எனும் இடத்தில் மனஸ் தத்வமும் வேலை செய்யும். முறைப் படி பிராணுயாமாப்பியாஸம் செய்தால், காற்று நெருப்பை ஜ்வலிக்கச் செய்யு மியல்புடையதாதலால் அது ஸ்வாதிஷ்டானத்திலுள்ள அக்கினி தத்வத்தை ஜ்வலிக்கச் செய்யும். அவ்வக்கினி தத்வமும் வாயு தத்வமும் ஜ்வலனசலனக் கிரியையைச் செய்ய ஆரம்பித்தால் அதனுல் தாக்குண்ட குண்டலினி நாடியானது குண்டலமாயிருக்கும் நிலைமையைவிட்டு நீண்ட தாய்க்கொண்டு ஸுஷும்னுதுவார அடைப்பை விடுத்து விலகிப்

போகும். அவ்வாறு ஸுஷும்னையின் அடித்துவாரம் துறந்துபோகும் போது அந்த யோகியின் சித்தமும் பிராணனும் ஸுஷும்ணு த்வாரத்திற்குள் பிரவேசித்து மேனோக்கி ஸஞ்சரித்துக்கொண்டு சிரஸ்ஸிலுள்ள துவாதசாந்தமெனும் ஸ்தானத்தை யடையும்.

ஸுஷும்ணு த்வாரத்தில் சென்ற சித்தமானது பரம்பொருளுக் கந்நியமாயுள்ள பொருள்களைச் சிந்திக்காமல் பரமேச்வர சிந்தனை மாத்திரத்தோடு ஆனந்தானுபவத்தை யுடையதாகும். இதுவே ஹடயோக மெனப்படும். இந்த ஹடயோகமானது தற்காலம் நம்போன்றவர்களுக்கு ஸித்தியாவதற்கு ஹேதுவில்லை என்பதை நாம் நிச்சயமாய்க் கூறலாம். ஆதலால் நாம் பரம்பொருளின் ஸ்வரூபத்தை அறிந்து அனுபவிப்பதற்கும் அதற்கு ஸாதனமாக அவனது ஸ்வரூபத்தைத் தியானித்தலாகிய அப்பியாஸத்தை செய்வதற்கும் வேறு வழியையே தேடவேண்டும். ஹடயோகத்தைக் காட்டிலும் கோடிமடங்கு சிறந்ததும் அப்பியஸிக்க எளிதும், அப்பியாஸ நியமங்களினின்றும் சற்றுத் தவறுதலால் பிரத்திய வாயத்திற்கு ஹேதுவாகாததுமாகிய மற்றுமோர் உத்தம மார்க்க முளது. அதுவே இங்கு யாம் கூறவந்திருக்கும் "ஊஹாவித்யா" ஊஹாவித்யா எனும் அஹங்க்ரஹோபாஸ்தி என்பதாம். இது ராஜயோகம் என வழங்கப்படும். இதனை விஸ்தாரமாகக் கூறுவதே இந்நூலில் பிரகிருதம். ஆதலால் அதனை இனி விவரிப்பாம்.

## ஊஹாவித்யா அல்லது ராஜவித்யா

இந்த அஹங்க்ரஹோபாஸ்தியாகிய ஊஹாவித்யையை அப்பியஸிப்பதற்கும் முற்கூறிய ஸுஷும்ணு நாடியின் ஸ்வரூபத்தை விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகிய விஷயம். ஆதலால் அதன் ஸம்பந்தமாயுள்ள மற்றும் சில உண்மைகளையும் இங்கு கூறுவாம். அதாவது,

முக்கோண வடிவமாயுள்ள மூலாதாரத்தின் மேற்கோணத்தினின்றும் மேற்கிளம்பி முதுகின் நடுவெலும்புக்குள்ளாக மேனோக்கி சிரஸ்ஸில் சென்றுளதான ஸுஷும்ணு நாடிபோல வேறு சில நாடிகளும் சரீரத்திற்குள்ளிருக்கின்றன. மூலாதாரத்தின் பார்சுவகோணங்களிலிருந்து இரண்டு நாடிகள் ஸுஷும்னையின் பார்ச்வங்களின் வழியாக மேனோக்கிப் புருவங்களின் இடையில் வந்து சேருகின்றன. மூலாதாரத்தின் இடதுபார்ச்வ கோணத்திலிருந்து மேனோக்கிவரும் நாடிக்கு "இடை" எனவும், வலது பார்சுவத்திலிருந்து வரும் நாடிக்குப் "பிங்கலை" எனவும் பெயர் யோக நூல்களில் வழங்கப்படுகின்றது.

மூலாதாரத்திற்குச் சற்று மேலாகவுள்ள நாபி ஸ்தானத்தினின்றும் மற்றுமுள்ள நாடிகள் தோன்றி ஹ்ருதயகமலத்தில் ஸம்பந்தப் பட்டு தேஹத்தின் கால் முதல் தலையீறாகவுள்ள ஸகல அவயவங்களிலும் வ்யாபித்துக்கொண் டிருக்கின்றன. ஆதலால் நாபி ஸ்தானமே நாடி சக்கரம் என்பதாம்.

"நாபிமண்டலமாச்ரித்ய குக்குடாண்டமிவ ஸ்திதம் |
தத்ர நாட்யஸ் ஸமுத்பந்நா: திர்யகூர்த்வமதோபவா:"

"நாபி மண்டலத்தில் ஆச்ரயித்து கோழிமுட்டை போன்றதாய் நாடி சக்ர மிருக்கின்றது. அங்கிருந்து நாடிகள் தோன்றி சரீரத்தில் மேன் முகமாகவும் கீழ் முகமாகவும் குறுக்கு முகமாகவும் சென்று பரவியிருக் கின்றன". என யோக தத்வாதி உபநிஷதங்களில் இதனைக் காணலாம். சரீரத்திலுள்ள நாடிகளைக் கணக்கிட ஸாத்திய மில்லை. ஆதலால் இங்கு கூறப்படும் நாடிகள் இவைகளுள் முக்கியங்களா யுள்ளவைகளே என்பதறிக. அதாவது நூற்றோர் நாடிகள் முக்கியங்கள். இவை களுள் சிரஸ்ஸின் கபாலம் செல்லும் நாடி ஒன்றே முக்கியமானது. அதுவே ஸுஷும்னை என ஏற்கெனவே கூறப்பட்டது. அதுவே மூலாதாரத்தின் மேற்கோணத்தினின்றும் தோன்றி மேனோக்கியது. சரீரத்தினின்றும் ஜீவாத்மா பிரிந்து போகும்போது அந்த நாடியின் வழியாக சிரஸ்ஸின் கபாலத்தை யடைந்து ப்ரும்ம ரந்திரமெனும் கபால த்வாரத்தின் வழியாக வெளிப்படுமாயின் மீண்டும் பிறவியிராத பதத்தை யடையலாம். இவ்வுண்மையும் கடவல்லி, முண்டகம், தைத்திரீயம் முதலிய உபநிஷதங்களில் கூறப்பட்டிருக்கின்றது. இதனை,

"சதம் சைகா ச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்த்தானமபி நிஸ்ஸ்ருதைகா | தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ஙன்யா உத்க்ரமணே பவந்தி"

"நூறும் மற்றுமோர் நாடியும் ஹ்ருதயத்தில் ஸம்பந்தித்துள்ளன. அவை களுள் மூர்த்தா எனும் சிரஸ்ஸின் கபாலத்தை ஒன்று அடைந்துள்ளது. அதன் வழியாக வெளிச்செல்லும் ஜீவன் மோக்ஷமடைகின்றான். மற்ற வைகளின் வழியாக வெளிப்படும் ஜீவன் மீண்டும் பிறப்பான்" என் பதாக கடவல்லி முண்டகாதி உபநிஷத் வாக்கியங்களாலறிக. ஆதலால் சரீரத்திற்குள் இருக்கும் நாடிகளுள் ஸுஷும்னை என்பதே மிகவும் ச்ரேஷ்டமானது.

## நாடிகளின் விபரம்

அதற்கடுத்தபடியாக இளைபிங்களை எனும் மூலாதார பார்சுவ கோணங்களில் தோன்றிய நாடிகளிரண்டையும் சொல்லலாம். அவை மரத்தைப்பற்றிய கொடிகள்போல ஸுஷும்னையைச் சுற்றிக்கொண்டும் பார்சுவத்திலும் மேனோக்கிச் சென்று நெற்றிக்குப்போய் புருவங்களுக்கிடையில் வந்து பிறகு நாசி த்வாரங்களுக்கு வந்து சேருகின்றன. நாம் சுவாஸம் இழுத்தல் சுவாஸம் விடுதல் இந்த நாடிகளின் வழியாகவேயாகும். இவைகளும் ஹ்ருதயகமலத்தில் ஸம்பந்த முடையவைகளே.

இவை தவிர பூஷா, அலம்புஸா, சுக்லா, ஸாஸ்வதீ, விச்வோதரீ, பயஸ்விநீ, காந்தாரீ, ஹஸ்திஜிஹ்வா, ராகா, ஸிநீவாலீ, குஹூ, சங்கிநீ எனப் பன்னிரண்டு நாடிகளுள்ளன. இவையும் முக்கியங்களே. இந்த நாடிகளுடைய கிரியைகளையும் உபயோகங்களையும் பெயர்களின் அர்த்தங்களினாலேயே கண்டுகொள்ளுமாறு இவைகளுக்குப் பெயரிடப்பட்டிருக்கிறது. இந்த நாடிகள் நாபி சக்கரத்தினின்றும் தோன்றியவை ஆயினும் ஹ்ருதயத்திலும் ஸம்பந்தமுள்ளவைகளே யாம். ஹ்ருதயகமலத்தின் தளங்களிலிருந்து இந்திரிய மனங்கள் இங்கு கூறிய நாடிகளின் வழியாகக் கண் காது முதலிய இந்திரிய கோளகங்களையும், சிரஸ் கண்டம் எனும் ஜாக்ரத்ஸ்வப்ன ஸ்தானங்களையும் அடைந்து தத்தம் கிரியைகளைச் செய்யும். அதாவது காந்தாரீ ஹஸ்திஜிஹ்வை எனும் இரண்டு நாடிகளும் ஹ்ருதயத்தை யடைந்து கண்களுக்குச் செல்லுகின்றன. பூஷா அலம்புஸா எனும் இரண்டும் காதுகளில் சென்றுள்ளன. சுக்லா எனும் நாடி புருவங்களுக்கு மத்தியில் சென்றுளது. ஸாஸ்வதி எனும் நாடியானது நாக்கின் நுனியை அடைந்துளது. அதுவே வார்த்தைகளை வசனிக்கும். விச்வோதரீ எனும் நாடி அன்னத்தைப் பசனம் செய்ய ஜாடராக்கினியை அடைந்துளது. பயஸ்விநீ என்பது தீர்த்தத்தை உட்கொள்கின்றதும் கண்டத்தை அடைந்து தும்பலைச் செய்வதுமானது. நாடி சக்கரத்தினின்றும் மூன்று நாடிகள் கீழ்முகமாகச் சென்றுள்ளன. அவைகளுள் ராகா என்பது சுக்லத்தை மோசனம் செய்யப் புருஷாவயவத்தை அடைந்துளது. ஸிநீவாலி மூத்திரத்தை மோசனம் செய்வது. குஹூ எனும் நாடியானது மலமோசனம் செய்தலில் உபயோகத்தை யடைந்து அபானத்துவாரம் சென்றுளது. சங்கிநீ எனும் புண்ணியமாகிய ஓர் நாடியானது புசிக்கப்பட்ட அன்ன ஸாரத்திலுள்ள அம்ருதாம்சத்தை கிரஹித்துக்கொண்டு சிரஸில் கொண்டுபோய்ச் சேர்க்குமியல்புள்ளது. ஆக இவ்விதம் பன்னிரண்டு நாடிகள் முற்கூறிய ஸுஷும்னை இளைபிங்களை என்பவைக்கு அங்கியங்களா யிருப்பவை.

"காந்தாரீ ஹஸ்திஜிஹ்வா ச நயநாந்தம் வ்யாவத꞉। பூஷா சாலம்புஸா சைவ கர்ணத்வயமுபாஶ்ரிதே। நாடீ ஶுக்லாஹ்வயா தஸ்யா ப்ரூமத்யே உபஸம்ஸ்திதி। ஸரஸ்வத்யாஹ்வயா நாடீ ஜிஹ்வாந்தா வாக்ப்ரஸாரிணீ। நாடீ விஶ்வோதரீ நாம புங்க்தே(அ)ந்நம் ஸாவதா[illegible]யம்। பீத்வா பயஸ்விநீ தோயம் கண்டாக்ராத்ரே க்ஷாந்தம்। ராகா ஶுக்ரம் ஸிநீவாலீ மூத்ரம் குஹூர்மலம்। புக்தாந்ந ஸாராய ஶங்கிநீ மூர்த்நி வாஹதி। ஏவமாதிவாக்யைர் யோகதத்வாதிஷு ஸம்ஸ்திதம் வ்யாப்தம்"

"காந்தாரீ ஹஸ்திஜிஹ்வை எனும் இரண்டும் நேத்ரங்களை அடைந்துள்ளன. பூஷா அலம்புஸா எனும் இரண்டு காதுகளில் சென்றிருக்கின்றன. சுக்லா எனும் நாடி புருவங்களின் மத்தியில் சென்றுளது. ஸரஸ்வதி எனும் நாடி நாக்கை அடைந்து வார்த்தைகளைப் பேசும். விச்வோதரீ என்பது அன்னத்தைப் புசிப்பதில் உபயோகமடையும். பயஸ்விநீ என்பது தீர்த்தத்தை உட்கொள்ளு மியல்புள்ளது. நாடிசக்கரத்திலிருந்து தோன்றி ராகா எனும் நாடி குஹ்ய மடைந்து சுக்லத்தை மோசனம் செய்யும். ஸிநீவாலீ எனும் நாடியும் அவ்விடமடைந்து மூத்ரமோசனம் செய்யும். குஹூ எனும் நாடியானது அபானமடைந்து மலமோசனம் செய்யும். புசித்த அன்னத்தின் ஸாரத்திலிருந்து அம்ருதாம்சத்தைச் சிரஸில் கொண்டுபோய் வைத்தலை சங்கிநீ நாடிசெய்யும் என்பவை முதலிய வாக்கியங்களால் யோகதத்துவம் முதலிய உபநிஷதங்களில் இவ்விஷயத்தை விபரமாகக் காணலாம்."

## ஹ்ருதய கமலம்

தேஹத்திலுள்ள நாடிகள் ஸகலமும் உயிர்த்துக்கொண்டு தத்தம் வேலைகளில் ஈடுபடுதலுக்கு முக்கியமாகிய காரணம் ஹ்ருதயகமலமே. ஹ்ருதய கமலமானது மார்புக்கு நேராக உட்புறமிருக்கும் ஸுஷும்னையில் ஸம்பந்தித்ததாய்க் கொண்டுதோன்றி, காம்புபோன்ற நாடியின் நுனியில் அமைந்துள்ளது. அப்படிப்பட்ட ஹ்ருதயகமலமானது தாமரை மொக்குப்போல மூடிக்கொண்டுள்ள எட்டு தளங்களை யுடையது. அது ஸதா கீழ்முகமாகத் தொங்கும்.

## ஹ்ருதய கமல மலர்ச்சி

பரம்பொருளைப்பற்றிய சிந்தனையாவது, பரம்பொருளின் வாசகங்களாயுள்ள ப்ரணவம் முதலிய நாமாக்களை உச்சரிக்கும்போதாவது, ப்ராணயாமத்தை அப்பியஸிக்கும்போதாவது ஊர்த்துவ முகமாய் ஹ்ருதயகமலம் மேனோக்கியதாய்க்கொண்டு கமலதளங்கள் மலர்ந்து விகாஸமடையும். இங்கு யாம் கூறியதைக்கொண்டு பிரணவத்தை எல்லோரும் உச்சரிக்க விரும்புவார்கள். ஆனால் அது கூடாது. பிரணவஜபத்தின் ஆவ்ருத்தியால் ஹ்ருதயகமலத்தை மலரச்செய்தல் ஸந்யாஸிகளுக்கே விதிக்கப்பட்டிருக்கின்றது. அவர்களுக்கும் தர்மநூல் விதியையும் மந்திரசாஸ்திர உண்மையையும் அறிந்த மஹாகுருவின் மூலமாக உபதேசம் பெற்றே அநுஷ்டானம் விதிக்கப்பட்டுளது. அதனையறியாமல் விதிவரம்பின்றி எல்லோரும் ப்ரணவாவ்ருத்தி செய்வார்களாயின் அனர்த்தமடைவது நிச்சயம்.

ராமநாமம் சிவநாமம் முதலியவைகளை உச்சரிக்கும்போதும் ஹ்ருதயகமலம் மேல்முகம் நோக்கியதாய்க் கொண்டு மலர்ச்சியடையும். ப்ராணயாமம் செய்யும்போதும் ஹ்ருதயகமலம் விகாஸிக்குமென்பது விதியறிந்து செய்யும் பிராணயாமமே. ஸந்தியாவந்தன ஜபாதிகாலங்களில் அப்படிப்பட்ட பிராணயாமம் விதிக்கப்பட்டிருக்கின்றது.

## ப்ராணயாமம்

வலது மூக்கு த்வாரத்தை வலதுகைக் கட்டைவிரலால் அடைத்துக்கொண்டு, இடது மூக்குத் துவாரத்தின் வழியாக மெதுவாகப் பதினாறு மாத்திரை கால அளவையில் வாயுவை உள்ளுக்கிழுத்துப் பிறகு பவித்திர விரல் சுண்டுவிரல்களால் இடது மூக்குத் துவாரத்தையும் அடைத்துப் பொத்திக்கொண்டு அறுபத்துநான்கு மாத்திரை கால அளவு சலிக்காமல் வாயுவை ஸ்தம்பனம்செய்து நிறுத்துதலாகிய கும்பகத்தைச் செய்துகொண்டு, ஓம் ஹ்ரீம் என்பதாதி மந்திரத்தை மும்முறை மனோமாத்திரத்தினால் ஜபித்துப் பிறகு வலது மூக்குத்வாரத்தின் வழியாக முப்பத்திரண்டு மாத்திரை கால அளவு உள்ளிருக்கும் வாயுவை வெளிவிடுதலாகிய ரேசகத்தைச் செய்யவேண்டும். இதுவே ப்ராணயாமம் எனப்படும். தத்தம் வர்ணாச்ரமத்திற்குரிய விதியைத் தழுவியே பிராணயாமம் செய்யவேண்டுமேயன்றி புஸ்தகப்படிப்பை மாத்திரம் கொண்டு விதிவரம்பின்றி மந்திரங்களை ஜபித்துக்கொண்டு பிராணயாமம் செய்யத் தலைப்படுவார்களாயின் அப்போதே அனர்த்தத்திற்குள்ளாவது நிச்சயம். இங்கு கூறிய ப்ராணயாமம் பூரகப்ராணயாமம் எனப்படும். ரேசகப்ராணயாமம்

கும்பகப்ராணயாமம் என மற்றுமிரண்டுண்டு. மூச்சை முன்னர் உள்ளிழுத்து நிறுத்திக்கொண்டு செய்வதுபோல, மூச்சை முன்னர் வலது நாசித் துவாரத்தின் வழியாக மெதுவாக வெளிவிட்டுத் தகைந்து நிறுத்திப்பிறகு அறுபத்துநான்கு மாத்திரை கால அளவு கும்பகத்திலிருந்து மனத்தால் மும்முறை முற்கூறிய பிராணயாம மந்திரத்தை ஜபித்தல் ரேசகப்பிராணயாம மெனப்படும். இழுத்தலும் விடுதலுமின்றி சடுதியில் இருத்வாரங்களையும் பொத்திக்கொண்டு செய்யும் பிராணயாமம் கும்பகப்ராணயாமம் என்பதாம். இந்த கும்பகப்ராணயாமம் ஸந்நியாஸிகளுக்கே விதிக்கப்பட்டுளது. ரேசகப்ராணயாமம் யோகாப்பியாஸம் செய்வோர்களனுஷ்டிக்கக்கூடியது. பூரகப் பிராணயாமம் நம்போன்றவர் அனுஷ்டிக்கக் கூடியது. இங்கு கூறிய மாத்திரை கால அளவைக் கிரமமாகக் குறைந்த மாத்திரை கால அளவிலிருந்து அப்பியஸித்து ஸாதிக்கவேண்டும். அப்படி அப்பியஸித்தலில் உள்ளிழுக்கும் கால அளவையில் நான்கு பங்கு நிறுத்தி ஜபிக்கும் கும்பகமும், இழுக்கும் கால அளவையில் இரண்டு பங்குள்ளதாக மூச்சை வெளிவிடும் கால அளவையும் மாத்திரம் அப்பியாஸ காலத்திலேயே கைக்கொள்ளவேண்டும். ஸந்தியாவந்தனாதி மற்ற கர்மானுஷ்டானங்களில் செய்யும் ப்ராணயாமத்தின் விதியும் இவ்வாறே என்றறிக. இப்படிப்பட்ட பிராணயாமங்களுள் ரேசகப்ராணயாமமென இங்கு கூறிய ப்ராணயாமத்தினாலும் ஹ்ருதயகமலம் விகாஸ மடையும். ஹ்ருதயகமலத்திற்கு எட்டு தளங்களுண்டு. அந்த தளங்களிலிருந்து நாடியின் வழியாக மின்சார சக்தி கம்பியின் வழியாக ஸஞ்சரிப்பதுபோல சிரஸிலிருக்கும் மூளைக்கு வந்து ஜாக்ரத் வியவஹாரத்தைச் செய்கின்றது. அதாவது ஹ்ருதயகமலதளத்தை விட்டுவிடாமலே அங்கிருந்துகொண்டே மூளைவரையிலும் நாடியின்வழியாக நீண்டு மூளையில் இருந்துகொண்டு வேலைசெய்யும்போது மாத்திரம் ஜாக்ரத் அவஸ்தை ஏற்படுவதாம். மனம் ஹ்ருதயகமலதளங்களின் நுனியைவிட்டுக் கொஞ்சம் அடிப்புறத்தை அடைந்து அங்கிருந்து நாடிமார்க்கமாக (Cerebellum) சிரஸின் கீழ்ப்பக்கத்திலுள்ள சிறுமூளையில் வந்து வேலைசெய்யும்போது ஸ்வப்னம் எனும் கனவு ஏற்படும்.

## அவஸ்தா த்ரயமும் ஹ்ருதய கமலமும்

ஹ்ருதயகமலதளங்களின் ஸம்பந்தத்தை முற்றும் விட்டு அதற்கும் உட்பக்கத்தை மனம் அடைந்துள்ள ஸமயம் ஜாக்ரத் ஸ்வப்னம் எனும் இரண்டும் நீங்கி ஸுஷுப்தி அவஸ்தையை யடையும். அந்த ஸுஷுப்தி ஸ்தானமானது புரீதத் எனும் பெயராலும் வழங்கப்படுகின்றது. ஹ்ருதயகமலத்திற்குள் அடிப்பக்கத்தில் உள்ள ஆகாசத்தில் மனம் எப்போது அடங்கி நிற்குமோ அப்போது ஜாக்ரத் எனும் அவஸ்தை

யில்லை. ஸ்வப்னமென்பதுமிராது. ஸுஷுப்தியுமிராது. இம் மூன்று அவஸ்தைகளுக்கும் அந்நியமான துரீயமெனும் நிலைமையே அப்போது ஏற்படும். துரீய நிலைமையே ஸமாதிநிலைமை எனப்படும். ஸமாதிநிலைமையில் பரமாத்மஸ்வரூப சிந்தனைக்கு அந்நியமான வேறு விருத்தியிராது. பரம்பொருளின் ஸ்வரூபத்தோடு சித்தம் ஒன்றுபட்டு அந்த வஸ்துவின் ஸ்வரூபத்தையே சிந்தித்துக்கொண்டிருக்கும்.

"ஹ்ருதய கமலத்தினுள் அடிப்புறத்திலுள்ள ஆகாசத்தில் அப்போது சித்தம் அடங்கியிருக்கும்" எனும் துரீய நிலைமையைப்பற்றிச் சற்று விபரமாக அறிந்துகொள்ளவேண்டிய விஷயம் ஏராளமாயுள்ளது. அதாவது அந்த ஆகாசமே "தஹராகாஶஃ" தஹராகாசமெனும் புனிதமாகிய ஸ்தானம். ஈச்வரஸ்வரூபம் தேஹத்திற்குள்ளும் வெளியிலுள்ள ஸகல ப்ருஹ்மாண்டங்களிலும் வியாபித்துக்கொண்டிருக்கினும் மனிதப்பிறவி பெற்றவன் தனது தேஹத்திலேயே அந்த ஸ்வரூபத்தைக் கண்டுகொள்ள இயலும். மனிதப்பிறவியின் ஹ்ருதயகமலமே பரம்பொருளின் ஸ்வரூபத்தைக் கண்டுகொள்ளத்தக்க இயல்புடையதாக அமைந்துள்ளது. பசுபக்ஷ்யாதி ஜந்துக்களின் தேஹ இயல்பு அவ்வாறு அமையவில்லை. மனித சரீரத்தின் ஹ்ருதயகமலத்திலுள்ள தஹராகாசமானது அங்குஷ்டமெனும் கட்டை விரலின் பரிமாணத்தை யுடையது. சரீரத்திலுள்ள மற்ற இடங்களில் சித்தம் நிற்கும்போது ராகத்வேஷாதி சித்தவ்ருத்திகள் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும். தஹராகாசத்தில் மனம் அடங்கி நிற்கும்போது ராகத்வேஷாதி வ்ருத்திகள் ஏற்படாமலிருக்கும். ஆலஸ்ய ப்ராந்தியாதிகளும் ஏற்படா. இந்தச் சரீரத்திற்குள் அப்படிப்பட்ட இடம் அங்குஷ்ட பரிணாமமுள்ள தஹராகாசமாதலால் அங்கு கண்டுகொள்ளக்கூடிய ஈச்வரனை அங்குஷ்ட பரிணாமமுடையவனென உபநிஷதங்கள் கூறுகின்றன.

"ஹ்ருத்யபேக்ஷயா து மநுஷ்யாதிகாரத்வாத்"

(1-3-7-25) எனும் ப்ருஹ்மஸூத்ரத்தின் பாஷ்யத்தில் இதனை விஸ்தாரமாக அறியலாம்.

"அங்குஷ்டமாத்ர: புருஷோऽந்தராத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:"

"அந்தராத்மாவாகிய புருஷன் ஜனங்களின் ஹ்ருதயகமலத்தில் ஸதா அங்குஷ்ட பரிணாமமுடையவனாகக் காணப்படுவோன்" என்பது முதலிய கடவல்லியாதி உபநிஷத் வாக்கியங்களா லிவ்வுண்மையை அறியலாம். மூங்கில் குழாய்க்குள்ளடங்கிய ஆகாசத்தை அக்குழாய்ப் பரிணாமமுடைய

தாய்க் கூறுவதுபோல ஹ்ருதயகமலத்திலுள்ள ஆகாசத்தில் காணப்படும் பரமாத்மஸ்வரூபத்தை அந்த பரிணமமுடையவனெனக் கூறுதலாம் என்றறிக.

## ஹ்ருதய கமலமே பரமாத்மாவைக் கண்டுகொள்ளு மிடம்

இது அகில பூமண்டலாதிபதியாகிய ஸ்ரீராமனை அயோத்யாதிபதி என்பதுபோன்றது. ஸ்ரீராமனது ராஜ்யபரிபாலன சக்தியை உலகில் எவ்விடத்திலும் கண்டு நிச்சயிக்கலாம். ஆயினும் அயோத்தியில் அந்த சக்தியாளனை நேரில் காணக்கூடியதா யிருத்தல்போல், ப்ரும்மாண்டம் முழுதும் வியாபகமாயுள்ள பரம்பொருளை எங்கு முள்ளவனென அறியலாமாயினும், ஹ்ருதயகமல தஹராகாசத்தில் அவனது ஸ்வரூபத்தை நானே இவனென அனுபவிக்கலாம்.

இவ்வுண்மைபற்றியே சாந்தோக்யத்தில் இவ்விஷயம்

“அத² யதி³த³மஸ்மிந் ப்³ரஹ்மபுரே த³ஹரம் புண்ட³ரீகம் வேஶ்ம த³ஹரோ(அ)ஸ்மிந்நந்தராகாஶஸ்தஸ்மிந் யத³ந்தஸ்தத³ந்வேஷ்டவ்யம் தத்³வாவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி”

“இனி இந்த ப்ரும்மபுரமாகிய சரீரத்தில் சிறு தாமரைமலர்போன்ற க்ருஹம் அதாவது ஹ்ருதயகமலம் யாதொன்றுளதோ, பரம்பொருளை அறிந்துகொள்ளக்கூடிய இடமோ, விஷ்ணுவுக்கு ஸாளக்ராமம்போல், அந்த ஹ்ருதயகமலத்தினுள் யாதொரு ஆகாசமுளதோ, அதன் மத்தியில் யாதொன்றுளதோ, அது தேடத்தக்கது, அதுவே அறிந்துகொள்ளத் தக்கது.”

என ஆரம்பித்துக் கூறப்பட்டுளது. இவ்வாறு ஆசிரியன்போல உபதேசித்து சிஷ்யனுக்கு உதிக்கக்கூடியதுபோன்ற ஸந்தேஹத்தையும் உபநிஷதமே எடுத்துக் காட்டுகின்றது. அதாவது குருசிஷ்ய ஸம்வாத ரூபமாக உள்ளதென்றறிக.

“தம் சேத்³ ப்³ரூயுர்யதி³த³மஸ்மிந் ப்³ரஹ்மபுரே த³ஹரம் புண்ட³ரீகம் வேஶ்ம த³ஹரோ(அ)ஸ்மிந்நந்தராகாஶ: கிம் தத³த்ர வித்³யதே யத³ந்வேஷ்டவ்யம் யத்³வாவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி ஸ ப்³ரூயாத்”

“முற்கூறியவாறு உபதேசித்த ஆசிரியனை நோக்கி சிஷ்யர்கள் இவ்வாறு கேழ்க்க (கூடும்) லாயினர். இறைவனோ ஸர்வவியாபகன், தேஹமோ ஏகதேசமான பரிச்சின்னப்பொருள். அதனில் ஹ்ருதயகமலம் மிகவும்

சிறிய பரிச்சின்னப்பொருள். அதற்குள்ளிருக்கும் ஆகாசமோ அதனிலும் சிறியது. அதற்குள்ளிருக்கும் பொருளைத் தேடவேண்டுமெனின் இவ்வளவு சிறிய இடத்தில் யாது இருக்கக்கூடியது? அப்படி மிகவும் சிறியதாக யாதேனும் இருப்பின் அதனைத் தேடுவதனால் என்ன பயன் கிடைக்கப்போகின்றது? என ஸந்தேஹிக்கும் சிஷ்யர்களை நோக்கி ஆசிரியர் இவ்வாறு கூற(த்தகும்)" லாயினர். அதாவது,

𑌯𑌾𑌵𑌾𑌨𑍍𑌵𑌾 𑌅𑌯𑌮𑌾𑌕𑌾𑌶𑌸𑍍𑌤𑌾𑌵𑌾𑌨𑍇𑌷𑍋𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌯 𑌆𑌕𑌾𑌶𑌃 |
𑌉𑌭𑍇 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌦𑍍𑌯𑌾𑌵𑌾𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌵 𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑍇 𑌉𑌭𑌾𑌵𑌗𑍍𑌨𑌿𑌶𑍍𑌚
𑌵𑌾𑌯𑍁𑌶𑍍𑌚 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌾𑌵𑍁𑌭𑍌 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌨𑍍𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌯𑌚𑍍𑌚𑌾𑌸𑍍𑌯
𑌇𑌹𑌾𑌸𑍍𑌤𑌿 𑌯𑌚𑍍𑌚 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌦𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌸𑌮𑌾𑌹𑌿𑌤𑌮𑌿𑌤𑌿"

"ஓ சிஷ்யர்களே! சிறிதாயுள்ள ஹ்ருதயகமலத்திற்குள் யாதிருக்கக்கூடும் எனச் சங்கித்தல் அநுசிதம். ஹ்ருதயகமலத்தில் உள்ள ஆகாசம் ஹ்ருதயகமலத்திலும் சிறிதாயிருக்குமெனும் விஷயத்தைப் போதிப்பதற்காக இங்கு இவ்வாறு சொல்லியதென்பதல்ல. மற்று யாதெனின், ஹ்ருதயகமலம் சிறியது. அதனில் உள்ள அந்தக்கரணமானது ஹ்ருதயகமலாகாச பரிச்சின்னமாயுள்ளது. மிகவும் பரிசுத்தமான அந்த ஆகாசத்தில் உபஸம்ஹாரமடைந்த (அடங்கிய) அந்தக்கரணத்தையுடைய பெரியோர்களுக்கு, சுத்தமாகிய ஜலத்தில் அல்லது சுத்தமாகிய கண்ணுடியில் எதிரிலுள்ள பொருள் பிரதிபலிப்பதுபோல ஞானவடிவனும் ஸர்வசக்தனும் ஸர்வக்ஞத்துவாதி குணவிசேஷங்களை யுடையவனும் விளங்கும் பரம்பொருள் நன்ருய் விளக்க முறுகின்றதெனும் உண்மைப் பற்றியே இவ்வாறு உபதேசித்துளோம். ஸ்வபாவமாக இந்த பூதாகாசம் எவ்வளவு பரிமாணமுளதோ, அவ்வளவு பரிமாணமுளதே இந்த ஹ்ருதயாகாசம். ஆனதுபற்றியே அதனில் தேடவேண்டுமெனக் கூறினம். அன்றியும் ஆகாசத்திற்கு ஸமானமான பரிமாணமுடையதெனும் அபிப்பிராயத்தில் இவ்வாறு கூறியதல்ல. பரம்பொருளுக்கு ஸமானமான வேறு பொருளில்லை யாதலினென்க.

"𑌯𑍇𑌨𑌾𑌵𑍃𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌚"
"𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌵𑌾 𑌏𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑌨 𑌆𑌕𑌾𑌶𑌸𑍍𑌸𑌮𑍍𑌭𑍂𑌤𑌃"
"𑌏𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁 𑌖𑌲𑍍𑌵𑌕𑍍𑌷𑌰𑍇 𑌗𑌾𑌰𑍍𑌗𑍍𑌯𑌾𑌕𑌾𑌶𑌃 𑌓𑌤𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑍋𑌤𑌶𑍍𑌚"

"எந்த வஸ்துவினுல் ஆகாசமும் ஸ்வர்க்கம் பூமி முதலியதும் வியாபிக்கப்பட்டுளதோ?

"அந்த இந்தப் பரம்பொருளினின்றும் ஆகாசம் தோன்றியது.

"ஓ கார்க்கி! இந்த அக்ஷரமாகிய பரம்பொருளிலேயே ஆகாசம் அடங்கி நிலைபெற்றுள்ளது."

என்பது முதலிய ச்ருதிகளால் இவ்வுண்மை அறியப்படுகின்றது. உண்மையில் பூமி அந்தரக்ஷம் அக்நி வாயு சூரியசந்திராதிகள் ஸகலமும் எந்தப் பொருளினால் வியாபிக்கப்பட்டு எதனில் நிலைபெற்றுமுளதோ, அந்தப் பரம்பொருள், சுத்தமாகிய இந்த இடத்தில் நன்றாய் நம்மால் கண்டுகொள்ளத்தகும். சாந்தோக்கிய உபநிஷத்தில் போலவே ஸகல உபநிஷதங்களிலும் இவ்வுண்மை கூறப்படுகின்றது. ஆனால் சில உபநிஷதங்களில் இவ்விஷயம் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஹ்ருதய கமலமும் அதன் தளங்களும்

ஹ்ருதயகமலத்தைப்பற்றி இன்னமும் சற்று ஆராய்ச்சி செய்ய வேண்டும். அதாவது ஹ்ருதயகமலத்தில் எட்டு தளங்களுள்ளன என ஏற்கெனவே இந்நூலில் கூறியிருக்கின்றனம். ஹ்ருதயகமலத்தில் கிழக்கு தென்கிழக்கு முதலிய எட்டு திக்குகளிலும் எட்டு தளங்கள் உள்ளன. அந்த தளங்கள் வெவ்வேறு வகையாயுள்ள நிறங்களையுடையன. தளங்களின் அடிப்பக்கத்தில் தளங்கள் தனித்தனியாக வியக்தமாய்க் காணப் படாவிடினும் நுனிப்பக்கம் தனித்தனியாகப் பிரிந்து காணப்படும். மனம் எனும் வஸ்துவானது மின்சாரசக்திபோல அந்த தளங்களின் நுனியில் இருந்துகொண்டு மூளை சிறுமூளை எனும் இடங்கள் வரையிலும் நாடிகளின் மார்க்கமாக ஸம்பந்தமுடையதாக வந்து நிற்கும். மூளைவரையிலும் வந்து இந்திரியங்களோடு ஸம்பந்தித்து வெளியுலகில் உள்ள பொருள்களை அநுபவித்துக்கொண்டு உழலுதலாகிய ஜாக்ரத்தைச் செய்யும். சிறுமூளையில் வந்திருக்கும்போது இந்திரியங்களோடு ஸம்பந்திக்காததனால் வெளிப்பொருளில் உழலுவதற்கிடமின்றி நித்ராதோஷத்தினால் வாஸனைக்குத் தக்கபடி வஸ்துக்களை மனோமாத்திரத்தினாலேயே கற்பித்துக் கொண்டு ஸ்வப்னமாக உழலும்.

## தளங்களின் நிறமும் வ்ருத்தி பேதமும்

ஹ்ருதயகமலத்தின் கிழக்கு திக்கில் உள்ள தளம் வெண்ணிறமானது. அந்த தளத்தின் நுனியில் மனம் நின்று மூளைவரையிலும் நாடியின் மூலமாக அடைந்துள்ள ஸமயத்தில் பக்தியை முன்னிட்டுக் கொண்டு தர்மமார்க்கத்தில் ஆசையோடு கூடிய சிந்தனை வ்ருத்திகளைச் செய்யும். தென்கிழக்கிலுள்ள தளம் செந்நிறமானது. அதனில் மனம் நின்றுகொண்டு மூளையை யடைந்திருக்கும்போது நித்ரை ஆலஸ்யம் முதலியவைகளுக்கு ஹேதுவாயிருக்கும் வ்ருத்திகளைச் செய்யும். சும்மா

விருப்போம் என்பதாகிய எண்ணமுதிக்கும். தென்திசை தளம் கறுப்பு நிறமானது. அதனில் மனம் ஸம்பந்தித்திருக்கும்போது த்வேஷம் கோபம் முதலிய வ்ருத்திகள் நிகழும். ஹ்ருதயகமலத்தின் நிருதி தளம் நீலவர்ணம். மனம் அங்கு ஸம்பந்தித்திருக்கும்போது பிறரை ஹிம்சித்தல் முதலிய பாபங்களில் செல்லுகின்றது. மேற்றிசை தளமானது ஸ்படிகநிறமுள்ளது. மனம் அந்த தளத்தில் ஸம்பந்தப்பட்டிருக்கும் போது கிரீடை விளையாட்டு விநோதங்களில் உழலும். வடமேற்கு (வாயவ்ய) தளம் மாணிக்கிய வர்ணமானது. அதனில் மனம் ஸம்பந்திக்கும்போது தேசயாத்திரை, பெரியோரைச் சென்றடைதல். ஆசை ஒழிந்து வைராக்யமடைதல் முதலியவைகளில் ஈடுபடும். வடக்கு தளம் மஞ்சள் நிறமுடையது. அதனில் மனம் ஸம்பந்தப்பட்டிருக்கும்போது சிருங்காரம் முதலிய சிற்றின்ப போகங்களில் பிரவிருத்தி யேற்படும். ஈசாந்ய தளம் வைடூர்ய வர்ணமுடையது. அதனில் மனம் ஸம்பந்தித்திருக்கும்போது தானம் செய்தல், பிறருக்குபகரித்தல், ஜீவகாருண்யம் முதலிய செய்கைகள் நிகழும். வாதபித்த கபங்களின் ப்ரகோபத்தினால் வியாதிகள் நிகழும் ஸமயம் ஹ்ருதயகமல தளங்களின் ஸந்திகளிலேயே விசேஷமாக ஸம்பந்தித்திருக்கும். தளங்களில் ஸம்பந்திக்காமல் மனம் தளங்களுக்கு உட்பக்கத்திலுள்ள ஆகாசமாகிய இடத்தில் ஸம்பந்திக்கும் போது எல்லாவற்றையு மறிதலாகிய ஞானபிரிவும் ஆனந்தானுபவமும் நிகழும். அச்சமயம் அந்நிலையைப்பற்றிப் பாடுவான், ஆடுவான், அவ்வானந்தானுபவத்தை அன்பர் அடையுமாறு அரும்பெரும் வசனங்களைப் பேசுவான். இவ்வாறு ஹ்ருதயகமல தளங்களின் அமைப்பும் தளவிசேஷ ஸம்பந்தத்தினால் மனத்திற்கு ஏற்படும் விருத்தி விசேஷங்களும் குருமூலமாக சாஸ்திராராய்ச்சியினால் அறியவேண்டியன.

'ஹ்ருதிஸ்தானே அஷ்டதளம் பத்மம் வர்த்ததே தந்மத்யே ரேகாவலயம் க்ருத்வா ஜீவாத்மரூபம் ஜ்யோதீரூபம் அணுமாத்ரம் வர்த்ததே | பூர்வதளம் ச்வேதவர்ணம் | தத்ர யதா விச்ராம்யதி ததா பக்திபுரஸ்ஸரா யசோமதிர் பவதி | யதா ஆக்நேயதளே விச்ராம்யதி | ஆக்நேயதளம் ரக்தவர்ணம் | ததா நித்ராலஸ்ய மதிர் பவதி | யதா தக்ஷிணதளே விச்ராம்யதி | தக்ஷிணதளம் க்ருஷ்ணவர்ணம் | ததா த்வேஷகோப மதிர் பவதி | யதா நைர்ருதி தளே விச்ராம்யதி | நைர்ருதிதளம் நீலவர்ணம் | ததா பாபகர்மஹிம்ஸா மதிர் பவதி | யதா பச்சிமதளே விச்ராம்யதி | பச்சிமதளம் ஸ்படிகவர்ணம் | ததா க்ரீடா

𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌮𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑌾𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌦𑌲𑍇 𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌾𑌯𑌵𑍍𑌯𑌦𑌲𑌂 𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌮𑍍 । 𑌤𑌦𑌾 𑌗𑌮𑌨𑌚𑌲𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯 𑌮𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑍋𑌤𑍍𑌤𑌰𑌦𑌲𑍇 𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌉𑌤𑍍𑌤𑌰𑌦𑌲𑌂 𑌪𑍀𑌤𑌵𑌰𑍍𑌣𑌮𑍍 । 𑌤𑌦𑌾 𑌸𑍁𑌖𑌶𑍃𑌙𑍍𑌗𑌾𑌰 𑌮𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑍇𑌶𑌾𑌨 𑌦𑌲𑍇𑌵𑌿𑌶𑍍𑌰𑌾𑌮𑍍𑌯𑌤𑍇 । 𑌈𑌶𑌾𑌨𑌦𑌲𑌂 𑌵𑍈𑌡𑍂𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌣𑌮𑍍 । 𑌤𑌦𑌾𑌦𑌾𑌨𑌾𑌦𑌿 𑌕𑍃𑌪𑌾𑌮𑌤𑌿𑌰𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑌾𑌸𑌨𑍍𑌧𑌿𑌷𑍂𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑌾𑌵𑌾𑌤𑌪𑌿𑌤𑍍𑌤 𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌮𑌹𑌾𑌵𑍍𑌯𑌾𑌧𑌿 𑌪𑍍𑌰𑌕𑍋𑌪𑍋𑌭𑌵𑌤𑌿 । 𑌯𑌦𑌾𑌮𑌧𑍍𑌯𑍇𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 । 𑌤𑌦𑌾𑌸𑌰𑍍𑌵𑌂𑌜𑌾𑌨𑌾𑌤𑌿𑌗𑌾𑌯𑌤𑌿𑌨𑍃𑌤𑍍𑌯𑌤𑌿𑌵𑌦𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑍋𑌭𑌵𑌤𑌿’

“எனத் தியானபிந்து முதலிய உபநிஷதங்களில் இந்த உண்மை உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. பக்தி தர்ம நித்ராலஸ்ய த்வேஷ கோப ஹிம்ஸாதிகளாகிய சித்த விருத்திகளேற்படும்போது மனம் மூளையில் நின்றுகொண்டு வேலைசெய்கின்றதென நாம் எண்ணுகின்றோம். ஆயினும் நாம் அறியாமலேயே அச்சமயம் மனம் ஹ்ருதயகமலத்தின் கிழக்கு தென்கிழக்கு தெற்கு தென்மேற்கு முதலிய திசைகளிலுள்ள தளங்களில் முற்கூறியவாறு ஸம்பந்தித்திருக்கும். ஆனால் அங்கிருந்து மூளைவரையிலும் நாடிகளின் வழியாகத் தொடர்பாக மின்சாரசக்திபோல நீண்டு ஸம்பந்தித்து மூளையோடு நிற்கும். தளங்களில் மனம் ஸம்பந்தித்திருக்கும் வரையில் புண்ணியபாபாதிகளில் சென்றுழன்று ஸம்ஸார பந்தத்திற்கே ஹேதுவாகும். தளங்களுக்கு உள் பிரதேசமாகிய புனிதமான ஆகாசத்தை யடைந்தால் மனம் அச்சமயம் புண்ணிய பாபங்களுக்கு ஏதுவிராமல் ஸகல வ்ருத்திகளும் நீங்கப்பெற்று பரம்பொருள் மாத்திரத்தில் அடங்கி நிற்கும். ஆகையால் இறைவனுடைய திவ்ய குணகணங்களோடு கூடிய ஸ்வரூபானந்தானுபவமே அச்சமயம் நிகழும். ஹ்ருதயகமலமானது மொக்குப்போல மூடிக்கொண்டுள்ளதாயினும் ஈச்வரஸ்வரூபத்தைச் சிந்திக்கும்போது மேல்முகம் நோக்கி மலர்ந்துவிடும். உலக ஸம்பந்தமாகவோ தேஹ ஸம்பந்தமாகவோ சாஸ்திர ஸம்பந்தமாகவோ உள்ள வாஸனாத்ரயங்களும் அனந்தகோடி புண்ணியபாபங்களும் மனத்தில் அடங்கிக் கிடக்குமென இந்நூலில் அடிக்கடி சொல்லப்பட்டிருக்கின்றது. மனம் ஹ்ருதயகமலத்தின் உட்புறத்துள்ள தஹராகாசத்தை யடைந்த மாத்திரத்தில் முற்கூறிய வாஸனாத்ரயங்களும் புண்ணியபாப வினைகளும் மனத்தை விட்டு நீங்கும். வெய்யிலில் நடந்து தாபமுற்று வருந்தியவன் கங்கா தீர்த்தத்தில் இறங்கி ஸ்நாநம் செய்யும்போது தாபம் நீங்கி எப்படி ஸுகமடைவானோ, அவ்வாறே இந்த தஹராகாசத்தை யடைந்தால் மனத்திலுள்ள தாபத்ரயங்களொழியும்; உலகில் உள்ள ஆசை ஒழியும்; தனது ஜன்மமே தன்யமெனவும், தானே க்ருதக்ருத்யன்

என்வும் நிச்சயமான எண்ணமுதிக்கும். இவ்வுலகில் நமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லையே என அச்சமயம் எண்ணுவான்; இவ்வுண்மையை உபதேசித்த குருவின் லாபமானது நமது பலஜன்மப் புண்ணியங்களின் பயனே என எண்ணுவான். பரம்பொருளைப்பற்றிப் பேசுவான். அச்சமயம் பாடுவான், பரமானந்தத் தாண்டவமாய் ஆடுவான். நமது ப்ரும்ம வித்தையை ப்ரதிபாதிக்கும் சாஸ்திரங்களில் புருஷ யத்தினத்தை விதிப்பனவாகிய "அதனைத் தேடுக, அதனைச் சிந்திப்பாயாக, அதனையே உபாஸிப்பாயாக" என்பது முதலிய வாக்கியங்களின் பரம கருத்தாயுள்ளது இந்த தஹராகாசத்தில் மனம் அடங்கி நிற்றலேயாம்.

## சிந்திக்கப்படுமிடத்தை மனமடையும் இயல்பு

சூரியனை மேகமண்டலம் மறைப்பதுபோல பரம்பொருளை ராகத்வேஷாதிகளான உலக ஸம்பந்தமான வ்ருத்திகள் மறைத்துவிடுகின்றன. உலக ஸம்பந்தமான வ்ருத்திகள் சிறிதும் நிகழாததும் மனம் இயல்பாக வந்து அடங்கக்கூடியதுமாகிய பாவனமான தஹராகாசம் எனும் இடத்தில் பரம்பொருள் மாத்திரமாய் தடையற்று ஜ்வலிக்கும். சூர்யன் எங்கும் பொதுவாகத் தோன்றிக்கொண்டிருக்கினும் தடாகம், கண்ணாடி முதலிய ஸ்வச்சமான பொருள்களில் நன்ருய் பிரதிபிம்பிக்கின்றதேயன்றி மண் சுவர், மண், சாணம், அழுக்குப்படிந்துள்ள கட்டை முதலிய பொருள்களில் பிரதிபலிக்கின்றதில்லை. அவ்வாறே பரமேச்வர ஸ்வரூபம் எங்கும் வியாபகமாய் உள்ளதாயினும், பரம பாவனமாய் ராகத்வேஷாதிகளுக்கு இடமல்லாததாய், பரம்பொருளின் இருப்பிடம் எனச் சொல்லத்தக்கதாயுள்ள தஹராகாசமெனும் இடத்தில் தடையற்று மறைவின்றி சொலிக்குமேயன்றி ஏனைய பொருள்களில் அவ்வாறு பிரதிபலிக்கின்றதில்லை. ஆகையால் இந்த தஹராகாசத்தையே ஸகல உபநிஷத்துக்களும் போற்றி நிற்கின்றன. சரீரத்தினது யாதேனும் ஓர் பாகத்தைச் சிந்திப்போமாயின் நமது மனம் அந்தச்சமயம் அந்த இடத்தை வந்தடையும் இயல்புடையது. உதாஹரணமாக, நாம் கையின் கட்டைவிரலையே சற்று ஏகாக்ரமாகச் சிந்திப்போமானல் மனம் அச்சமயம் கட்டைவிரலில் சற்று ஸம்பந்திக்கும். நாபியைச் சிந்திக்கும்போது நாபியில் ஸம்பந்திக்கும். இவ்வாறே மற்றுமுள்ள தேஹாவயவங்களெல்லாவற்றிலும் என்றறியத்தக்கது. யோகத்திஞல் அறியவேண்டிய ரஹஸ்யமிது. இந்த நியதியின்படி கவனிப்போமாயின் ஹ்ருதயகமலத்தினுள்ளிருக்கும் தஹராகாசத்தைச் சற்றுச் சிந்திப்போமாயின் மனம் அவ்வாகாசம் சென்று அங்கு நிலைபெறும். அப்போது பரம்பொருளின் முற்கூறிய குணவிசேஷங்களோடு கூடிய ஸ்வரூபத்தையே அச்சமயம் மனம் சிந்திக்குமன்றி மற்ற விஷயங்கள் மனத்தில் தோற்றமுருது. தஹராகாசத்

தைச் சிந்திப்பதானால் ஹ்ருதயகமலத்தின் வடிவத்தை நன்றாய் அறிந்திருக்கவேண்டும். எவ்வகையாலாவது அறிந்திராத பொருளைச் சிந்தித்தல் ஸாத்தியமல்ல. ஆகையால் ஹ்ருதயகமலஸ்வரூபத்தை உபநிஷத்துகள் உபதேசிக்கின்றன. ஈச்வரஸ்வரூபத்தை அறிந்து அனுபவிக்கும் ஞானிகள் வாயிலாக ஹ்ருதயகமல தஹராகாசத்தை உபதேசிக்கப்பெற்றுச் சிந்தித்தால் அந்தச் சிந்தனை கைகூடும். ஈச்வர குணங்களைச் சிந்திக்கச்சிந்திக்கக் கொஞ்சம் கொஞ்சமாக ஜீவகுணங்கள் குறைந்து பிறகு சிறிதுமின்றி அடியோடு தொலையும்.

## ஜீவ குணங்கள்

ஜீவகுணங்களை தோஷங்களெனவே அறியவேண்டும். அதாவது, உலகில் ஜீவர்கள் ஸாத்விகர் ராஜஸர் தாமஸர் என மூவ்வகையாவர். இவர்களெல்லோரிடத்தும் இருக்கும் தோஷங்களே இங்கு ஜீவகுணங்களென்பவை. அவையாவன, இச்சா, த்வேஷம், பயம், மோஹம், பசி, தாகம், மல மூத்திரபீடை இவ்வெட்டுவகை தோஷங்களும் ஸகல ஜீவர்களையும் வாட்டிக்கொண்டிருக்கும்.

ஸாத்விகருக்கு முக்தியில் இச்சையும், ராஜஸருக்கு முக்தி, புத்ர பார்யாதி விஷயங்கள் எனும் இவ்விரண்டிலும், தாமஸருக்கு விஷய மாத்திரத்திலும், இச்சை இருக்கும். ஸாத்விக ஜீவர்களுக்கு உலகவஸ்துக்களில் வெறுப்பும், ராஜஸர்களுக்குச் சத்ருக்களிடம் வெறுப்பும் துவேஷமும், தாமஸர்களுக்கு தமக்கு மிகவும் வேண்டியவர்களாகிய தாய் தந்தையர் குரு இவர்களிடம் த்வேஷமும் இருக்கும். ஸாத்விகருக்குப் பரம்பொருளைச் சிந்தியாமலிருக்கச் செய்வதாகிய ப்ரமாத மெனப்படும் தவறுதலில் பீதி இருக்கும். ராஜஸருக்கு யமதர்மராஜனிடம் பீதியிருக்கும். தாமஸர் ராஜசேவகர்களிடம் அதாவது ஸர்க்கார் புருஷர்களிடம் மாத்திரம் பயமிருக்கும். ஸாத்விகருக்கு ஆத்ம ஸ்வரூபத்திலும், ராஜஸருக்கு வேதசாஸ்திர வித்யைகளிலும், தாமஸர்களுக்கு ஸகல உலகவிஷயங்களிலும் மோஹமிருக்கும். மோஹமென்பது உள்ளதை உள்ளபடி அறியாமல் வேறு விதமாக எண்ணுதலாம். பசிதாஹங்கள் ஸாத்விக ராஜஸ தாமஸர் முதலிய ஸகல ஜீவர்களிடமும் இருக்கும். அப்படியே மலமூத்திர பீடையும் என்றறிக.

## ஹ்ருதயாகாசத்தில் சித்தம் நின்றால் ஜீவதோஷங்கள் நீங்கும்

தஹராகாசத்தில் சித்தம் சென்று ஈச்வரனை மிகவும் தீவ்ரமாகச் சிந்தித்தலாகிய உபாஸ்தியைச் செய்வோருக்கு ராகத்வேஷ பயமோ

ஹங்கள் ஆரம்பத்திலேயே நீங்கும். மற்ற நான்கும் உபாஸ்தி தீவ்ரமாக ஏற்பட்டு வித்தியாகும்போது நீங்கும். பசி தாஹங்களும், மலமூத்ர பீடைகளும் ஜீவான்மாக்களை ஸம்ஸார பந்தத்திற்கு உட்படுத்தாவிடி னும் கேவலம் சாரீரகமாய் ஏற்பட்டுத் துன்புறுத்தும். கங்காஜலத்தில் முழுகி ஸ்நாநம் செய்வோருக்குத் தாபம் நீங்குவதுபோலவும் திடமாக ராஜஸ்நேஹ மேற்பட்டவருக்குத் தாரித்திரிய துக்கம் நீங்குவதுபோல வும் தஹராகாசத்தில் சித்தம் செல்லப்பெற்றவருக்கு ஏற்படும் ஈச்வர உபாஸ்தியால் இங்கு கூறப்பட்ட தோஷங்கள் ஸகலமும் ஒழியும். சித் தத்தில் அனந்தகோடி ஜந்மங்களை எடுத்து இன்பதுன்பங்களை அனுப வித்தலுக்கு ஹேதுவாக அனந்தகோடி பாபபுண்ணிய வினைகள் பதிந்து கிடக்கும். தவிர்வும் எண்ணிறந்த ஜன்மங்களில் தடித்து ஓங்கி வளர்ந் துள்ள லோகவாஸனை தேஹவாஸனை சாஸ்திரவாஸனை எனும் மூன்று விதமான அப்பியாஸ ஸம்ஸ்காரம் சித்தத்தில் ஊன்றியிருந்துகொண்டு மனிதர்களை ஸதா விஷய சிந்தனையில் ஈடுபடச் செய்கின்றது. இப்படிப் பட்ட வினைகளும் விஷயவாஸனைகளும் தஹராகாசத்தில் ஈச்வர ஸ்வ ரூபத்தை அனுபவிக்கச் செல்லும் சித்தத்தைவிட்டுப் பிரிந்து நிற்கும். மத்தியார்ஜுநம் எனும் திவ்யஸ்தலத்தின் ஆலயத்திலுள்ள மஹாலிங்க மூர்த்தியை தரிசிக்க விரும்பி சோழராஜன் அர்த்த மண்டபத்திற்குள் பிரவேசிக்கும்போது அவனைப் பற்றிக்கொண்டிருந்த ப்ரும்மஹத்தியா னது அவனை விட்டுப்பிரிந்து வெளியிலேயே தங்கியிருந்ததுபோல தஹராகாசத்தில் ஈச்வர ஸ்வரூபத்தை அனுபவிக்கச் செல்லும் சித் தத்தைவிட்டுக் கர்மவாஸனைகள் பிரிந்து வெளியிலேயே நின்றுவிடும். ஈச்வரன் திவ்ய மாயா குணங்களாயுள்ள பராசக்தி மஹிமைகளை யுடைய வனாய் ஸர்வஜகங்களிலும் சரீரத்தின் ஸகல அவயவங்களிலும் ஸாக்ஷி யாய் விளங்கிக்கொண் டிருப்பவனென்பது உண்மையேயாயினும் அவ னது திவ்யகுணங்களாகிய சக்தி தாண்டவத்தை தஹராகாசமெனும் இடம் ஒன்றிலேயே காணலாமன்றி தேஹத்தின் மற்ற அவயவங்களில் தரிசிக்க இயலாது. பிண்டாண்டமாகிய சரீரத்திலுள்ள இந்த தஹரா காசமே ப்ரும்மாண்டத்தில் வெளிநோக்காக சிதம்பரம் எனும் க்ஷேத்ர மாக அமைந்துளது.

## தஹர வித்யையே சிதம்பர ரஹஸ்யம்

சிதம்பராலய ரஹஸ்யமென்பதும் இந்த தஹரவித்யையே. சிதம் பரம் சித்ரூபமான ஆகாசம். அதனிலடங்கியுள்ள ரஹஸ்யமே சிதம்பர ரஹஸ்யமென்பதாகும். யோகத்தின் ஆராய்ச்சியோடு உபநிஷதார்த் தத்தை அறிந்துகொள்வது மனிதரெல்லோருக்கும் எளிதல்லவாதலால்

ஹ்ருதயகமல இயல்பும் அங்கு அறிந்துகொள்ளவேண்டிய விதமும் எளிதில் தெரிந்துகொள்வதன்பொருட்டு வெளிநோக்காக சிதம்பராலயம் அமைக்கப்பட் டிருக்கிறது. உலகில் எண்ணிறந்த சிவவிஷ்ணுவாதி தேவாலயங்களிருக்கின்றனவாயினும் அவை ஹடயோகத்தைப்பற்றிய ஷட்சக்ரப்ரஸ்தாரம் அல்லது வேதாந்த ஸம்பந்தமாகப் பொதுவாயுள்ள பஞ்சகோச ப்ரஸ்தாரம் முதலியவைகளைக் குறிப்பவையாக அமைக்கப் பட்டிருக்கின்றன. ஊஹாவித்யையாகிய இந்த ராஜயோக ரஹஸ்யத்தைப்பற்றிய ப்ரஸ்தாரமாகச் சிதம்பராலயமே அமைக்கப்பட்டிருக்கிறது.

## சிதம்பராலய அமைப்பு

யோகரஹஸ்ய ப்ரவர்த்தகரான பதஞ்ஜலிமாமுனிவர் சிதம்பர ரஹஸ்யத்தை விச்வகர்மாவுக்குச் சொல்லி அதன்படி அமைக்கச்செய்த தாகச் சொல்லும் சிதம்பர ஆலயத்தைப்பற்றிய புராணவாக்கியங்களாகிய பிரமாண மொழிகளாலும் இவ்விஷயம் தெரிந்துகொள்ளக் கூடியதே. ஒரு யோகியை வடக்கில் தலைவைத்துத் தெற்குப்பக்கம் கால்வைத்துப் படுக்கச்செய்து கவனித்தால் சிதம்பராலய அமைப்பு அதனோடு ஒத்திருக்கும். சிதம்பராலயத்து ஆயிரக்கால் மண்டபம் தலையிலுள்ள ஸஹஸ்ராரமெனும் ஆயிரவிதழ்த் தாமரையுள்ள மூளையையும், அம்மூளையின் மேல்புறத்துள்ள ஷோடசகலாசந்திர புஷ்கரிணியை சிவகங்கையும் உவமையாகப் பெற்றுள்ளது. ஜாக்ரத்காலத்தில் மூளையில் ஜீவாத்மா நின்று வியவஹரிக்கின்றமையால் தேவமானத்தில் விடியற்காலமும், பிரதோஷஸமயமாகிய மார்கழி ஆனிமாஸங்களில் ஆயிரக்கால் மண்டபத்தும் நடராஜமூர்த்திக்கு மஹாபிஷேகம் நடைபெறுகின்றது.

## ஆலயத்திற்குள்ளிருக்கும் லிங்கங்களின் தத்துவம்

தென்புறத்தில் குருமூர்த்தியும் ஜோதிலிங்கமும் உள்ள இடம் மூளைக்குக் கீழ் ஹ்ருதயகமலத்துக்கு மேலுள்ள விசுத்தி ஸ்தானத்தைக் குறிக்கும். அதற்குத் தெற்கில் சிதம்பரம் திருச்சிற்றம்பலம் எனும் ஸபை யிருக்கிறது. அங்கு ப்ரும்ம விஷ்ணு ருத்ரேச்வர ஸதாசிவர்களுக்காக ஐந்து படிகளிருக்கின்றன. அவ்விடமுள்ள கதவு அவித்தை எனப்படும் ஆவரணத்தைக் குறிக்கும். தொண்ணூற்றாறு தத்வங்களாகிய ப்ரகிருதி விகிருதி பதார்த்தங்கள் தொண்ணூற்றாறு பலகணிகளாக அறியத்தக்கவை. மத்தியிலுள்ள நான்கு ஸ்வர்ண ஸ்தம்பங்களும் நான்கு வேதங்களைக் குறிப்பன. அதனைச் சுற்றியுள்ள இருபத்தெட்டு மரக்கம்பங்கள் காமிகாதி இருபத்தெட்டு சிவாகமங்கள் எனப் பாவிக்கப்படும். இதற்குள்ளடங்கிய இடத்தைச் சுத்த வித்யை அல்லது ப்ரும்ம வித்யையு

எனவும், ரஹஸ்யம் என்பது முதல் நடராஜமூர்த்தியிருக்கு மிடம்வரையில் உள்ள பீடம் பிரணவபீடம் எனவும், அந்தப் பிரணவபீடத்தைப் பரம் பொருளுக்கு வாசகமாகிய சப்தமெனவும், அந்தப் பிரணவபீடத்தில் பிர ணவவாச்யனை ஆநந்த நடராஜமூர்த்தியாகிய ஸகுண வஸ்துவின் அபி வ்யக்தி எனவும், அதனிலும் சற்று உள்நோக்குங்கால் இந்நூலில் கூறப் பட்டுள்ள தஹரவித்யோபாஸ்யமாகிய ஞானாநந்த பரமாகாசப் பரம் பொருளின் ஸ்வரூபத்தையே ரஹஸ்யமெனச் சொல்லப்படுகின்ற தத்வ வஸ்துவெனவும் குறிக்கப்படுகின்றது.

## விமானகும்ப விடங்காதிகளின் தத்வார்த்தம்

இவ்விடத்தில் சிவகாமசுந்தரி எனும் பராசக்தியைப் பரம்பொரு ளின் இச்சாசக்தி என்பது முதலிய பல விசேஷங்களடங்கிய மஹாமாயா சக்தி எனவும் குறிக்கப்பட்டுளது. அங்குள்ள ஆகாசமெனும் ரஹஸ்யம் (ஆ = எங்கும், காச = விளங்கும்) பரம்பொருள் ஆயினும் அவன் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணங்களாகிய ஸகல தத்வங்களிலும் கூடி விளங்குவோன் என்பதைக் குறிக்க ஸ்தூல நடராஜமூர்த்தியும் ரத்னமயமான ஸூக்ஷ்ம நடராஜமூர்த்தி எனவும் ஸூக்ஷ்மாதாரமான மற்றுமோர் லிங்கமும் அங்கு இருக்கின்றன. விமானத்தின் மேலுள்ள ஒன்பது கும்பங்களும் வாமா திகளென சக்தி தந்திரங்களில் பிரஸித்தமான ஒன்பது சக்திகளெனவும், விமானத்திலுள்ள விடங்கங்களெனப்படும் கைமரங்கள் அறுபத்து நான் கும் அறுபத்து நான்கு கலைகளெனவும், செப்போடுகள் இருபத்தோராயி ரத்து அறுநூறும் தினம்தோறும் விடப்படும் ச்வாஸக்கணக்கெனவும், அங்கு தைக்கப்பட்டிருக்கும் ஆணிகள் எழுபத்தீராயிரமும் ஹ்ருதயகமலத் தினின்றும் சரீரமெங்குஞ்சென்றுள்ள எழுபத்தீராயிரம் நாடிகளெனவும் குறிப்பைக் கருதி யமைக்கப்பட்டிருக்கின்றன.

## ஸபாபஞ்சகம்

இதற்குத் தெற்கிலுள்ள கனகஸபையிலுள்ள பதினெட்டு கம்பங் களும் பதினெட்டு புராணங்களைக் குறிக்கும். அன்றியும் ஜாக்ரத் ஸ்வப் னம் ஸுஷுப்தி எனும் மூன்று அவஸ்தைகளையும் பற்றியுள்ளவையாகிய அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் எனும் பஞ்சகோசங்களிலும் பரம்பொருள் விளங்குகின்றது. ஆயினும் தஹராகாசத்தில் சித்தம் நிலைபெறுதலே பரம்பொருள்மாத்திரத்தின் தடையற்ற அனுபவநிலைமை எனும் இவ்விஷயத்தைக் குறிப்பதற்காகவே அவ்வாலயத்தில் ராஜஸபை, தேவஸபை, ந்ருத்தஸபை, கனகஸபை, சித்ஸபை எனும் ஐந்து சபையிலும் இறைவனது தரிசனம் நடைபெறி னும் ரஹஸ்யமெனும் ஆகாசஸ்தானமே முக்கியமாக அமைந்துளது.

ஹ்ருதய கமலஸ்தானம் சரீரத்தின் மார்பின் நடுவில் இராமல் சற்று இடது புறத்திலேயே இருப்பதென்பதை இவ்வாலயத்தின் ஸரி யான நடுவுக்குச் சற்று இடதுபுறத்தில் கர்ப்ப கிருஹம் அமைந்திருத்தல் குறிக்கின்றது. சிதம்பரத்திலுள்ள ஆலயத்தில் ரஹஸ்யத்தைக் கண் டவருக்கு மீண்டும் பிறவி இல்லை என்பது தஹராகாசத்தில் சித்தம் நிலைக்கப்பெற்றவருக்கு மீண்டும் ஜன்மமில்லை என்பதைக் குறிக்கும். சிதம்பர ஆலயத்தை இதிஹாஸ புராணுதி க்ரந்தங்களில் விசேஷமாகப் போற்றி யிருத்தலும் இவ்வாறு தஹராகாசத்தில் பரம்பொருளின் தடையற்ற விளக்கமெனும் உண்மைப்பற்றி தஹரவித்யையை ஸகல உபநிஷதங்களும் போற்றுகின்றன என்பதைக் குறிப்பதே.

## தஹராகாசத்தில் சித்தம் சென்றலின் பயன்

தஹரவித்யைக்குள்ள பெருமையே சிதம்பர க்ஷேத்ராலயத்திற் குள்ள பெருமைக்குக் காரணமாகிறது என்பதுபோல சரீரத்திலுள்ள ஆக்ஞா எனும் ஆதாரஸ்தானமாகிய புருவமத்தியில் பரசம்புவை உபா ஸித்தலே காசி எனும் மஹா க்ஷேத்ரத்தின் அமைப்பினுல் குறிக்கப் பட்டிருக்கின்றது. வரணை அஸி எனும் இரண்டு நதிகள் கங்காநதியில் சேருமிடம் வாராணஸீ எனச் சொல்லப்படுகின்றது. இளபிங்களை எனும் நாடிகளிரண்டும் ஸுஷும்னை சேருமிடத்தின் நடுவில் பரமாத்மா வின் உபாஸனுஸ்தானம் என யோகத்தின் மர்மம். இவ்வாறே உலகில் மற்றுமுள்ள சிவவிஷ்ணு சக்தியாதி ஆலயங்களின் அமைப்புகளும் உபா ஸனுயோக ரஹஸ்யங்களைக் குறிப்பவையேயாம்.

## அந்தர்யாமி ஹிரண்ய கர்ப்பவிராட் ஸ்வரூபம்

இனி உபநிஷதங்களில் கூறப்படுவனவாகிய ஹிரண்யகர்ப்ப விராட் அந்தர்யாமிகளின் உபாஸ்திகள் இந்த தஹரோபாஸ்தியில் சேருவனவா? அல்லது இதனினும் வேருகவே உள்ளவையா? எனும் ஸந்தேஹம் வேதாந்தம் படித்தவருக்கு முண்டாகக்கூடும். ஆதலால் அவ்வுண்மையையும் இங்கு கூறுவாம்.

அதாவது ஜீவாத்மாவாகிய ஒருவனுக்கே ஸ்தூல சரீரத்தை அபி மானித்துக்கொண் டிருத்தலாகிய ஜாக்ரதவஸ்தையில் விச்வனெனவும், ஸூக்ஷ்ம சரீரத்தை அபிமானித்துக்கொண்டிருக்கும் ஸ்வப்னுவஸ்தையில் தைஜஸனெனவும் இவ்விரு அபிமானங்களும் நீங்கி அவித்யையாகிய தமோவ்ருத்தியால் பரம்பொருள் மாத்திரத்தை அனுபவிக்கும் ஸுஷுப் தியவஸ்தையில் ப்ராக்ஞனெனவும் மூன்று பெயர்கள் மூன்று அவஸ்

தைகனை நோக்கி வழங்கப்படுவது போல, வைச்வாநர ஹிரண்ய கர்ப்ப ஈஸ்வரரெனும் மூன்றும் ஒரே பரம்பொருளின் அவஸ்தா விசேஷங்களே. ஒரே பரமாத்மாவாகிய இறைவன் ஸமஷ்டிஸ்தூலமும், ஸமஷ்டி ஸூக்ஷ்மமும் அவ்விரண்டிற்கும் காரணமான மாயையுமாகிய மூன்ருேடு அவச்சின்னனுய் வைச்வாநரனெனச் சொல்லப்படுகின்ருன். அந்தப் பரம்பொருளே ஸமஷ்டி ஸூக்ஷ்மமும் அதற்குக் காரணமான மாயையுமாகிய இரண்டிேைடு அவச்சின்னனுய் ஹிரண்ய கர்ப்பரெனும் பெயரால் சொல்லப்படுகின்ருன். அந்தப் பரமாத்மாவே கேவலம் மாயாமாத்திரத்திஞல் அவச்சின்னனுய் ஈஸ்வரனெனச் சொல்லப்படுகின்ருன்.

இவ்வாறுள்ள சாஸ்திராராய்ச்சியால் இந்நூலில் பிரதிபாதிக்கப்பட்டு வரும் ஊஹர வித்யையானது விராட்ஸ்வரூப உபாஸ்தியா அல்லது ஹிரண்யகர்ப்ப உபாஸ்தியா அல்லது ஸர்வாந்தர்யாமியாய் கேவல மாயாமாத்ரசபளனுன ஈஸ்வரனுடைய உபாஸ்தியா என்பதை நன்ருய் அறிந்துகொள்ளலாம். ஸர்வஹேய வ்ருத்திகளும் நீங்குமிடமாகிய ஹ்ருதயகமலாகாசத்தில் உபாஸிக்கவேண்டியவனுகிய இறைவனிடம்,

"അപഹതപാപ്മാ വിജരോ വിമൃത്യുർവിശോകോ
വിജിഘത്സോऽപിപാസഃ സത്യകാമഃ സത്യസങ്കല്പഃ"

"பாபபுண்ணிய மற்றவன், ஜரையிராதவன், மரணமிராதவன், சோகமிராதவன், பசியிராதவன், தாகமிராதவன், ஸத்தியகாமன், ஸத்தியஸங்கல்பன் எனும் எண்குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஸர்வக்ஞன், நித்யத்ருப்தன், அனுதிபோதன், ஸ்வதந்த்ரன், அலுப்தசக்தன், அனந்தசக்தன் எனக் கூறிய ஆறுகுணங்களோ.

"ഐശ്വര്യസ്യ സമഗ്രസ്യ വീര്യസ്യ യശസഃ ശ്രിയഃ
ജ്ഞാനവിജ്ഞാനയോശ്ചൈവ ഷണ്ണാം ഭഗ ഇതീരണാ"

"எனக் கூறியபடி ஸர்வைச்வர்யம், வீர்யம், யசஸ், ஸ்ரீ, ஞானம், விஞ்ஞானம் எனும் இவ்வாறும் பக எனச் சொல்லப்படும்; பகவான் எனின் இவ்வாறு குணங்களுடையோன்; பகவான் எனும் சொல்லுக்கு ஈஸ்வரனே அர்த்தமாயுள்ளவன் எனச் சொல்லப்படும் ஆறு குணங்களோ?

"ഉത്പത്തിം ച വിനാശം ച ഭൂതാനാമാഗതിം ഗതിം
വേത്തി വിദ്യാമവിദ്യാം ച സ വാച്യോ ഭഗവാനിതി"

"பூதங்களின் உற்பத்தியையும், விநாசத்தையும், ஜீவான்மாக்கள் கர்மபலபோகத்திற்காக வருதலையும், கர்மபலம் புசித்து முடிதலையும், வித்யை

யையும், அவித்யையையும் அறிந்துகொண்டிருப்பவன் பகவான் எனச் சொல்லப்படுவோன் எனக் குறிக்கப்பட்ட மற்றோர் வகையான அறு குணங்களோ இவை ஸகலமும் மாயாசக்தி விசேஷமாக அமைந்த குணங் களாதலால் ஊஹாவித்யையில் இந்த குணங்களே சிந்திக்கவேண்டியன எனச் சொல்லப்பட்டமையால் ஊஹாவித்யை மாயாசபளனாகிய ஸகுண னது உபாஸ்தி என விளங்குகின்றது. இம்மட்டோடு நின்றுவிட்டால் கேவல மாயாசபளமாத்ரனை ஈஸ்வரனது உபாஸ்தியென இதனைக் கூறலாம். ஆனால் அப்படியில்லை. ஸ்தூலப்பொருள்களையும் ஸூக்ஷ மப்பொருள்களையும் பற்றிச் சொல்லக்கூடியனவான குணங்களும் இந்த ஊஹாவித்யையில் சிந்திக்கவேண்டிய குணங்களாய்ச் சொல்லப்பட்டிருக் கின்றன. அதாவது சாந்தோக்யம் ஊஹரோபாஸ்தி ப்ரகரணத்தில்,

“ஏஷ ஸேதுர் விதரண ஏஷாம் லோகாநாம் அஸம்பேதாய”

“எனும் ச்ருதி வாக்கியத்தினால் இங்கு உபாஸ்யனாகக் கூறிய பரமாத்மா இவ்வுலகங்களின் மர்யாதாவரம்பு மீறியதாகாமலிருத்தலின் பொருட்டு ஓர் அணைபோன்றவனெனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனால்,

“ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:”

“இந்த அக்ஷரமான பரம்பொருளின் ஆக்ஞையாலேயே ஸூர்ய சந்தி ராதிகள் தத்தம் வேலையை ஒழுங்காக நடத்துகின்றவர்களா யிருக்கின்ற னர். என ப்ருஹதாரண்ய உபநிஷதம் கார்க்கி ப்ரபந்தத்தில் கூறியபடி ஸூர்யசந்த்ர க்ரஹநக்ஷத்திரங்களான ஸ்தூலப் பொருள்களுக்குத் தமது சக்தி விசேஷத்தினால் கிரியைகளை நடாத்துகின்றவனென ஸ்தூல ஸம் பந்தமான குணங்களும் சொல்லப்படுகின்றமையால் விராட் புருஷனது தன்மைகளும் சொல்லப்பட்டவையாகின்றன. இன்னமும் ராகத்வே ஷாதிகளான ஹேயவிருத்திகளை விட்டுப் பரம்பொருளின் குணங் களையே சிந்தித்தலாகிய ஊஹரோபாஸ்தியில் புத்தி வ்ருத்தியவச்சேதமு மிருக்கின்றதாகையால், ஸூக்ஷ்ம ஸம்பந்தமான தன்மையும் இந்த ஊஹர உபாஸ்தியில் உள்ளதெனக் கூறியதாகின்றது. இவ்விதம் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணப் பிரபஞ்சாவச்சேதத்தால் நிகழ்வனவாகிய மூவ் வகையான குணங்களும் இவ்வுபாஸ்தியில் சிந்திக்க வேண்டியனவா யிருத்தலால் இவ்வுபாஸ்தியில் விராட் ஹிரண்யகர்ப்ப அந்தர்யாமி எனும் மூன்றையும் பற்றிய உபாஸ்திகள் அடங்கியுள்ளன என நிர்ண

யிக்கப்படுகின்றது. உண்மை இவ்விதமாதலால் தஹர வித்யையானது விராடுபாஸ்தியா ஹிரண்ய கர்ப்ப உபாஸ்தியா ஈஸ்வர உபாஸ்தியா எனும் சங்கைகளுக்கு இடமில்லை. மூன்றும் ஒருங்கே யடங்கியுள்ள உபாஸ்தியே இது என்பது பெரியோர்கள் நிர்ணயித்துள்ள விஷயம் என்றறியத்தக்கது. இவ்வாறு மூவ்வகை உபாஸ்திகளும் இதனில் அடங்கியுள்ளனவாயினும் பரம்பொருளைக் கண்டுகொள்ள ஹ்ருதய கமலாகாசமாகிய இடத்தை இந்த வித்தையில் உபதேசிக்கின்றமையால் தஹரவித்யா என இங்கு மகுடமிடப்பட்டது. இதுவரையிலும் யாம் இவ்வுபாஸ்தியைப்பற்றி எழுதிய விஷயம் ப்ருஹ்மஸூத்ரம்,

𑌦𑌹𑌰 𑌉𑌤𑍍𑌤𑌰𑍇𑌭𑍍𑌯𑌃
𑌗𑌤𑌿𑌶𑌬𑍍𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌤𑌥𑌾𑌹𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌚
𑌧𑍃𑌤𑍇𑌶𑍍𑌚 𑌮𑌹𑌿𑌮𑍍𑌨𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑍁𑌪𑌲𑌬𑍍𑌧𑍇𑌃

"எனும் ஸூத்ரங்களுக்குள்ள பாஷ்யத்தில் சங்கரபகவத்பாத ஸ்வாமிகளால் மிகவும் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் ஆகாசமெனும் சொல்லும் ச்ருதிகளில் பரம்பொருளையே குறிப்பதாகக் காணப்படுகின்றமையால் தஹராகாச மெனும் சொல்லுக்கும் பரமாத்மாவே அர்த்தமெனக் குறிக்கத்தகும் என்பதை,

𑌪𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌶𑍍𑌚

"எனும் ஸூத்ரத்தினல் கூறி உபமானோபமேயத்தன்மை ஸம்பந்தம் பூதாகாசத்தினில் பொருந்தாதெனவும் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும் புத்தியாதிகளில் அபிமானியாயுள்ள ஜீவாத்மா தஹரவித்யா ப்ரகரணத்தில் குறிக்கப்படும் பொருளென்பதாகவாவது தஹராகாச னெனும் சொல்லுக்கு அவனே அர்த்தமென்பதாகவாவது பொருந்தாதென்பதை,

𑌇𑌤𑌰𑌪𑌰𑌾𑌮𑌰𑍍𑌶𑌾𑌤𑍍 𑌸 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌨𑍍𑌨𑌾𑌸𑌮𑍍𑌭𑌵𑌾𑌤𑍍

"எனும் ஸூத்ரத்தினல் கூறி விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறு கூறி மீண்டும் தஹரவித்யா ப்ரகரணத்தில் பிந்தியுள்ள வாக்கியங்களால் ஜீவாத்மாவின் ஸ்வரூபமெனக் காணப்படுகின்றதோ எனும் சங்கையை நிகழ்த்தி, அங்கு அவ்வாறு காணப்படினும் ஜீவனைக் குறிப்பதல்ல. பந்தம் நீங்கி ஈஸ்வரத்தன்மை பெற்றவனையே நோக்கிக் கூறுவனவே அவ்வாக்கியங்களென,

𑌉𑌤𑍍𑌤𑌰𑌾𑌚𑍍𑌚𑍇𑌦𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌤𑍁

"எனும் ஸூத்ரத்தினால் போதிக்கப்பட்டிருக்கின்றது. பிறகு ஜீவனைக் குறிப்பவைபோலக் காணப்படும் ஸம்வ்யவஹாராதி சப்தங்கள் பரமாத்மாவைப் போதிப்பதற்கெனவே சொல்லப்பட்டிருக்கின்றனவென்பதை,

ஸாந்நித்யாதுப்யவஹாராச்ச

"எனும் ஸூத்ரத்தினால் போதிக்கப்பட்டிருக்கின்றது. அதன் பிறகு ஸர்வவியாபகனான இறைவனை ஹ்ருதயகமல ப்ரதேசத்திலிருக்கின்றானென ஏகதேசமாய்ச் சொல்லுவது எப்படிப் பொருந்தும் எனச் சங்கித்து அதற்கு ஸமாதானத்தை,

ஸம்ப்ரோக்ஷணாதிதி வேத்தாஸ்ய

"எனும் ஸூத்ரத்தினால் ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கிற,

"ஸம்ப்ரஜ்ஞாத ஸ்ருஷ்டிபுத்யா ப்ராணாதி வைஷ்ணவீ கேசவ ஹ்ருதயாதி ஸ்தானம் ப்ரஸித்தம்"

"எனும் ஸூத்ர நியாயத்தைக் காட்டி நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் ப்ரும்மஸூத்ர க்ரந்தத்தில் ஏழு ஸூத்ரங்களால் யாமிங்கு எழுதிய உண்மைகளெல்லாம் நன்றாய் விளக்கப்பட்டிருக்கின்றன. அன்றியும் நாமிங்கு கூறிவந்த ஹ்ருதயவித்தையாகிய ஸகுணோபாஸ்தியில் விராட் ஹிரண்ய கர்ப்ப ஈஸ்வர உபாஸ்திகள் மூன்றும் அடங்கியுள்ளன வென்பது உபநிஷத் பகவத்கீதை இவைகளில் ஸரியான ஆராய்ச்சியுடையவர்களுக்கு இனிது விளங்கும். இங்கு ஓர் சிறிய சங்கை; அதாவது ஹிரண்யகர்ப்பவிராட் புருஷர்களை ஈஸ்வரஸ்வரூபமென்பது எப்படிப் பொருந்தும்? ஆத்மபுராண நான்காமத்தியாயத்தில் ஓர் கதை உள்ளது. அதாவது ஹிரண்யகர்ப்பர் விராட் என்பவனை உண்டாக்கினார். பசியின் கொடுமையால் அந்த ஹிரண்யகர்ப்பர் விராட் புருஷனைப் புசிக்க முயன்றார். அதைப் பார்த்து பயந்து விராட்புருஷன் பாண எனும் சப்தத்தை உச்சரித்தான் என இச்சரிதம் அங்கு சொல்லப்பட்டிருக்கின்றது. இதனைக் கவனித்தால் பசிதாக பயாதிகளுள்ள ஜீவர்களாக ஹிரண்யகர்ப்ப வைஸ்வாநரர்களைக்கொள்ள வேண்டியிருக்கிறதேயன்றி ஈஸ்வரனாக எப்படிக்கொள்வது எனும் சங்கையாம்.

இதனுண்மையறிக ஹிரண்யகர்ப்ப வைஷ்வாநரர்கள் ஈஸ்வரனுடைய அவஸ்தா விசேஷஸ்வருபர்களென்றே எண்ணிறந்த பல ச்ருதி ஸம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் ஹிரண்யகர்ப்ப வைஸ்வாநரர்களுக்கு உற்பத்தி பசிதாகாதிகளைச்சொல்லும் சரிதம் எதற்காக வந்ததெனின் ஹிரண்யகர்ப்பாதி பதங்களிலும் வைராக்கியம் ஏற்பட

வேண்டுமெனும் கருத்தினுலேயே. அவ்வாறு சரிதங்கள் பிரவர்த்தித்திருக்கின்றன. இதனுல் ப்ரும்மாதிபதங்களிலும் வைராக்கியத்தைத் திடமாய்க் கொண்டு ஸகுணமாகிய பரம்பொருளை நன்ருய் உபாஸிக்க வேண்டுமென்பதாவது கைவல்ய மோக்ஷத்தையே விரும்பவேண்டுமென்பதாவது கருத்தென்பதறியத் தக்கதேயன்றி வேறல்ல. பசிதாகாதி வாக்கியங்களைக்கொண்டு ஹிரண்ய வைசவாநரர்களிடம் ஜீவத்துவத்தை நிச்சயிப்பதாயின்,

"ஸோகாமயத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி"

"அவன் பஹுப்ரஜையாவோமென விரும்பினுன் எனும் வாக்யத்தினுல் காமனை யிருக்கின்றதென்பதைக்கொண்டு ஈஸ்வரனிடத்தும் ஜீவத்துவம் உள்ளதெனக் கொள்ளவேண்டிவரும். ஆதலால் வைராக்கியம் உதிப்பதன்பொருட்டுச் சொல்லிய கதைகளை இவ்விதமுள்ளவை என்று சாஸ்திரங்களில் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. பகவத்கீதையில் அர்ஜுனனுக்குக் காண்பிக்கப்பட்ட விஸ்வரூபம் இங்கு சொல்லிய விராட் எனும் வைச்வாநரனுடைய ஸ்வரூபமே. ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய ப்ரும்மதேவனுடைய ஸ்தூல தேஹத்தைத் தவிர ஹிரண்யகர்ப்பனெனும் சொல்லுக்கு அர்த்தம் வேறில்லை என எண்ணுவது பிசகேயாம். ஸர்வஸூக்ஷ்மப் பொருள்களிலும் வியாபித்திருக்கும் ஈஸ்வரஸ்வரூபத்தையே ஹிரண்யகர்ப்பனெனும் சொல்லுக்கு அர்த்தமெனவும், ஸர்வஸ்தூல வஸ்துக்களிலும் வியாபகமாயுள்ளன ஈஸ்வரஸ்வரூபத்தையே விராட் எனும் சொல்லுக்கு அர்த்தமெனவும் அறிந்துகொள்வதே உண்மையாகிய பொருள். விராட் ஸ்வரூபமே புருஷஸூக்தம் முதலியவைகளில் சொல்லப்பட்டிருக்கின்றது. விரியுமென்றஞ்சி சுருக்குகின்றனம். இனி இந்த ஸகுணோபாஸனையைச் செய்வோர்களுக்குக் கிடைக்கும் பயன் யாதெனத் தெரிந்துகொள்ளவேண்டும். அதாவது உலகில் மனிதர்கள் மரித்த பிறகு அடையும் கதி ஐந்து வகையாய் உள்ளது. மிகவும் பாபங்களைச் செய்தவர் மரித்த பிறகு யாதனுதேஹம் பெற்று நரகலோகம் சென்று அங்குள்ள யாதனைகளை யனுபவிப்பார்கள்; பாபபுண்ணியங்களை ஸமானமாகச் செய்திருந்தால் அக்கருமங்களுக்குத் தக்க ஜன்மங்களையே எடுப்பார்கள்; புண்ணியங்களை விசேஷமாகச் செய்திருந்தால் ஸ்வர்க்கலோகம் சென்று அங்கு திவ்யதேஹத்தோடு ஸ்வர்க்கபோகங்களை யனுபவிப்பார்கள். இங்கு கூறிய ஸகுணோபாஸதியைச் செய்தவர்கள் மரித்த பின்னர் ப்ரும்மலோகம் சென்று அணிமாதி திவ்ய ஸித்திகளோடும் திவ்ய சரீரத்தோடும் இருந்து ப்ரும்மதேவரிடம் வேதாந்தாப்யாஸம் செய்து அகண்டானந்தானுபவ ஸாக்ஷாத்காரஞானம் நிகழ்ந்து,

ப்ராகிருத ப்ரளய ஸமயத்தில் முக்தியடைந்து விடுவார்கள். இந்த விஷயம்,

"ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச"

"போகமாத்ரஸாம்யலிங்காச்ச"

"எனும் ப்ரும்ம ஸூத்ரங்களின் பாஷ்யத்தில் சங்கராசார்ய ஸ்வாமி களால் மிகவும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு ஓர் முக்கியமான விஷயம் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும்.

## ஸகுணோபாஸ்தியின் பயன்

இந்த ஸகுணோபாஸ்தியை மிகவும் தீவ்ரமாகச் செய்துவிட்டால் அவ்வீச்வரனுடைய அநுக்ரஹத்தினால் உடனே திவ்யஞானமாகிய அகண்டானந்தானுபவ மேற்பட ஜீவன் முக்தனாகவும் ஆகலாம். அதா வது ஸகுணோபாஸ்தியை மிகவும் தீவிரமாய்ச் செய்தலால் ப்ரும்மாத் மைக்கியாபரோக்ஷ ஸாக்ஷாத்கார ஞானமும் கிடைக்கப் பெறலாம். எனின், அதன் பெருமையை எப்படிச் சொல்ல இயலும்? இனி ஸகுணோபாஸ்தியை ஸாமான்யமாகச் செய்தால் மரித்த பின்னர் கிடைப் பதாகிய ப்ரும்மலோக ப்ராப்தியைப்பற்றிச் சற்று இங்கு சொல்லவேண் டும். உபாஸனையைத் தீவ்ரமாகச் செய்தவர்களுக்கு ஈச்வரானுக்ரஹத்தி னால் மோக்ஷஹேதுவான ப்ரும்ம ஸாக்ஷாத்கார ஞானமுதித்து மோக்ஷம் கிடைக்கும். அவ்வளவு தீவ்ரமாக உபாஸியாமல் உபாஸனையை ஸாமான்யமாகச் செய்தவர்களுக்கே இப்போது சொல்லப்படும் ப்ரும்ம லோக ப்ராப்தி என்பதைச் சற்று இங்கு ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

## ஸாமான்ய ஜீவர்களின் கதிபேதம்

மரிக்கும் காலத்தில் ஜீவாத்மா இந்தச் சரீரத்தைவிட்டு வெளிப் படும்போது கர்மபலபோகத்திற்கு ஸாதகமாயுள்ள இந்த்ரிய ப்ராண மனோபுத்திகளை அவைகள் கிரியை செய்துகொண்டிருக்கும் கண் காது முதலிய கோளகங்களிலிருந்து ஹ்ருதயகமலம் கொண்டு வந்து ஒருங்கு சேர்த்துக்கொள்கின்றான். ஹ்ருதயகமலம் வந்து அடங்கியதும் ஜீவாத்மா அவைகளைச் சேர்த்துக்கொண்டு ஹ்ருதயகமலத் திலிருந்து வெளிச்செல்லும் நாடிகளின் மார்க்கமாக கண் காது முதலிய வைகளாகிய துவாரங்களின் வழியாக வெளிச்செல்லுகின்றான். மிகவும் கடும் பாபங்களைச் செய்திருந்தால் ஜீவாத்மா முற்கூறிய பதினேழு தத்துவங்களோடு கூடி இழிய துவாரங்கள் வழியாக வெளிப்பட்டு வாயு அம்சம் ஜாஸ்தியாயுள்ளதுபற்றி வாயவீயமெனப்படும் யாதனா சரீரத்

தைப்பெற்று நரகலோகம் செல்லுவான். ஸாமான்ய பாபபுண்ணியங்களைச் செய்திருந்தால் ஹ்ருதயகமலத்திலிருந்து யாதேனும் ஓர் வழியாக வெளிப்பட்டு பூதாணுக்களில் சேர்ந்து இழுபட்டு மழை பனி முதலியவைகளை யடைந்து மனித தேஹத்தை யடைந்து மீண்டும் மனித தேஹத்தோடு இவ்வுலகில் ஜனிப்பான். புண்ணியத்தை விசேஷமாய்ச் செய்திருந்தால் கண் காது மூக்குகளில் யாதேனும் ஒன்றின் வழியாய் வெளிப்பட்டு பிறகு அனுபவிக்கப்படும் புண்ணியபல போகத்திற்கு யோக்யமான சரீரத்திற்குக் காரணங்களாயுள்ள பூதாம்சங்களைச் சேர்த்துக்கொண்டு அவைகளோடு கூடி பித்ருயானமெனும் மார்க்கமடைந்து ஸ்வர்க்கம் செல்லுகின்றான். இவ்விஷயம் விபரமாக இதனிறுதியில் காணலாம். இங்கிருந்து செல்லும்போது சேர்த்துக் கொள்ளப்படும் பூதாணுக்கள் ஸ்வர்க்கம் செல்லும்போது திவ்ய சரீரமா யமைய, அந்த திவ்ய சரீரத்தோடு ஸ்வர்க்க இன்பங்களைப் பல காலம் புசித்து மீண்டும் இவ்வுலகம் திரும்புவான்.

## ஸகுணோபாஸகரின் கதிஸ்வரூபம்

இங்கு கூறிய ஸகுணோபாஸ்தியை மிகவும் தீவ்ரமாய்ச் செய்யாவிடினும் ஸாமான்யமாய்ச் செய்திருந்தால் அல்லது யோகாப்பியாஸம் செய்திருந்தால் மரிக்கும்போது ஜீவாத்மா பதினேழு தத்துவங்களான ஸூக்ஷ்ம பூதாம்சங்களை ஹ்ருதயகமலம் கொண்டுவந்து சேர்த்துக்கொண்டதும், ஹ்ருதயகமலத்தினுட்புறமாகிய ஆகாசத்தில் முற்கூறிய ஸகுணேஸ்வரனது ஸ்வரூபம் அறிவில் தோன்றும். அப்படிப் பரம்பொருளின் ஸர்வக்ஞத்துவாதி ஸத்தியகாம ஸத்திய ஸங்கல்பத்துவாதி குணங்கள் தோன்றும்போது புத்தியானது இந்திரியகோளகங்கள் மூலமாக வெளிப்படுவனவல்ல. ஹ்ருதயகமலாகாசத்திலிருந்து அடிப்புறத்தில் செல்லும் ஹ்ருதயகமல நாளத்தின்வழியாக ஸுஷும்னை எனும் நாடியை அடையும். ஸுஷும்னை எனும் நாடியானது ஹ்ருதயகமலத்திலிருந்து மேல்நோக்கித் தாலு மூலத்தின் வழியாக மூர்த்தாவாகிய ப்ரும்மரந்திரத்தையடைந்துளது. அந்த நாடியானது தேஜோமயமாக ஜ்வலிக்கும். அதன் வழியாக மூர்த்தா எனும் சிரஸிலுள்ள த்வாதசாந்த ஸ்தானத்தை யடைந்து துவாதசாந்தத்தில் ஸம்பந்தப்பட்டுக்கொண்டிருக்கும் ஸூர்ய கிரணங்களின் வழியாக ப்ரும்மலோகமடையும் யோக்யதையானது உபாஸகனுன ஜீவாத்மாவுக்கே உள்ளது. ஹ்ருதயத்திலிருந்து ஸுஷும்னையை உபாஸக ஜீவாத்மா அடையும்போது, ப்ரும்மலோக போகத்திற்கு யோக்யமான சரீரத்திற்குக் காரணமாயுள்ள பூதாம்சங்களை அதாவது தேஜோம்சம் ஜாஸ்தியும் மற்ற பூதாம்சங்கள் ஸ்வல்பமுமாயுள்ள அணுக்களைச் சேர்த்துக்கொண்டு ஸுஷும்னை எனும் நாடியில் பிரவே

சிக்கும். வெகுகாலம் பூர்வம் ஹ்ருதயகமலாகாசத்தில் உபாஸகனால் தியானிக்கப்பட்ட ஈச்வரன் அவ்வுபாஸகனை அநுக்ரஹிக்க, அந்த அநுக்ரஹ விசேஷத்தால் ஸுஷும்னையில் செல்லும் ஜீவாத்மா, மரணகாலத்தில் ஹ்ருதயகமலத்தினின்று இந்திரியத் துவாரங்களை யடைவனவாகிய நாடிகளில் செல்லாமல், ஸுஷும்னை எனும் நாடியை அடைவதானது எளிதல்ல. அதற்குக் கேவலம் ஈஸ்வராநுக்ரஹமிருந்தால் ஸாத்தியமாகும். ஈஸ்வராநுக்ரஹம் வேண்டுமானால் முற்கூறியபடி ஈஸ்வரனை உபாஸிக்க வேண்டியதைத்தவிர வேறு வழியில்லை. ஹ்ருதயகமலத்தினின்றும் ஸுஷும்னையில் மரணகாலத்தில் ஜீவாத்மா பிரவேசிப்பதானது யோகம் அல்லது உபாஸ்தி இவ்விரண்டுக் கந்தியாமாக வேறு உபாயங்களால் ஸாத்தியமல்ல. இவ்விருவழிகளில் யாதேனும் ஓர் வழியாய் ஈஸ்வரனை யுபாஸிக்காவிடில் ஈச்வராநுக்ரஹம் நிகழாது. யோகமென்பது தற்கால மரிது. ஆதலால் ஸத்குருமூலமாக இந்நூலில் கூறிய உபாஸ்தியை யறிந்து அநுஷ்டித்துவந்தால் ஈஸ்வராநுக்ரஹத்தால் மரணகாலத்தில் ஜீவாத்மா ஸுஷும்னையில் பிரவேசித்து, அதன் வழியாய் தாலு மூலத்தைப் பேதித்து, த்வாதசாந்தம் சென்று ஸூர்யகிரண மூலமாக ப்ரும்ம லோகமடையும். ப்ரும்மலோகமடைந்தால் மீண்டும் பிறவி இல்லை. ப்ரும்மலோகத்திலிருந்து ப்ரும்மவிசாரம் செய்துகொண்டு அணிமாதி ஸித்திகளுடன் கூடியவனாயிருந்து ப்ரளயத்தில் அந்த ஜீவாத்மா முக்தி யடைவான். இங்கிருந்து ப்ரும்மலோகம் செல்லும் வழியானது வேதங்களில் அர்ச்சிராதி மார்க்கமெனவும் தேவயான மார்க்கமெனவும் சொல்லப்படுகின்றது. உபாஸகர்கள் கிருஷ்ணபக்ஷம் அல்லது இரவில் மரித்தாலும் அவர்கள் ப்ரும்மலோகமடைவது நிச்சயம். இரவிலும் ஸூர்யனுடைய கிரணங்கள் உலகில் இருக்கின்றன எனவும் ஆனதுபற்றியே உபாஸக ஜீவர்கள் இரவில் மரித்தாலும் மற்ற எக்காலத்தில் மரித்தாலும் எவ்விடத்தில் மரித்தாலும் அவர்களது ஜீவன் கடைசி காலத்தில் ஸுஷும்னையில் பிரவேசித்து மூர்த்தாவை பேதித்துக்கொண்டு சூர்யகிரண மார்க்கமாக ப்ரும்மலோகம் செல்லுவதில் ஸந்தேஹமில்லை எனவும்,

\ "ரஸ்ம்யநுஸாரீ"

"நிஸிநேதிசேந்ந ஸம்பந்தஸ்ய யாவத்தேஹ பாவித்வாத்

தர்ஸயதிச" "அதஸ்சாயநேபி தக்ஷிணே"

"எனும் ஸூத்ரங்களின் பாஷ்யத்தில் சங்கர பகவத்பாத ஸ்வாமிகளால் விசேஷமாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. கால விசேஷத்திற்குத் தக்கபடி கதிவிசேஷம் ஏற்படுதல் தஹரோபாஸகர்களுக்கல்ல. அக்னிஹோத்ராதி கர்மங்களை ஈஸ்வராராதன புத்தியாய்ச் செய்யும் கர்மயோகி

களுக்கோ மற்ற ஹடயோகாதிகளை யப்பியஸிப்பவர்களுக்கோ கால விசேஷத்திற்குத் தக்ககதி விசேஷமென,

“யொமிநஃ ஷ்ரதிஸ்மய்ரதெ ஸ்மாதெர்ரவெதெ”

“எனும் ஸூத்ரத்தினுல் நிர்ணயிக்கப்பட் டிருக்கின்றது. உபாஸகர் களுக்கு ப்ராணோத்க்ராந்தி ஸமயத்தில் ஜீவாத்மா ஸுஷும்னை யடையும் கிரமமானது,

“தஸ்யைஷ நாதுமுஷபதிஷ் தஸ்யஷவஸி தஷ்ய ஸவ்ஸிதி த்ஸ்வா ஃப்ரநாஸிதஷ்ய ஸ்ர்த்ரேஸ ஜ்ஷ்மய ஹ்நிஸ்ஷரக்நர்யதஃ ஃதம்ஷதமாஹர்யாஃநர்ரகஹ்ரீ த்ஹ்தாயிகயா”

“உபஸம்ஹரிக்கப்பட்ட வாகாதி இந்திரிய கலாபத்தை யுடையவனும் உத்கிராந்தியை விரும்புவோனுமான விக்ஞானாத்மாவாகிய ஜீவனுக்கு ஸ்தானமான ஹ்ருதயகமலத்தின் முனை ஜ்வலிக்க, அதனுல் பிரகாசிக்கப் பட்டுள்ள வெளிப்படும் மார்க்கத்தை யுடையவனுய்க்கொண்டு மூர்த் தாவினின்றுமே வெளிப்படுகின்றுன். ஏனெனின் ஹ்ருதயகமல உபா ஸ்தி ஸாமர்த்தியத்தாலென்க. மற்ற ஸ்தானங்களினின்றும் வெளிப் படுவோனுக்கு உத்தமலோக ப்ராப்தி ஏன் கிடைப்பதில்லை எனின், ஹ்ருதயகமல வித்யைக்கு அங்கமாக அவச்யம் தெரிந்துகொள்ள வேண் டியதாயுள்ள ஸுஷும்ணு நாடியானது கதியின்பொருட்டு உபதேசிக்கப் பட்டதன்றே? அதனை அநுசீலனம் செய்யாததனுல் என்க. ஜீவாத்மா ஹ்ருதயாகாசத்தில் நன்கு உபாஸிக்கப்பட்ட இறைவனுல் அநுக்ரஹிக்கப் பட்டவனுய்க்கொண்டு அவ்விறைவனது அநுஸந்தானத்தினின்றும் அச் சமயம் தவருதவனுக இருந்து ஸுஷும்னை வழியாய் வெளிப்படுகின் ருன். ஹ்ருதயகமலத்தினின்றும் மேனேக்கிச் செல்லும் ஜ்வலிப்பதாகிய ப்ரும்மநாடியான ஸுஷும்னையானது தாலுமூலத்தைப் பேதித்துக் கொண்டு சிரஸ்ஸை யடைந்து ஸூர்ய கிரணங்களோடு ஸம்பந்தமடை கின்றமையால் ஆதித்தமண்டலம் போய்ச் சேருகின்றுன்” என்பது இந்த ஸூத்ரத்தின் பொருள். இன்னமும் சற்று விபரமாகத் தெரிந்து கொள்ளவேண்டுமாயின் இவ்வாறறிக. காலத்திற்கு அபிமானி தேவதை யாகிய அக்னியாதிகள் அதிஷ்டித்துள்ள வழியில் செல்லுகின்றுன். அக்னியபிமானி தேவதை அதாவது காலாபிமானிதேவதை, ஜ்யோதி யபிமானிதேவதை, அகற்காலாபிமானி தேவதை, சுக்லபக்ஷாபிமானி தேவதை, உத்தராயணமான ஆறு மாஸங்களுக்கும் அபிமான தேவதை, ஸம்வத்ஸராபிமானி தேவதை, வாயு அபிமானி தேவதை, ஆதித்ய அபி மானி தேவதை (ஆதித்யலோகம்) சந்த்ரன், வித்யுதபிமானி தேவதை,

வருணன் அபிமானியாயுள்ள லோகம், இந்திரலோகம், ப்ரஜாபதி லோகம், ப்ரும்மலோகம், இவைகளை முறையே அடைகின்றான். வித்யுதபிமானி தேவதையுள்ள இடம் போய்ச் சேர்ந்ததும், அவ்விடமிருந்து வரும் வைத்யுதனான அமானவ ஆதிவாஹிகதேவனால் உபசரிக்கப்பட்டு அவனால் அழைத்துக்கொண்டு கூடச் செல்லப்பெற்றே வருணலோகம், இந்திரலோகம், ப்ரஜாபதிலோகம், ப்ரும்மலோகம் இவைகளை முறையே அடைகின்றான். வித்யுத் லோகத்திலிருந்து அமானவனென்னும் திவ்ய புருஷன் இவ்வுபாஸகனை உபசரித்து அதற்குமேலுள்ள உலகங்களின் வழியாக ப்ரும்மலோகம் கொண்டுபோய்ச் சேர்ப்பான். அவ் வமானவ புருஷனென்பவன் மனுவின் ஸ்ருஷ்டியில் அகப்படாதவனாகிய திவ்ய புருஷனெனவறிக. ப்ரும்மலோகத்தின் அமைப்பைச் சிறிது கூறுவாம். அந்த லோகம் இந்திர ப்ருஹஸ்பதி விராட் எனும் மூவருலகங்களுக்கும் மேலுள்ளது.

## ப்ரும்மலோகத்தின் அமைப்பு

தஸ்ய ஹ வா ஏதஸ்ய ப்ரஹ்மலோகஸ்ய அரோ ஹ்ரதோ
முஹூர்த்தா யேஷ்டிஹா விரஜா நதீல்யோ வ்ருக்ஷ: ஸாலஜ்யம்
ஸம்ஸ்தானமபராஜிதமாயதனமிந்த்ர ப்ரஜாபதீ த்வாரகோபௌ
விபுப்ரமிதம் விசக்ஷண ஸந்த்யமிதௌஜா: பர்யங்க: ப்ரியா ச
மானஸீ ப்ரதிரூபா ச சாக்ஷுஷீ புஷ்பாண்யாதாயா
வயதௌ வை ச ஜகந்த்யம்பாஶ்சாம்பயாவாஶ்சாப்ஸரஸோம்ப
யா நத்யஸ்தமித்த்வித் ஆகச்சதி தம் ப்ரஹ்மாஹ அபித்ரவத மம யஶஸா
விரஜாம் வாயம் நதீம் ப்ராபம் ந வாயம் ஜிகீஷ்யதீதி। தம்
பஞ்சஶதான்யப்ஸரஸாம் ப்ரதிதாவந்தி ஶதம் மாலாஹஸ்தா:
ஶதமாஞ்ஜனஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோ
ஹஸ்தா: ஶதம் பணாஹஸ்தாஸ்தம் ப்ரஹ்மாலங்காரேணாலம்
குர்வந்தி ஸ ப்ரஹ்மாலங்காரேணாலங்க்ருதோ ப்ரஹ்மவித்வாந்
ப்ரஹ்மைவாபிப்ரைதி। ஸ ஆகச்சத்யாரம் ஹ்ரதம் தம் மனஸா
த்யேதி தமித்வா ஸம்ப்ரதிவிதோ மஜ்ஜந்தி ஸ ஆகச்சதி முஹூ
ர்த்தான் யேஷ்டிஹாம்ஸ்தேஸ்மாதபத்ரவந்தி ஸ ஆகச்சதி விரஜாம் நதீம்
தாம் மனஸைவாத்யேதி தத்ஸுக்ருத துஷ்க்ருதே துனுதே

𑌤𑍇𑌤𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌤𑌯 𑌸𑍁𑌕𑍃𑌤𑌮𑍁𑌪𑌯𑌨𑍍𑌤𑍍𑌯 𑌅𑌪𑍍𑌰𑌿𑌯𑌾𑌦𑍁-
𑌷𑍍𑌕𑍃𑌤𑌂 𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 𑌰𑌥𑍇𑌨 𑌧𑌾𑌵𑌯𑌨𑍍𑌰𑌥𑌚𑌕𑍍𑌰𑍇 𑌪𑌰𑍍𑌯𑌵𑍇𑌕𑍍𑌷𑍇𑌤𑌵𑌮𑌵
𑌮𑌹𑍋𑌰𑌾𑌤𑍍𑌰𑍇 𑌪𑌰𑍍𑌯𑌵𑍇𑌕𑍍𑌷𑍇𑌤 𑌏𑌵𑌂𑌸𑍁𑌕𑍃𑌤 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍇
𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌚 𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌾𑌨𑌿 𑌸 𑌏𑌷 𑌵𑌿𑌸𑍁𑌕𑍃𑌤𑍋 𑌵𑌿𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑍋
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍈𑌵𑌾𑌭𑌿𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 । 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌇𑌲𑍍𑌯𑌂 𑌵𑍃-
𑌕𑍍𑌷𑌂 𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌗𑌨𑍍𑌧𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌸𑌾𑌲𑌜𑍍𑌜𑌂 𑌸𑌂𑌸𑍍𑌥𑌾-
𑌨𑌂 𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌰𑌸𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑍍𑌯𑌪𑌰𑌾𑌜𑌿𑌤𑌮𑌾𑌯𑌤𑌨𑌂
𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍇𑌜𑌃 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑍀 𑌦𑍍𑌵𑌾𑌰𑌗𑍋-
𑌪𑍌 𑌤𑌾𑌵𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌦𑍍𑌰𑌵𑌤𑌸𑍍𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌵𑌿𑌭𑍁𑌪𑍍𑌰𑌮𑌿𑌤𑌂 𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌯𑌶𑌃
𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌾𑌮𑌾𑌸𑌨𑍍𑌦𑍀𑌂 𑌸𑌾 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞-
𑌯𑌾𑌹𑌿 𑌵𑌿𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑍍𑌯𑌮𑌿𑌤𑍌𑌜𑌸𑌂 𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌂 𑌤𑌂 𑌸 𑌪𑍍𑌰𑌾-
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
𑌪𑌰𑍍𑌯𑌙𑍍𑌕𑌂 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑍍𑌤𑍇"

"அந்த ப்ரும்மலோகத்தில் அரிய தடாகஸரஸ் இருக்கின்றது. அதற்கு ஆரம் எனப்பெயர். வஷ்டிஹா எனும் முப்பது முகூர்த்தங்கள் அதன் கரையிலுள்ளன. விரஜா எனும் கங்காநதி அந்த லோகத்தில் ஸதா பிரவஹித்துக் கொண்டிருக்கின்றது. இல்வமெனும் ஆச்சர்யமான வ்ருக்ஷமங்குளது. ஸாலஜ்ஜம் எனும் ஆச்சரியமாகிய இடமொன்று அவ்வுலகத்திலிருக்கின்றது. ப்ரும்மதேவர் இருக்குமிடம் அபராஜிதமெனப் பெயருடையது. அந்த ப்ரும்மஸ்தான கோபுரவாசலில் இந்திரன் ப்ராஜாபதி எனும் இருவர் வாசற்காப்போராக இருக்கின்றனர். அதற்குட்புறத்தில் "விபுப்ரமிதம்" எனும் மஹாஸபையுளது. அங்கு ஆஸந்தி எனும் வேதிகையுளது. அந்த வேதிகையில் அமிதௌஜஸ் எனும் கட்டில் போன்ற ஸிம்ஹாஸனமொன்றுளது. அங்கு ப்ரும்மா விளங்குகிறார். ப்ரும்மாவுக்குப் பிரியையாகிய பார்யை மானஸீ என ஓர் தேவியிருக்கின்றனள். சாக்ஷுஷி எனப் பெயரிய சக்ஷுரிந்திரிய ஸம்பந்தமான ஸத்துவகுண தேஜஸானது அங்கு ப்ரும்மதேவருக்கு ப்ரதிபிம்பமாயிருந்து ஜ்வலிக்கின்றது" என இவ்வாறு கௌஷீதகீ உபநிஷத்தானது

ப்ரும்மலோகத்தைப்பற்றிக் கூறுகின்றது. அவ்விதமுள்ள ப்ரும்ம லோகத்தை இவ்வுபாஸகன் அடைவான். உபாஸகன் ப்ரும்மலோகத்தில் ப்ரவேசிக்கும்போது, புஷ்பமாலாதிகளைக் கையிலேந்தியவர்களும், அஞ்ஜனாதிகளைக் கையிலேந்தியவர்களும், அரிய வாஸனைச் சூர்ணங்களை ஏந்தியவர்களும், அரிய வஸ்திரங்களைக் கைகளிலுடையோர்களும் அவ்வாறே ஆச்சர்யமாயுள்ள ஆபரணங்களைக் கைகளில் வைத்துக்கொண்டுள்ளவர்களுமாகிய நூற்றுக்கணக்கான அப்ஸரஸ்திரீகள் தத்தமிடமுள்ள உபசார த்ரவ்யங்களால் அங்கு வரும் உபாஸக புருஷர்களை உபசரித்தழைக்கின்றனர். அப்படிப்பட்ட உபசாரணையோடு வரவேற்கப்பட்டு ப்ரும்ம லோகத்தில் பிரவேசிக்கின்றான். பதினாறு வயதுடையவர்களும் ஸூர்ய காந்தியோடு ஜ்வலிக்கின்றவர்களுமாகிய அந்த அப்ஸர ஸ்த்ரீகள் செய்யும் உபசாரணைகளைச் சொல்லமுடியாது.

## ப்ரும்மலோகத்திலுள்ள வஸ்து தத்வங்கள்

தவிரவும் ப்ரும்ம லோகத்தில் ஐரம்மதீயமெனும் ஸரோவரம் ஒன்று மிகவும் விஸ்தாரமாயுள்ளது. அது அழகிய கமலங்களோடு கூடி விளங்குவது. அக்கமலங்கள் பல சித்திர வர்ணங்களையுடையன. அற்ப பலன்களைக் கொடுப்பனவாகிய கர்மவினைகள் ஸகலமும் அவ்விடமடைவதற்கு முந்தியே உபாஸகனைவிட்டு நீங்கும். அவனது பாபங்கள் பூர்வம் இங்கு அவ்வுபாஸகருக் கிடைஞ்சல் செய்த சத்துருவை யடையும். அவனிடம் ப்ரியமாயிருந்தவர்களை அவனது புண்ணியங்களடையும். ஐரம்மதீயமெனும் அந்த ஸரஸ்ஸில் இராவெனும் அன்னஸார ரஸம் அம்ருதத்திலும் சிறந்ததாக உள்ளது. மதமாகிய ஸந்தோஷத்திற்கு அது ஹேதுவாதலால் ஐரம்மதீயம் என வழங்குகின்றது. பிறகு முற்கூறிய விரஜாநதியை ஸங்கல்ப மாத்திரத்தினால் அவ்வுபாஸகன் தாண்டுவான். அங்கு அச்வத்த வ்ருக்ஷம் போன்றதாயுள்ள ஸோமஸவனமெனும் உத்தமமாகிய கல்ப வ்ருக்ஷமுளது. அங்கு விரும்பிய பொருள் ஸகலமும் கிடைக்கும். அம்மரத்தினின்றும் அம்ருதமாகிய ஸோமம் ஒழுகுமாதலால் அதற்கு ஸோமஸவனமெனப் பெயர். அன்றியும் அதற்கப்புறம் அர எனவும் ண்ய எனவும் இரண்டு தடாகமுண்டு. அவ்விரண்டும் ஸமுத்திரம் போன்றவை. அவைகளில் பால் நெய் நிறைந்திருக்கும்.

அங்குள்ள முற்கூறிய ஏஷ்டி எனும் முகூர்த்தாபிமானி தேவர்களை உபாஸகன் தனது உபாஸனையின் மஹிமையால் தடை செய்யாமலிருக்கும்படி தொலையில் போகச்செய்வான். பிறகு இல்வமெனை முற்கூறிய வ்ருக்ஷஸமீபம் செல்லுவோனை அவ்வுபாஸகனை திவ்ய

பரிமளவாஸனை வந்தடையும். ஸாலஜ்யமெனும் இடத்தை யடையும் போது திவ்யரஸம் வந்தடையும். அபராஜிதமெனும் ஸ்தாநம் செல் லும்போது திவ்யரூப வஸ்துக்கள் வந்தடையும். ப்ரும்ம ஸ்தானம் ஸமீ பிக்கவே அவரது திவ்யதேஜஸ் உபாஸகனை வந்தடையும். த்வார பாலகர்களாயுள்ள இந்திர ப்ரஜாபதிகளாகிய தேவர்கள் உள்புகும் மார்க்கத்தின் வழியாக மிகவும் பிரீதியோடு அழைத்துச் செல்லுவார்கள்.

உள்ளே புகும்போது ஹிரண்ய மயமான ஓர் பெரிய மாளிகை காணப்படும். அது மிகவும் பெரியது. நவரத்ந மயமாக ஜ்வலிப்பது. அங்கு ஓர் பெரிய ஸபையில் விசக்ஷணையெனப் பெயரிய ஓர் வேதி யுண்டு. அது புத்தி மயமானது. ப்ரஜ்ஞா வடிவமான அந்த வேதியில் அமிதௌஜஸமெனப் பெயரிய ப்ராண ஸ்வரூபமான பர்யங்கமொன்று உண்டு. அதனை வாஜஸநேயிகள் உபாஸனை செய்கின்றனர். சாந் தோக்ய சாகையுடையோர் உத்கீதமாக உபாஸிக்கின்றனர். அந்த பர் யங்கமெனும் திவ்யாஸநத்தின் முற்பாதங்கள் இரண்டும் பூதபவிஷ்யஜ் ஜகத்வடிவங்கள். லக்ஷ்மியும் ப்ருதிவியும் அவ்வாஸனத்தின் பிற்பாதங் கள். ப்ருஹத்ஸாமம் ரதந்தரமெனும் இரண்டும் குறுக்குப் பக்கங்களாம். பத்திரம் யக்ஞாயக்ஞியமெனும் ஸாமங்கள் பார்ச்வ பட்டிகைகள். ருக்வேதமும் ஸாமவேதமும் கிழக்கு மேற்குப் பட்டிகைகள். யஜுர் வேதம் தெற்கு வடக்குப் பட்டிகைகள். சந்திரகிரணங்கள் அவ்வாஸ னத்திலுள்ள மெத்தை. உத்கீதஸாமம் அதன்மேல் விரிக்கப்பட்டிருக் கும் வெண்பட்டு. லக்ஷ்மீ அதன் மீதுள்ள தலையணை. ஸர்வலோக ஸ்வ ரூபமான வஸ்திரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருக்கும் ப்ரும்மதேவர் அதன்மீது வீற்றிருக்கின்றனா.

## ப்ரும்ம ஸந்நிதியின் மஹிமை

அவரது வடிவம் பஞ்சபூதமயம். அவர் ஸர்வஜீவ ஸமஷ்டியா யுள்ளவர். அவருக்கு மானஸீ எனும் ஸாஸ்வதி, ப்ரதிரூபை எனும் இரண்டு தேவிகளுண்டு. அவ்விரு தேவிகளோடுகூட ப்ரும்மதேவர் அங்கு விளங்குகின்றனர். அவரெதிரில் சென்றதும் திவ்யஞான முதிக் கும். அணிமாதி அஷ்டமஹா ஸித்திகளும் வேலைக்காரிகளாய் நின்று அவ்வுபாஸகனை ஸேவிக்கும். அவ்வுபாஸகர் இவ்வாறுள்ள பலவகை யாகிய உபசாரங்களிலும் ஸித்திகளிலும் மயங்கார். ஆனந்த பரவச ராவார். ஆத்ம ஸ்வரூபானந்தத்தில் மூழ்கி மகிழ்வார்." என இவ்வாறு ப்ரும்மலோக ஸ்திதியும் அங்கு சென்று உபாஸகரடையும் ஆனந்த ப்ராப்தியும் கௌஷீதகீ முதலிய உபநிஷதங்களில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. உபாஸகர் ப்ரும்ம ஸபையில் நடக்கும்

வேதாந்தார்த்தங்களை ச்ரவணஞ் செய்வார். விமானங்களின் மூலமாக எங்கும் அவர்கள் ஸஞ்சரிக்கலாம். ஊர்வசீ மேனகை திலோத்தமை முதலிய அப்ஸர ஸ்திரீகள் செய்யும் ப்ரும்மானந்த நடனங்களை தரிசித்து அனுபவானந்தத்தில் மூழ்குவார். விரஜா நதிக்கரை முதலிய இடங் களில் ஸமாதி நிஷ்டையில் அமர்வார்கள். இவ்விதம் திவ்யானுபவத் தோடு ஜீவன்முக்தராக அந்த கல்பம் வஸித்துப் பிறகு விதேஹகைவல்ய மடைவார்கள். ஸாமான்யமாய்ச் செய்யும் ஸகுணோபாஸனையின் பலன் இதுவேயாம். தீவ்ரமாக ஸகுணோபாஸனை செய்வோர் இந்த ஜன்மத் திலேயே ஈச்வராநுக்ரஹத்தால் ஞானமுதிக்கப்பெற்று முக்தி யடைவார். சிலகாலம் உபாஸனைசெய்து அதனினின்றும் நழுவியவர்களானால் பிந்திய ஜன்மங்களில் யோகிகளின் குலம் முதலியவைகளில் ஜனித்து பூர்வாப் யாஸ சேஷத்தைப் பூர்த்தி செய்துகொண்டு கைவல்யம் பெறுவார்.

## அரூபவஸ்துவை உபாசியாதவருக்கு உபதேசம்

இப்படிப்பட்ட அரூப ஸகுணோபாஸ்தி செய்யத்தக்க பரிபாக மிரர்விடில் சூர்யாதிகளின் மூலமாக இறைவனை வணங்குதலாகிய ப்ரதீகோபாஸ்தியைச் செய்யவேண்டும். அதற்கும் தக்க பரிபாக மிரா விடில் சிவவிஷ்ணு பராசக்தியாதி மூர்த்த பேதங்களிடம் பக்தியோடு சித்தத்தைச் செலுத்தவேண்டும். அதுவும் இயலாதவர் பகவானுடைய அவதாராதி மூர்த்திகளில் பக்தியால் சித்தத்தை ஈடுபடுத்துவார்களா யின் அதனாலும் முற்கூறிய பயனைக் கிரமமாகப் பெற்றுய்வார்கள் என் பதில் சிறிதும் ஸந்தேஹத்திற் கிடமில்லை. அதுவும் ஸாத்தியப்படா விடில் பகவந் நாமோச்சாரணத்தைக் கைப்பற்றிக்கொண்டாலும் அர்ச் சிராதிகதியை யடையலாம். அதற்கு மியலாவிடில் பகவானது பிம்பங்க ளாயுள்ள லிங்காதிகளையோ பிரதிமாதிகளாகிய விக்ரஹங்களையோ ஆரா தித்தாலும் ஜனனமரணபயம் நீங்கப்பெறலாம்.

## சிவவிஷ்ணு லோகங்கள்

இவ்வுண்மை இங்கறிய வேண்டும். ஸத்தியலோக மென்பது பொதுப்பெயர். அவ்விடத்தில் ப்ரும்மலோகம், விஷ்ணுலோகம், சிவ லோகம் என மூன்றிடங்களுள்ளன. முறையே அங்கு ப்ரும்மா, விஷ்ணு, சிவன் என மும்மூர்த்திகள் விலாஸம் செய்திருக்கின்றனர். ஸர்வக்ஞத் வாதி சக்திகளை யுடையவனான அரூப ஈச்வர அந்தர்யாமி வஸ்துவை யுபாஸிப்பவர் ப்ரும்ம ஸந்நிதி யடைந்து அவ்வரூப வஸ்துவின் உண்மை ஸ்வரூபத்தை அந்த ஸந்நிதியில் அறிந்தவர்களாய் ஆத்மானுபவத்தோடு அவ்வுலகில் இன்புறுகின்றனர். சிவ விஷ்ணுவாதி மூர்த்தி பேதங்களை யுபாஸிப்பவர் சிவ விஷ்ணுவாதி மூர்த்திகளின் ஸந்நிதிகளை முறையே

யடைந்து அம்மூர்த்தி தரிசனாதிகளால் கைலாஸ வைகுண்டங்களெனும் அவ்விடங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு ஸதா இறைவனது மூர்த்தியை ஸேவித்து இன்புறுகின்றனர். பூர்வம் இவ்வுலகில் இருக்கும்போது ஈச்வரனது எவ்வுருவத்தைச் சிந்தித்து உபாஸித்தனரோ அவ்வுருவத்தோடு விளங்குகின்ற இறைவனுடைய உலகை யடைகின்றனர் என்பதே உண்மை. இவ்விதம் மும்மூர்த்திகளின் உபாஸனைகளை இங்கு செய்தவர்களும் இங்கு மரித்ததும் ஸுஷும்னை யெனும் நாடியின் வழியாகவே மூர்த்தாவை பேதித்துக்கொண்டு அர்ச்சிராதி மார்க்கத்தின் வழியாகவே செல்லுகின்றனர். ப்ரும்மலோகம் செல்லும்போது அமானவ புருஷர்களால் உபசரிக்கப்படுவது போலவே சிவ விஷ்ணுலோகம் செல்லுவோர்களும் உபசரிக்கப்பட்டு அவ்வுலகங்களை யடைகின்றனர். இதுவே உபாஸகர்களின் கதியைப்பற்றிய உண்மை.

### இதிஹாஸ புராண சரிதங்களாலும் ஈச்வரசக்தியையே அறியவேண்டும்

சிவலோகத்திலுள்ள சிவபெருமானுடைய விலாஸ சரிதங்களைக் கவனித்தால் ஸர்வக்ஞத்வாதி திவ்ய குணங்களே அறியப்பட்டவையாகும். வைகுண்டத்திலுள்ள இறைவனது மூர்த்தி விலாஸ சரிதங்களாலும் ஸர்வக்ஞத்வாதி குணங்களே அறியப்படும். அவதாரங்களாகிய ராமகிருஷ்ணாதி மூர்த்திகளின் சரிதங்களாலும் ஸர்வக்ஞத்வாதி சக்தி குணங்களே அறிந்துகொள்ள வேண்டியன. ஆதலால் சிவபுராணங்களையோ ராமாயணாதி நூல்களையோ ஆழ்ந்து கவனித்துப் பார்த்தால் முற்கூறிய ஸர்வக்ஞத்வாதி ஆறு மஹாசக்தி குணங்களே விளங்கும். ஆகையால் பகவானுடைய அவதார சரிதங்களைச் சொல்லுவோர் இந்த ஸந்தர்ப்பங்களில் பகவானுடைய இக்குணங்கள் சொல்லப்படுகின்றன எனப் போதிக்கவேண்டும். ஸர்வக்ஞத்வாதி சக்தி ப்ரதான வடிவமாகிய பராசக்தி எனும் லோகமாதாவின் மூர்த்தியை உபாஸிப்பவர்களோ எனின் இஹலோக ஸாம்ராஜ்ய போகங்களில் விருப்பமுடையோர்களாயின் இங்கு அந்த போகங்களை யனுபவித்து, மரிக்கும்போது முற்கூறியபடி ஸுஷும்னை நாடியின் வழியாக மூர்த்தாவை யடைந்து, அங்கிருந்து வெளிப்பட்டு முற்கூறியபடி அர்ச்சிராதி மார்க்கத்தின் வழியாகவே ப்ரும்ம, விஷ்ணு, சிவஸ்தானங்களைக்காட்டிலும் மஹாமகிமை பெற்றுள்ள பராசக்தி புவனத்தையடைந்து அங்கு ப்ரும்மஞானம்பெற்று முக்தராவர்.

### ஈச்வரசக்தியே பராசக்தி

சிவ சரிதங்களாலும் விஷ்ணு சரிதங்களாலும் ராமக்ருஷ்ணாதி அவதார சரிதங்களாலும் பராசக்தி விலாஸ மகிமைகளே சொல்லப்படு

கின்றன என்பதே உண்மை. ஏனெனின் சிவ விஷ்ணுக்களிடமும் ஸ்கந்த விநாயக மூர்த்திகளிடமும் ராமக்ருஷ்ணாதி மூர்த்திகளிடமும் இருந்த ப்ரபாவங்கள் ஸகலமும் பராசக்தியின் ஸ்வரூபத்தைத் தவிரத் தனியாக வேறொன்றுமல்ல. ஆதலால் ஸகல உபாஸ்திகளும் உண்மையில் பராசக்தியின் உபாஸ்திகளே. பராசக்தி பரசிவங்களாகிய தத்வங்களிரண்டும் ஸம்ப்ரதானமாகத் தோன்றிய அவஸர விலாஸமே ஸ்கந்த மூர்த்தி ஸ்வரூபமாதலால், அந்த மூர்த்தியை உபாஸித்தவர்களும் முற்கூறியபடி ஸுஷும்னா நாடி வழியாக வெளிப்பட்டு அர்ச்சிராதிகதி பெற்று ஸ்கந்தபுவனமடைந்து அணிமாதி மஹாஸித்திகளையுடையவர்களாயிருந்து ப்ரும்மஞானம் கிடைத்து கைவல்யம் பெறுவார்கள். ஸகல ஸித்திகளுக்கும் ஆதிகாரண அநுக்ரஹ கர்த்தாவாகிய மூர்த்தி விலாஸத்தோடு கூடிய ஸ்ரீ மஹா கணபதியை உபாஸிப்பவருக்கும் ஸுஷும்னா நாடியினின்றும் மூர்த்தாவின் வழியாக முற்கூறியபடி அர்ச்சிராதி கதி ப்ராப்தி ஸித்தமேயாம். ஆனால் இங்கு ஓர் விஷயம் மாத்திரம் அவசியம் கவனித்துக்கொள்ள வேண்டியது. எவ்வகையாகிய ஈச்வரமூர்த்தியை உபாஸித்தாலும் தத்தம் வர்ணாச்ரமங்களுக் குற்றனவாய் காலதேச வர்த்தமான இயல்புகளுக்குத் தக்கபடி மஹரிஷிகளால் ஸ்ம்ருதி முதலிய நூல்களில்விதிக்கப்பட்டிருக்கும் அநுஷ்டானங்களைத் தள்ளி, வ்ராத்தியர்களாயும் பதிதர்களாயு மிருந்துகொண்டு உபாஸ்தியால் யாம் நற்கதியடையலாம் என்றெண்ணுவது அவிவேகமேயாம்.

இதற்குமுன் வ்ராத்யர்களாகவும் பதிதர்களாகவும் யாம் இருந்திருப்பினும் இப்போது நாம் உபாஸனையைக் கைக்கொண்டு நற்கதியடையும் வழியைத் தேடிக்கொள்வோமென் றெண்ணுவோமாயின் இதற்குமுன் நம்மிட மேற்பட்டிருந்த பதிதச்செயல்களையும் நினைந்து மனமுருகி அனுதாப மடைந்தவர்களாய் அச்செயல்களுக்குற்ற ப்ராயச்சித்தத்தைச் செய்துகொண்டு முன்னிருந்த துராசாரச் செயல்களை அடியோடு விட்டுவிட்டு இனி ஸதாசாரங்களைக் கைக்கொண்டவர்களாயிருந்து உபாஸனையில் ஈடுபடுவோமாயின் ஸுஷும்னாநாடி ப்ரவேசமும் மூர்த்தாவின் பேதத்தினால் அர்ச்சிராதிகதியும் முற்கூறியபடி பரம்பொருளின் ப்ராப்தியும் ஏற்படும் என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை.

## ஆசார நியமங்களோடுகூடி உபாஸிக்கவேண்டும்

வர்ணாச்ரம தர்மானுஷ்டானங்களைவிட்டு, வ்ராத்தியர்களாகவோ பதிதர்களாகவோ இருந்துகொண்டு உபாஸனையைச் செய்வோமாயின் ஸுஷும்னாநாடி ப்ரவேசமும் அர்ச்சிராதிகதியும் நமக்கு லபிக்காதென்பது நிச்சயம். மரித்ததும் நரகலோக மடைந்து பிறகு ம்லேச்சசாதி

பிறவிகளைப்பெற்று உபாஸனையின் பயனாக ஸுகபோகாதிகளை அந்த ஜன்மங்களில் அநுபவிப்பவனாவான். அதாவது பதித வ்ராத்தியச் செயல்களின் பயனாக நரகயாதனையும் சண்டாளாதி நீசஜன்மப்ராப்தியும், உபாஸனையின் பயனாக ஸுகபோக போக்யானுபவமும் ஏற்படும். இங்கு ஓர் சங்கை யுதிக்கலாம். அதாவது பாபச்செய்கைகளோடு கூடியவனா யிருந்து உபாஸனையைச் செய்தவனுக்கும் மரித்ததும் உத்தமகதி யேற் பட்டதென பாகவதாதிகளிலுள்ள அஜாமிளாதியரின் சரிதங்களாலும் ஸ்காந்தம் உபதேச காண்டத்திலுள்ள எண்ணிறந்த பல சரிதங்களாலும் அறியப்படுகின்றதே. இப்படியிருக்க வ்ராத்திய பதிதச் செய்கைகளை வைத்துக்கொண்டு உபாஸ்தி செய்வது நற்கதிக்கு ஹேதுவாகாதென் பதை எப்படி ஒத்துக்கொள்ளுவது? எனப் பலர் ஸந்தேஹிக்கக்கூடும்.

இனி இச்சந்தேகத்தை ஒழியச்செய்வாம். வ்ராத்திய பதிதச் செயல்களைச் செய்தவராயினும் அனுதாபமடைந்து அந்தச் செயல்களை வெறுத்துத் தள்ளியவர்களாயிருந்து உபாஸ்தி செய்தவர்களுக்கே நற்கதி யேற்படுமென்றி மற்றவர்களுக்கல்ல எனும் விஷயம் இதிஹாஸ புராணங் களில் மிகவும் வியக்தமாக உபதேசிக்கப்பட் டிருக்கின்றது. அதாவது மஹாபாரதம் உத்யோகபர்வாவில் த்ருதராஷ்டிரனது ப்ரச்னமொன் றுளது. அதாவது ஸதாசாரங்களை விடுத்து துராசாரமுடையவனாயிருந்து கொண்டு, பகவானை உபாசித்தால் நமக்கு பாபங்களெல்லாம் ஒழிந்து ஸத்கதி கிடைப்பது நிச்சயமெனும் நம்பிக்கை உடையவனாயிருந்து இறை வனிடம் சித்தத்தை ஈடுபடச் செய்துகொண்டிருப்பவனின் கதியாது? என அவன் ஸநத்ஸுஜாதரைக் கேட்டதற்கு அம்முனிவரர்,

வெ஦ொவா ஹரிஹக்திவா ஹக்திவாவி மஹெஶ்வரெ ।
ஸாசாராத் பதிதம் மூடம் ந புநந்தி த்விஜோத்தமம் ॥
நவநாம்ஸிவ்ருஜிநாத் தாரயந்தி மாயாவிநம் மாயயா வர்த்தமாநம் ।
நீடம் ஶகுந்தா இவ ஜாதபக்ஷா: ச்சந்தாம் ஸ்யேநம் ப்ரஜஹத்யந்தகாலே ॥

"வேதம் அல்லது ஹரிபக்தியாகட்டும் மஹேச்வரனிடம் பக்தியாகட்டும் தனது ஒழுக்கங்களினின்றும் நழுவிய மூடனை ஒருபோதும் ரக்ஷிக்கின்ற தில்லை."

## துராசாரத்தோடு உபாஸனை, ஸத்கதிக்கு ஏதுவாகாது

வேதங்கள், துராசாரமுடையவனும், உள்ளத்திலோர் விதமும் வெளியில் மற்றோர்விதமாயும் நடந்துகொள்ளுவோனுமாகிய மனிதனை ஒருபோதும் பாபங்களினின்றும் கரையேற்றுகின்றனவல்ல. ரக்கை

முளைத்த பக்ஷிகள் கூண்டை விடுத்துக் கிளம்பிப்போய்விடுதல்போல இவனை வேதங்கள் பிராணன் பிரியும்போது கைவிடுகின்றன எனக் கூறியிருக்கும் வாக்கியங்களைக் கவனித்தால் தற்காலம் மிகவும் வியாபகமாயுள்ள இச்சந்தேகம் ஒழிந்துபோகும். அஜாமிளாதிசரிதங்களினுல் பாபங்களை வைத்துக்கொண் டிருப்பவனையும் ஈச்வரபக்தி ரக்ஷிக்குமெனச் சொல்லுவோமாயின் இங்கு கூறிய அரும்பெரும் உண்மை மொழிகளைத் தள்ளிப்போடும்படியாகும். ஆதலால் இவ்வுண்மை மொழிகளோடு முரணுமல் அஜாமிளாதி சரிதங்களில் ரஹஸ்யம் யாதுளது? எனக் கவனிக்கவேண்டும். அதை இவ்வாறறிக.

அஜாமிளன் எனும் பிராமணன் ஸகலவேத சாஸ்திரங்களையும் கற்றறிந்து துராசாரமாகிய வேசி ஸங்கத்தில் இறங்கியவனுனன். அவனுடைய புத்திரனுன நாராயணனென்பவனை அந்திய காலத்தில் கூப்பிட்டான். அவன் கவனிக்காதது கண்டு, அப்போது அஜாமிளன் நாம் பாபியாயிருந்து வீணுய்க் கெட்டோமே என்ன செய்வோம் என மனமுருகி உண்மையாகிய நாராயணனை நினைத்துக்கொண்டு உயிர்துறந்தான். மனமுருகிய பிறகு மரிப்பதற்கிடையில் பாபம் செய்யாதவனுயிருந்து நாராயண நாமோச்சாரணத்தோடு உயிர் துறந்ததினுல் ஸத்கதியடைந்தானென்பதே இங்கு அறிந்துகொள்ளவேண்டிய உண்மை. அன்றியும் அர்த்த வாதங்களாகவும் பலசரிதங்கள் புராணுதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. "இம்மருந்தை ஸாப்பிட்டால் கல்லையும் தின்றால் ஜீர்ணமாகும்" என வைத்தியர் சொல்லும் வாக்கியத்தால் மருந்து சிறந்தது என்றறிய வேண்டுமேயன்றி, கல்லைத் தின்போம் ஜீர்ணமாகும் என எண்ணுவது எப்படித் தப்பாகுமோ அப்படியே இவ்விஷயமும் என்றறிக. ஆதலால் ஸதாசாரங்களோடு கூடியவனுயிருந்தே ஈச்வரனை உபாஸிக்க வேண்டுமென்பதே நிர்ணயமென்பதாம்.

## உபாஸனையினின்றும் நழுவியவனுக்கும் நல்ல கதியே

இனி இப்படிப்பட்ட அரும்பெரும் உபாஸ்தியை எவ்வளவு காலம் செய்யவேண்டும் எனும் விஷயத்தை யறிந்துகொள்ளவேண்டும். சிலர் சிலகாலம் மிகவும் ச்ரத்தையோடு உபாஸனையைச் செய்து பிறகு விட்டுவிடக்கூடும். அல்லது மரணகாலத்தில் இவ்வுபாஸ்தி இராமல் நழுவிப் போகக்கூடும். அப்படி நழுவிப்போய் மரிக்க நேருவதைச் சற்று கவனிக்கவேண்டும். அதாவது உபாஸ்தியை செய்துகொண்டிருப்பவர் விஷயபோக இச்சையால் தடை ஏற்பட்டு அப்பியாஸத்தை விட்டுவிடக்கூடும். அல்லது விஷயபோக இச்சை வராவிடினும் ரோகாதிகளின் கடுமையால் அப்பியாஸம் நழுவியவர்களாயிருந்தும் மரிக்கக்கூடும்.

அவர்களின் கதியாது எனின் அதனைக் கூறுவாம். ஆயினும் முன்னர் எவ்வளவு காலம் உபாஸிக்க வேண்டுமென்பதைக் கூறுவாம்.

"ஆப்ராயணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம்"

"எனும் ப்ரும்ம ஸூத்ரத்தினால் மரணகாலம் வரையில் உபாஸிக்க வேண்டியதென நிர்ணயிக்கப்பட் டிருக்கின்றதறிக. ஏனெனின் கடைசி காலத்தில் ஈச்வரஸ்வரூபானுஸந்தானம் ஸித்திக்க வேண்டுமென்பதே முக்கியமாகிய விஷயம். இனிச் சிலகாலம் உபாஸ்திசெய்து பிறகு உபாஸ்தி விட்டுப்போயின் பயனில்லையோ எனின் அவ்வுண்மை யறிக. அதாவது அப்படி உபாஸ்தி நின்றுபோய் மரித்தாலும் அவ்வுபாஸக னுக்கு உத்தமகதியே. எப்படி எனின்,

ப்ராப்ய புண்யக்ருதாம் லோகாநுஷித்வா சாச்வதீ: ஸமா: |
சுசீநாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ(அ)பிஜாயதே |

"அச்வமேதாதி புண்ணியம் செய்தவர்களுக்குரிய புண்ணிய உலகங் களை அடைந்து அங்கு பலகாலம் புண்ணிய போகங்களைப் புசித்துப் பிறகு சுசிகளும் செல்வம்நிறைந்த ஸ்ரீமான்களுமானவர்களின் வீட்டில் வந்து பிறப்பான்.

அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் |
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருசம்

"அல்லது செல்வமிராத யோகிகளின் குலத்தில் ஜனிப்பான். இது மிகவும் துர்லபமானது" என பகவத்கீதை ஆறுமத்தியாயத்தில் இவ் விஷயம் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்படிப் பிறந்து மீண்டும் உபா ஸ்தியைச் செய்து உத்தமமான ஸித்தியைப் பெறுவான்.

நஹி கல்யாணக்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி

"ஓ அர்ஜுன, நற்கார்யத்தைச் செய்தவன் ஒருவனும் கெடுதியை யடையமாட்டான். அவனுக்கு க்ஷேமமே என்பது நிச்சயமென பகவ னால் அர்ஜுனனுக்கு உபதேசிக்கப்பட் டிருக்கின்றது. மற்றுமோர் விஷயம் இங்கு தெரிந்துகொள்ளவேண்டும். அதாவது, ஜீவாத்மா மரண காலத்தில் ஹ்ருதய தேசத்தில் பரமாத்மாவோடு ஒன்றுபடுதலை அடை யும்போது ஸுஷுப்தியில் போலவே ஒருவஸ்துவும் தோன்றாவிடினும், பரலோகம் செல்லுதற்கு அநுகூலமாகிய ஞாநம் மாத்திரம் அச்சமயம் இருக்கும். இச்சரீரத்தைவிட்டு வெளிப்பட்டுச் செல்லுமிடத்தையும் மார்க்கத்தையும் அறிந்துகொள்ளத்தக்க அறிவுப்ரகாசமுதிக்கும். அதா

வது ஜீவன் ஹ்ருதயகமலத்திற்குப் போய்ச் சேரும்போது ஹ்ருதயகமலத்தின் நுனிப்பக்கம் பிரகாசிக்கும். இங்கு ஓர் த்ருஷ்டாந்தம். மஹாராஜா தன் ஊரைவிட்டு வேறு ஊருக்குப் போகும்போது மஹாராஜா போகும் மார்க்கத்தினில் தீபப்ரகாசம் எப்படி ஜ்வலிக்குமோ அப்படியே இந்த ஜீவாத்மாராஜன் இச்சரீரமாகிய புரியைவிடுத்துப் பரலோகமாகிய புரிக்குப் போகும் தருணத்தில் ஹ்ருதயத்தின் நுனிப்பாகமாகிய ராஜ மார்க்கம், மார்க்கத்தைப்பற்றிய ஞானமாகிய புத்தி வ்ருத்தியால் ப்ரகாசிக்கும். அந்த ப்ரகாசத்தினால் ஜீவாத்மா வெளிப்பட்டு லோகாந்தரம் செல்லுவான். இந்தச் சரீரமாகிய புரியைவிட்டு வெளிப்போகும் மார்க்க த்வாரங்கள் பதினொன்றுள்ளன. நேத்ரங்களிரண்டு, காதுகளிரண்டு, மூக்குத்துவாரங்களிரண்டு, வாய், நாபி எனும் தொப்புள், குஹ்யதுவாரம், அபானத்வாரம், சிரஸ்ஸிலுள்ள ப்ரும்ம ரந்திரத்தின் வழியாக வெளிப்போவதற்கு ஹேதுவாகிய வழியான ஸுஷும்னை த்வாரம் எனும் இந்தப் பதினொரு துவாரங்களுள் யாதேனும் ஓர் துவாரத்தின் வழியாக வெளிப்படுவான்.

“ஹ்ருதயஸ்யாக்ரம் ப்ரத்யோததி தேந ப்ரத்யோதேந ஏஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்நோ வா அந்யேப்யோ வா சரீரதேசேப்ய:”

“ஹ்ருதயத்தின் நுனி ப்ரகாசிக்கின்றது. அந்த ப்ரகாசத்தினால் இவ்வான்மா வெளிப்பட்டுப் போகின்றான். கண் வழியாகவாவது தலையின் வழியாகவாவது மற்றுமுள்ள தேகாவயவங்களின் வழியாகவாவது வெளிப்படுகின்றான்” என்பது முதலிய வாக்கியங்களால் ப்ருஹதாரண்யம் சாந்தோக்யம் கௌஷீதகீ முதலிய உபநிஷத்துகளில் இவ்விஷயம் சொல்லப்பட்டுளது.

## மரணகாலகதி

மரணகாலத்தில் ஜீவன் அபானத்வாரத்தின் வழியாக வெளிப்பட்டால் நரகலோகமடைவான். குஹ்யமெனும் புருஷாவயவ ஸ்திரீ அவயவங்களின் வழியாக வெளிப்பட்டால் காமத்தினால் மிகவும் பீடிதங்களான புறாக்கள் முதலியவைகளின் ஜன்மத்தைப் பெறும். நாபி வழியாக வெளிப்போனால் பிசாச ஜன்மத்தைப்பெறும். வாய் வழியாக வெளிப்போனால் போசனத்தில் மிகவும் ஈடுபடும் பிராணிகளின் ஜன்மத்தை அடையும். அன்னபானத்தில் மிகவும் ஆவலுடைய பிராணிகள் நரகலோகம் செல்லும் ஓர்வகை ப்ரேதங்களாகும். நாசி வழியாக வெளிப்பட்டால் நல்ல வாஸனை பதார்த்தங்களை யனுபவிக்கும் மனிதனுவன். கஸ்தூரிமான்

முதலிய ஜந்துக்களாகவும் பிறக்கலாகும். ச்ரோத்ரத்தின் வழியாக வெளிப்பட்டால் கந்தர்வாதி லோகங்களை யடைந்து திவ்ய கானங்களில் ரமிக்கலாகும். நேத்திரத்தின் வழியாக வெளிப்பட்டால் சூர்ய சந்திராக்னியாதி லோகங்களை யடைந்து தேவ ஜன்மம் பெறலாகும். ஹ்ருதயத்திலிருந்து ஸுஷும்னை வழியாக சிரஸில் உள்ள ப்ரும்மரந்திர துவாரத்தால் வெளிப்பட்டால் புனராவ்ருத்தியிராத ப்ரும்மலோகத்தை யடையலாம். மரணவஸ்தையானது இந்திரியப்ராணமனஸுகளை ஜீவாத்மா இந்தச் சரீரத்திலிருந்து இழுத்துக்கொண்டு வேறு இடம் செல்லுவதற்குள்ள முயற்சியைச் செய்தலே. அப்போது சரீரத்திலேற்படும் க்லேசத்தைச் சொல்ல இயலாதென்பது உலகப்ரஸித்தமே. ஆயினும் ஜீவாத்மாவுக்கு இரண்டு விதமான ஞானமேற்படும். ஹ்ருதயத்தின் நுனியிலிருந்து வெளிச்செல்லவேண்டிய நம்முடைய மார்க்கமாகிய நாடித்வாரமிதே எனும் ஞானமொன்றும், இச்சரீரத்தை விட்டால் வரும் சரீரமிதுவே எனும் மறுசரீர விஷய ஞானம் மற்றொன்றுமாமென்றறிக. வரப்போகும் சரீரவிஷய ஞானம் இருத்தலைக்கொண்டு அந்த ஸமயம் நாம் யாதும்செய்து கொள்ள முடியாது. சரீரம் ஆரோக்யமாக இருக்கும்போதே நமக்கு மரணம் ஸமீபித்துளது என்பதை யறிந்துகொண்டால் அப்போதாவது ஒருக்கால் க்ஷேமத்தைத் தேடிக்கொள்ளலாம். அதற்கடையாளம் ஜாக்ரத் காலத்திலும் ஸ்வப்னத்தாலும் அறியலாம்.

## மரணத்திற்குமுன் அடையாளம்

தனது மரணகாலத்தைப்பற்றிய நிச்சய ஞானம் ஏற்பட்டால் உலகப்பொருள்களில் பற்றற்றுப் பரம்பொருளைத் தேடுதற்கு தீவிரமாய் மனம் முயற்சிக்கும். கௌஷீதகீயுபநிஷத் எனும் ருக்வேத சாகை முதலியவைகளில் அவ்விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சூரியமண்டலம் நிலாப்போலவும் மத்தியான்னத்தில் ஸந்த்யாகாலம் போலவும் தோன்றினும், சூர்யமண்டலத்தில் துளைதோன்றினும் மரணம் ஸமீபிக்கும். நாம் பார்க்கும் சூர்யமண்டலத்திலும் நம்முடைய வலது கண்ணிலும் ஏகனை அந்தர்யாமியாகிய இறைவன் சோதியளித்துக் கொண்டிருக்கின்றான். நேத்திரத்திற்கும் ஆதித்ய மண்டலத்திற்கும் நாடியினும் கிரணங்களாலும் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமுடைய தாகவே இருக்கின்றது என உபநிஷத்தில் காணலாம். மரணகாலம் ஸமீபத்திலிருந்தால் அந்த ஸம்பந்தம் அறுபட்டு, இராமற்போகும். அக்காரணத்தினால் சூர்யமண்டலம் முன்போலத் தோன்றாது. நிலாப்போல் சீதளமாகத் தோன்றும். ஆகாசத்தில் காணப்படும் கிரஹநக்ஷத்ராதிகள் சென்னிறமுடையவையாகக் காணப்படினும் அவ்வாறே.

முட்டையிட்டிருக்கும் காகக்கூண்டு முதலியவைகளிலிருக்கும் தூர்க்கந் தம்போலத் தன் தலையிலிருக்குமாயினும், கண்ணாடி, ஜலம் முதலியவை களில் காணப்படுவனவாகிய தன் பிரதிபிம்ப தேகத்தில் தலை காணப் படாமலிருக்குமாயினும், பிறன்கண்களின் கருவிழியில் தோன்றுகின்ற நம் தேஹத்தின் பிரதிபிம்ப வடிவம் தலைகீழாகத் தோன்றினாலும், மரணகாலம் சமீபித்திருக்கும். அன்றியும் விரல்களால் காது த்வாரங்களை அடைத்துக்கொண்டு கவனிக்கும்போது உள்ளிருக்கும் ப்ராணத்வனி கேழ்க்காவிடினும், இளைத்துள்ள தேஹம் திடீரெனப் பெருத்தாலும், மிகவும் கோபஸ்வபாவமுடையவர்கள் திடீரென சாந்தஸ்வபாவமுடைய வர்களாயினும், ஸ்வப்னத்தில் கழுகு காகம் கழுதை ஒட்டகை, மாம்ஸத் தைத் தின்னும் பறவைகள் இவை தன்மேல் விழுந்து பற்களால் பிடுங்கு கின்றனவாகக் கண்டவர்களாயினும் ஒருவருஷத்தில் மரிப்பார்கள். தன் நேத்திரங்களைத் தன் கையால் பீடிக்கும்போது மின்மினிப்பூச்சிபோலத் தெரியும் சோதியைக் காணாதவர்கள் மூன்றுமாதத்தில் மரிப்பார்கள். விரல்களால் நேத்திரபீடனை செய்யாமல் சும்மா இருக்கும்போதே தனது நேத்திர சோதியைக் காண்பவர் மூன்றுமாதத்தில் மரிப்பர். தன் தலையில் நெருப்புப் பற்றிக்கொண்டதாக ஸ்வப்னம் காண்பவர்களும் மேகமிராத ஆகாசத்தில் மின்னலைக் காண்பவர்களும், கண்ணாடி முதலியவைகளுக் கெதிரில் தனது பிரதிபிம்பம் தோற்றமுறாதவர்களும் ஒரு மாதத்தில் மரிப்பார்கள். கறுப்புப்பற்களுடையவர்களும் கையில் தண்டமேந்தியவர் களுமாகிய கோர மனிதர்கள் தன்னை அடித்து ஹிம்ஸிக்க வந்திருக்கிற தாகவும் தன்னைத் தூக்கிப் பிடிக்க வருகிறதாகவும் ஸ்வப்னம் கண்டால் ஓர் மாதத்தில் மரிப்பான். பன்றி குரங்குகள் தன்னைக் கடித்து ஹிம்ஸிக் கிறதாகவும், மஞ்சள் நிறமுள்ள அந்நத்தைத் தான் புசிக்கின்றதாகவும், தேன்கலந்த அந்நத்தைத் தான் சாப்பிடுகின்றதாகவும், வெண்தாமரைமல ரைத் தன் தலையில் தரிக்கின்றதாகவும், கழுதை பன்றி ஒட்டகைகள் பூட் டிய வண்டியில் தான் ஏறிக்கொண்டு போகின்றதாகவும், கறுப்பு வர்ண முடைய பசு அதே நிறமுடைய கன்றோடுகூடத் தென்திசைக்குச் செல் லுகின்றதாகவும், பாசிமாலை செம்பரத்தைப் பூமாலை இவைகளைத் தன் கழுத்தில் தரித்துக்கொண்டு எண்ணெயை உடம்பில் தான் பூசிக்கொண்டு நிர்வாணமாகத் தென்திசைக்குச் செல்லுகின்றதாகவும், சிவந்த வஸ்திரந் தரித்துக்கொண்டும், செஞ்சந்தன மணிந்துகொண்டும் பசிதாகாதிகளால் வருந்திக்கொண்டும் தென்திசைநோக்கிச் செல்லுகின்றதாகவும் ஸ்வப்னம் கண்டால் ஆறுமாஸத்திற்குப் பிறகு மரணமடைவார். கறுப்பு வஸ் திரந்தரித்து கறும் சந்தனம்பூசி மிகவும் ப்ரேமையோடு வந்து ஒரு ஸ்த்ரீ தன்னை ஆலிங்கனம் செய்கிறதாகக் கனவில் கண்டால் பத்து தினத்திற்

குள் மரணம் நேரும். இரும்பு தண்டத்தைக் கையிலேந்தி கறுப்புநிறமுடைய கோரபுருஷன் தன்னை அந்த தண்டத்தினால் ஹிம்ஸிக்கின்றதாகக் கண்டால் மூன்றுதினத்தில் மரணம்நேரும். அழகிய மேனியாள் அழகிய வஸ்திரந்தரித்து மிகவும் ப்ரீதியோடு தன்னை வலுவில் வந்து ஆலிங்கனம் செய்கிறதாகக் கண்டால் அன்றைய தினத்தில் சிறந்த வஸ்து லாபம் தனலாபம் முதலிய லாபங்களேற்பட்டு மிகவும் ஸந்தோஷிக்கலாகும். புருஷர்களுக்குப்போலவே ஸ்த்ரீகளுக்கும் ஸ்வப்னபலம் என்றறிக.

ஸ்வப்னம் இரண்டு வகையாகும். பூர்வஜன்ம புண்ணியபாப கர்மாதீனமாக ஏற்படுவதொன்று. இந்த ஜன்மத்தில் ஸம்பவித்த காமக்ரோத லோபமோஹ மதமாத்ஸர்யாதி சிந்தனைகளினாலாவது அல்லது வாதபித்த கபாதி தாதுவைஷம்யாதிகளாலாவது இவ்விதம் ப்ரத்யக்ஷ காரண ஸாமக்ரியைகளால் ஏற்படுவது மற்றொன்று. இவ்விருவகை ஸ்வப்னங்களுள் பூர்வஜன்ம கர்ம வசத்தினாலேற்படுவனவாகிய ஸ்வப்னங்களுக்கே பயன்காணலாம். விழித்துக்கொண் டிருக்கும்போதுள்ள பழக்க வழக்கங்களாலேற்படுவனவாகிய இரண்டாவது வகை ஸ்வப்னத்திற்கும் வாத பித்தாதி வைஷம்யாதிகளாலேற்படும் ஸ்வப்னங்களுக்கும் பயன் ஏற்படாது. இவைகளுள் முற்கூறிய ஸ்வப்னத்திற்கும் இரவிலுள்ள நான்கு ஜாமங்களுள் ஒவ்வொரு ஜாமத்தில் கண்ட ஸ்வப்னங்களுக்கும் பயனில் வேற்றுமையுண்டு. முதல் ஜாமத்தில் முற்கூறிய ஸ்வப்னங்களைக் கண்டால் ஒருவருஷத்திற்குப் பிறகும், இரண்டாவது ஜாமத்திற் கண்டதற்கு ஆறு மாதத்திற்குப் பிறகும், மூன்றாவது ஜாமத்திற் கண்டால் மூன்றுமாதத்திலும், நான்காவது ஜாமத்தில் கண்டால் மூன்று மாதத்திற்குள்ளேயும், அவ்விதம் நான்காவது ஜாமத்திலும் முதலிரண்டு நாழிகைக்குள் கண்டால் ஒருமாதத்தின் பிறகும், இரண்டாவது இரண்டு நாழிகையில் கண்டால் பதினைந்து நாட்களுக்குப் பிறகும், மூன்றாமிரண்டு நாழிகையிலாயின் பத்து நாள்களுக்குப் பிறகும், நான்காவது இரண்டு நாழிகைக்குள்ளாயின் அந்த தினத்திலேயும் பயன் காணலாம். இவ்வாறே நல்ல ஸ்வப்னங்களுக்கும் பயன் கண்டுகொள்க. நல்ல ஸ்வப்னங்களாவன: ஈச்வரன் மஹான்கள் முதலியவர்களைக் காணுதல்; தேவாலயம் புண்ணிய தீர்த்தம் கல்யாணம் முதலியவைகளுக்குச் செல்லுதல்; ஜபம் பாராயணம் முதலியவைகளைச் செய்தல்; தானதருமங்களைத் தான் செய்தல் முதலிய ஸ்வப்னங்கள் நல்லவைகள் என்பனவாம். இவைகள் அநேகமாக ஜாக்ரத் காலத்தில் ஈடுபடும் பழக்கங்களாலும் ஏற்படும். அவைகளுக்குப் பயன் யாதுமிராது. தாறுமாறாகவும் ஸூசகமல்லாததுமாகிய ஸ்வப்னத்தைக் கண்டு மூடத்தனத்தால் மயங்குவோர் ஏராளமா யிருக்கின்றனர்.

இனி ஓர் விஷயம் இங்கு அறியத்தக்கது. துஸ்வப்னம் கண்டால் உடனே பெரியோரிடமாவது அப்படிப்பட்டவர்களிராவிடில் புத்திமான்களாகிய சிறியோரிடமாவது சொல்லிவிட்டு பகவந்நாமோச்சாரணத்தைச் செய்தால் துஸ்வப்னத்திற்குப் பயன் ஏற்படாது. நிற்க, இனி மேல்விஷயத்தை நாடுவோம். இப்படிப்பட்ட ப்ராகிருதமாகிய தஹரோபாஸ்தி ராஜயோகத்தைச் செய்யத்தக்க பரிபாகமிராதவர் பிரதீகோபாஸ்தியைச் செய்யலாம். அதாவது,

## ப்ரதீகோபாஸ்தி

உபாஸ்தி மூன்றுவகை யெனவும் அது அஹங்க்ரஹ உபாஸ்தி, ப்ரதீகோபாஸ்தி, அங்காவபத்தோபாஸ்தி எனவும் ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். அவைகளுள் புனராவ்ருத்தி இராததாகிய பயனை அர்ச்சிராதிகதியைத் தந்து ப்ரும்மலோக ப்ராப்திக்கு ஏதுவாக அஹங்க்ரஹோபாஸ்தியாகும். ப்ரதீகோபாஸ்தியைப்பற்றி இனிக்கொஞ்சம் கூறுவாம்.

ப்ரதீகமெனும் சொல்லுக்கு அங்கம் அவயவம் என அர்த்தம். ஈச்வரனுடைய அவயவத்தை உபாஸித்து அவனுடைய அநுக்ரஹத்திற்கு ஆளாதல் பிரதீக உபாஸ்தியின் பயனாகும். ஈச்வரனது அநுக்ரஹத்தினால் ஸகல பாபங்களும் நீங்கி மோக்ஷஹேதுவான ஞானத்திற்கு அந்தரங்க ஸாதனங்களான விவேக வைராக்யாதிகள் ஏற்படும்.

## ஈச்வபரனுக்கு ஆதித்ய மண்டலம் பிரதீகம்

ஸர்வபரிபூர்ணனை இறைவனுக்கு ஆதித்திய மண்டலம், சந்திரமண்டலம், அக்கினி புண்ணியதீர்த்தம் முதலிய புனிதப்பொருள்களும் இவைகளைப்போலவே புனிதங்களாகிய ப்ரணவம் காயத்ரீ பஞ்சதசாக்ஷரீ, பஞ்சாக்ஷரீ முதலிய மஹா மந்திரங்களும் பாவனங்களான அவயவங்களேயாம். அதன் விபரத்தைச் சற்று கூறுவாம்.

ஆதித்திய மண்டலத்தில் பரமாத்மா ஸ்வர்ணசோதி புருஷனாக விளங்குகின்றான் என்று வேதங்கள் முறையிடுகின்றன. ஆதலால் ஆதித்யன் அறிவிராத ஜடவஸ்துவல்ல. அன்றியும் ஸர்வக்ஞனை ஈச்வரன் ஸர்வவியாபகனாக இருப்பவன் என்றதனால் ஆதித்தியாதி முற்கூறிய பொருள்களும் அவ்விறைவனால் வியாபிக்கப்பட்டனவாகவே இருப்பவை என்பது நிர்ணயமாகின்றது. ஆதலால் ஆதித்யாதிகள் ஜடவஸ்துக்கள் எனச் சிலர் எண்ணினாலும் உண்மையில் சேதந வஸ்துக்களே. விராட்ரூபனை பரமாத்மாவின் சுத்தாவயவமாதலால் ஆதித்தியனே விராட்ரூபனெனவும் சொல்லப்படுகின்றது.

உலகில் பிரதியை விரும்பாமல் உபகரிப்பவரை ஈச்வரத்தன்மையை உடையவர் என வழங்குவது பிரஸித்தமாயுளது. ஓர் பிரபு ஓர் பிரதி யுபகாரத்தையும் விரும்பாமல் தான் வஸிக்கும் தேசத்திலுள்ள ஸகல ஜீவப்ராணிகளுக்கும் ஆகாராதிகளால் உபகரிப்பானுயின் அவனை ஈச்வரனுக்கு ஸமானமாகச் சொல்லுவார்கள்.

“𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑌨𑍁𑌦𑍍𑌦𑌿𑌶𑍍𑌯 𑌨 𑌮𑌨𑍍𑌦𑍋𑌽𑌪𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇”

“ப்ரயோஜனத்தை உத்தேசிக்காமல் ஓர் மூடனும் கார்யத்தைச் செய்யான்” என உலகமொழி. சூரியன் செய்யும் உபகாரத்தை இனிக் கவனிப்போம். உலகிலுள்ள ஸகல ஜீவாத்மாக்களுக்கும் ஸகல கார்யங்களும் பிரகாசமின்றி நடைபெருது. வெளிச்சம் சிறிதுமிராத இருளே ஸதா அடர்ந்துள்ள வீட்டில் ஓர் பிரகாசமுமின்றி குடித்தனம் நடைபெருதல்லவா? அவ்வாறே உலகம் முழுதுக்கும் பொதுவாக ப்ரகாசத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கும் ஆதித்தியனிராவிடில் உலகில் ஜீவான்மாக்களுக்கு அதனிலும் மனிதர் முதலியவர்களுக்கு எக்கார்யமும் நடைபெருதன்றே. இவ்விதம் மஹோபகாரத்தை உலகத்தோருக்குச் செய்யும் ஆதித்தியனுக்கு உலகத்திலிருப்பவர் பிரதியுபகாரம் யாது செய்யத்தக்கது? ஒன்றுமில்லை. ஆதித்யனும் இவர்களது பிரதியுபகாரத்தைச் சிறிதும் எதிர்பாராமலே பிரகாசத்தைக் கொடுக்கின்றார்.

ஆதித்யன் உலகத்தாருக்குச் செய்யும் பிரகாசதானத்தில் வித்தியாஸம் வைஷம்யம் பாரபக்ஷம் முதலியவைகள் சிறிதேனுமில்லை. ஆதித்தியனை வணங்குகிறவர்களுக்கு மாத்திரம் ஜாஸ்திப்பிரகாசம் கொடுக்கின்றுனென்பதுண்டா? அல்லது உலகில் பாபம் செய்வோர்களுக்கு ப்ரகாசம் கொடுப்பதில்லை என்பதுண்டா? பசு பக்ஷியாதிகளுக்குள்ள தேஹம் பாபகர்ம பல போகத்திற்காகலாதலால் அப்படிப்பட்ட பாபஜீவர்களுக்குக் கொடுக்கும் பிரகாசமானது சிறந்த ஜன்மமாகிய தேவமனுஷ்யாதிகளா யுள்ளவர்களுக்குக் கொடுக்கப்படுகின்றதைக் காட்டிலும் குறைவாகக் காணப்படுகின்றதா? உலகிலுள்ள ஜீவாத்மாக்களில் புண்ணிய பாபபேதங்களால் எவ்வளவோ பலவகைப்பட்ட தாரதம்மியங்களிருப்பினும் அவைகளைச் சிறிதும் கவனிக்காமல் எல்லா ஜீவர்களுக்கும் ஒரே விதமாய் பிரகாசதானம் செய்யும் பெருமையை நாம் சிறிதேனும் சிந்திக்க இயலுமா? அன்றியும் இப்படிப்பட்ட பிரகாசதானத்தை எத்தனை காலமாகச் செய்துகொண்டிருக்கின்றுன் என்பதையாவது இன்னம் எவ்வளவு காலம் செய்யப்போகிறுன் என்பதையாவது சிந்திக்க இயலுகின்றதில்லை. ஓய் வொழிவின்றி ஸதா

அலுக்காமல் சலிக்காமல் இப்படிப்பட்ட உபகாரத்தைச் செய்துகொண்டிருக்கும் ஆதித்ய மண்டலத்தின் பெருமையை என்ன எனக் கூறுவது?

அன்றியும் ஆதித்யனது கிரணங்களால் ப்ருதிவியிலுள்ள ஜலம் ஆவியாகப் பரிணமிக்கின்றது. பிறகும் ஆதித்திய கிரணங்களே அந்த ஆவியை மேகமண்டலத்தில் ஸ்தாபனம் செய்கின்றன. அவ்வாதித்யனே மேகமண்டலத்தினின்றும் பூமியில் ஜலமாகப் பரிணமிக்கச் செய்கின்றான். அந்த ஜலத்தினாலேயே செடிகொடி வ்ருக்ஷங்களாகிய ஸ்தாவரங்கள் உற்பத்தி யடைகின்றன. நெல் கோதுமை முதலிய தான்யங்களும் காய்கறிகளும் ஆதித்திய கிரணமூலமான மழை பொழிவினாலேயே ஏற்படுகின்றன. அப்படிப்பட்ட தான்யாதிகள் காய்கனிகள் இவைகளின் மூலமாக மனுஷ்யாதி ஜீவர்கள் உண்டாகின்றனர். உண்டாகிய ஜீவான்மாக்களும் அவ்வாஹாரத்தாலே பிராணதாரணமாகிய ஜீவித்திருத்தலைச் செய்கின்றனர். நெல் கோதுமை முதலிய ஆகாரத்தைச் செய்தலால் பிராணிகள் கர்ம உபாஸனாதிகளைச் செய்யும் ஆற்றலாகிய தேகபலத்தைப் பெறுகின்றனர். அந்த பலத்தினாலேயே புண்ணியகர்ம தவங்கள் இயற்றப்படுகின்றன. அப்படிப்பட்ட பலத்தாலேயே பரலோக முளதெனும் ஆஸ்திகபுத்தி யுதிக்கின்றது. அவ்வாஸ்திக புத்தியே ச்ரத்தை எனப்படும். சாஸ்திரார்த்தத்தைச் சித்தத்தில் தரித்தலாகிய மேதை என்பதும் அந்த ச்ரத்தையாலேயே ஏற்படுகின்றது. அதனினின்றும் மனதைக் கண்டபடி விடாமல் அடக்கக்கூடிய மனீஷை உண்டாகின்றது. மனீஷையால் மனஸ் ஜயிக்கப்பட்டு உலகிலுள்ள பற்றை விடுகின்றது. உலகப்பொருள்களில் பற்றைவிட்ட மனமே மோக்ஷசாஸ்திரார்த்தத்தை அறிந்து திடமாகிய விவேகமுடையதாகின்றது. திடவிவேகத்தோடு முயற்சிப்பவர்களுக்கு ஆத்மாகார வ்ருத்தி யுதிக்கின்றது. அப்படிப்பட்ட வ்ருத்தி யுதித்தால் சாந்தி யுதிக்கும். சாந்தியோடு தியானிப்பவருக்கு ஆனந்த ஸ்வரூப பரமாத்மசிந்தனை கைகூடும். அச்சிந்தனையால் ஆத்மாவின் ஆனந்தரூப ஸ்மரணம் ஸதா ஏற்படும். அந்த ஸ்மரணம் திடப்பட்டால் முயற்சிக்கும்போதெல்லாம் ஸமாதிநிலை கைகூடும். அது கைகூடினால் மூலாக் ஞானத்தை ஒழியச் செய்வதாகிய அபரோக்ஷ ஸாக்ஷாத்கார ஞானமுதிக்கும். இவ்விதம் அபரோக்ஷ ஸாக்ஷாத்கார ஞானத்திற்குப் பரம்பரா காரணமாயுள்ள அன்னாதிசுத்த உணவுகளுக்கும் மூலகாரணமாயுள்ள திவ்ய கிரணங்களால் மோக்ஷம் வரையில் ஸித்திக்கச் செய்கின்ற ஆதித்யனது மஹிமையைச் சற்று கவனிப்போமாயின், ஆதித்தியனை ப்ரத்யக்ஷமாயுள்ள ஈச்வர ஸ்வரூபம் என்பதைத் தவிர வேறு யாது சொல்லத்தகும்?

## சந்திரன் அக்நி ஜலம் இவையும் பிரதீகங்கள்

இப்படிப்பட்ட ஆதித்யனைப் பரமேச்வர ஸ்வரூபமாக உபாஸித்து வழிபடுதல் ப்ரதீக உபாஸ்தி என்றறிக. ஆதித்யன்போலவே ப்ரத்யுபகார சிந்தனையின்றி ஸர்வ ஜீவாத்மாக்களுக்கும் பொதுவாகவும் வைஷம்ய பாரபக்ஷமின்றியும் ஓய்வொழிவின்றியும் மிகவும் மஹத்தான உபகாரத்தைச் செய்துகொண்டிருக்கும் தெய்வத்தன்மையானது சந்திரன் அக்கினி, ஜலம் முதலிய பொருள்களிடம் காண்கின்றோம். சந்திரன் செய்யும் உபகாரம் யாதெனின், "தனது கிரணவாயிலாய் பூமியிலுள்ள கறிகாய் நெல் கோதுமை முதலிய உணவுப் பொருள்களில் அம்ருதாம்சத்தைச் செலுத்திக்கொண்டிருக்கும் தேவதை சந்திரன்" என இந்நூலில் ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட அம்ருதாம்சம் நிறைந்த ஸாத்விக உணவினுடைய ஸாரமாகிய அம்சத்தை மூளைக்குச் செல்லச்செய்யும் நாடி சங்கினி என" ஒன்று மனித சரீரத்திலுள்ளதெனவும் ஏற்கெனவே சொல்லப்பட்டிருக்கின்றதை இப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வம்ருதாம்சத்தால் மூளையில் மனம்செய்யும் வேலைகள் ஸகலமும் புண்ணியங்களாகவே ஏற்படும். இந்த உண்மையை அறிந்துகொண்டவர்களுக்குச் சந்திரன் செய்யும் உபகாரத்திற்கு இணையாக மனிதர்களுக்கு யார் உபகாரம் செய்ய இயலும்? எனும் உண்மை இனிது விளங்கும். ஆதலால் சந்திரன் பரமேச்வர ஸ்வரூபம் எனவும் இறைவனது கலையைத் தனது சிரஸில் தரிப்பதிலுள்ள ரஹஸ்யமிதுவே என்பதும் சந்திரகலா உபாஸ்தியைப் பராசக்தியின் உபாஸ்தியே என்பது மறிக.

"ப்ரதிபன்முக்யராகாந்த திதிமண்டலபூஜிதா ।
ஷோடசீ து கலா ஜ்ஞேயா ஸச்சிதாநந்தரூபிணீ"

"அமாவாஸ்யை முதற்கொண்டு பூர்ணிமைமுடிய கலைகள் பதினைந்தே. பதினாறாவது கலையோ எனின் ஸாக்ஷாத் சச்சிதாநந்த ரூபிணியாகிய பராசக்தியே" என்பதாதி ஆகம வாக்கியங்களாலும் இவ் வுண்மை யறியலாம்.

இனி அக்கினி செய்யும் ஜகதுபகாரத்தையும் சற்று கவனிப்போம். உலகில் நாம் அக்கினியிடம் எவ்வாறு வேலைவாங்குகின்றோம் என்பது சாஸ்திரமில்லாமலேயே உலக வியவஹார மாத்திரத்தைக் கவனித்தாலும் நமக்கு இனிது விளங்கும். மனுஷ்யர்களின் ப்ராணதாரணத்திற்கு முக்கிய காரணமாகிய அன்னபானாதிகள் அக்கினி செய்யும் வேலையாலேயே ஸம்பவிக்கின்றன. அவச்யமாகிய அன்னபானாதி

பாகத்திற்குமட்டும் நாம் அக்கினியை வேலைவாங்குகின்றோமென்பதில்லை. அனுவசியமாகிய காபி சுருட்டு குடித்தல் முதலிய விஷயங்களுக்கும் நாம் அக்நி பகவானையே வேலைவாங்குகின்றோம். அவசியமாகிய அன்ன பானுதி பாகவிஷயமாக அக்நியை வேலைவாங்குதலே அபசாரமாகு மெனத் தோன்றுவது உசிதமாயின், அசுசியான பதார்த்தங்களை அக்நியில் போட்டு அநாவச்யமாக தாப்பியாஸத்திஞல் வேலைவாங்குதல் எப்படிப் பட்டதென்பதைச் சற்று யோசிக்கவேண்டும்.

இனிப் பிணத்தை அக்கினியில் தஹனம் செய்தல் அபசார மாகாதோ எனின் இது அறிவிராமற் கூறுதலாம். அதாவது அது அப சாரமாகாம்லிருக்கச் செய்யும் யோக்யதை மந்திரசக்தியினிடம் அமைந் துளது. ஆனதுபற்றியே மந்திரசக்தியோக்யதை பெறுதவர் தஹனம் செய்யக்கூடாது? புதைக்கவேவேண்டும்; என சாஸ்திரம் கூறுகின்றது. அன்றியும் இவ்விஷயத்தைப்பற்றிப் பற்பலவாறு மேன்மேலும் ஆக்ஷே பம் நிகழும். ஆனல் இங்கு யாம் கூறுவதெல்லாம் சாஸ்திரத்தில் நம்பிக்கை யுடையவர்களுக்கேயன்றி யுக்தி விசாரத்தாலேயே ஸகலத் தையும் தீர்மானம் செய்வோர்களுக்கல்ல என்பதை யறியவேண்டும். ஆதலால் மேல் விஷயத்தை நாடுவோம். மனிதர் அவசியமாயுள்ள அந்நபானுதிகளுக்காக உலகில் அக்கினியை வேலைவாங்கவேண்டியிருக் கிறது. இதுமட்டு மென்பதல்ல. நாம் வேலைவாங்காமலேயே நமது ப்ரார்த்தனையின்றியே ஸர்வப்ராணிகளின் தேஹத்திற்குள் ஜடராக்கினி எனும் பெயருடையவராயுள்ள அக்கினிபகவானுடைய வேலையாலேயே புசித்த அன்னபானுதிகள் ஜரித்து பிராணிகள் ஜீவித்திருக்கின்றன. இவ்விதமே ஜலம் முதலிய புனிதப்பொருள் செய்யும் உபகாரமும் என்று அறிக. இவ்வாறு பிரத்யுபகாரத்தைக் கருதாமல் ஜகத்துக்கு சூர்ய சந்திராக்கினியாதிகள் செய்யும் உபகாரத்தைச் சற்று ஆலோசிப்ப வர்களுக்கு அப்பொருள் ஈஸ்வரஸ்வரூபமென்பது விளங்காமலிராது. இப்பொருள்களை ஈச்வரஸ்வரூபமாக அறிந்து உபாஸனை செய்தாலும் ஈச்வரானுக்ரஹத்திற்கு ஆளாகலாம். பாபவினைகளொழியும்.

## மந்த்ரங்களும் பிரதிகங்களே

இனி மற்றுமோர் விஷயம்: ஸர்வ பரிபூர்ணனுன இறைவன் பாவனங்களான மஹா மந்திரங்களிலும் வியாபித்துக்கொண்டிருப்பவன் என்பதில் ஸந்தேஹத்திற்குச் சிறிதுமிடமில்லை. அவரவர் வர்ணுச்ரம விதியை மீறுமல் ஸத்குருவை யடைந்து அவர் மூலமாய் அம்மந்திரங் களை உபதேசம்பெற்று நியமத்தோடு அவைகளை ஜபித்து வழிபடுதலும் பிரதீகோபாஸ்தியே. பிரதீகோபாஸ்திகள் சாந்தோக்யம், ப்ருஹதாரண்

யம், தைத்திரீயம் முதலிய உபநிஷதங்களில் பலவகையாகவும் விஸ்தாரமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை விரிவஞ்சி விடப்படுகின்றன. ஆயினும் இங்கு ஓர் விஷயம் அவசியம் சொல்லவேண்டியதாயுள்ளது. அவ்விஷயத்தை இதற்கு முன்னரும் இந்நூலில் பிரஸ்தாபித்திருக்கிறோம். ஆயினும் முக்கியமான விஷயமாதலால் மீண்டுமிங்கு ஞாபகப்படுத்துகிறோம். தத்தம் வர்ணாச்ரம விதிக்கேற்ப ஸாளக்ராவம் பாண லிங்கம் பிரதிமை முதலியவைகளில் ஈச்வரனை உபாஸித்தலும் பிரதீகோபாஸ்தியேயாம். ஆனால் உபாஸனவிதியிலுள்ள ஓர் வாக்கியத்தை இங்கு ஜாக்ரதையாகக் கவனிக்கத்தக்கது. அதாவது ஸாளக்ராவம் பாண லிங்கம் இவைகளை ஸ்த்ரீ சூத்ரர் தொட்டு உபாஸிக்கக்கூடாது.

ஸ்த்ரீஶூத்ரகர ஸம்ஸ்பர்ஶ: வஜ்ரஸ்பர்ஶாதி கோரத:|

"ஸ்திரீ சூத்ரர்களின் கையின் ஸம்பந்தம் பாணஸாளக்ரவாதிகளுக்கு வஜ்ராயுதத்தினால் அடிப்பதற்கு அதிகமேயாம் என நிர்ணயஸிந்து முதலிய நூல்களில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் பிரதிமாதிகளை ஈச்வரஸ்வரூபமாக உபாஸித்தலில் ஓர் விதமான அனர்த்தமுமில்லை என்றறிக. அதனிலும் குடும்பத்திலுள்ளோர் மூன்று அங்குல உயரத்திற்குமேற்பட்ட அளவுள்ள லிங்கங்களையோ பிரதிமைகளையோ வீட்டில் ஆராதித்தல் கூடாது. சிலர் சாஸ்திரம் இவ்வாறு கூடாதென விலக்குகின்றதாயினும் அதனை லக்ஷியம் செய்யாதவர்களாய்க் கொண்டு லிங்கங்களையோ பிம்பங்களையோ விதிக்கப்பட்ட அளவையை மீறியதாக வைத்துக்கொண்டு பூஜித்து அனர்த்தத்திற் காளாகின்றனர். இவ்விதம் விதிப்படி லிங்கஸாளக்ராவ ப்ரதிமாதிகளின் மூலமாகிய ஈச்வரோபாஸனையையும் செய்ய ஸௌகரியமிராதவர்கள் சிவ விஷ்ணு நாமாக்களை ஸதா உச்சரித்து அதனாலேயே ஸித்தியடையலாம். ஆதலால் தன் பரிபாகத்திற்கேற்ப ஈச்வரோபாஸ்தியில் ஈடுபடுவோர் பாபநீங்கிப் புனித சித்தர்களாய் ஈச்வர கருணைக்கு ஆளாவார்கள்.

## முடிவாகிய உண்மை அத்வைதமே

ஈச்வரனுடைய கருணையின்றி ஜனனமரண ப்ரவாஹத்திலிருந்து கரையேற எவராலுமியலாது. ஈச்வரகருணையின் முடிவாகிய பயன் மோக்ஷமே. அந்த மோக்ஷமும் ஞானமின்றிவாராது. இந்நூலில் கூறிய உஹாரவித்யை யப்பியஸித்தவர் ப்ரும்மலோகமடைந்து அங்கும் ப்ரும்ம ஞானத்தாலேயே முக்தியடையவேண்டும். காசிமரணாதிகளாலும், ஞானம் வாராமல் முக்தியடைய இயலாது. ஸத்குரு உபதேசிக்கும் ஞானத்தை காசியில் மரிப்பவருக்கு அக்காலத்தில் ருத்ரமூர்த்தியே நேரில் வந்து

தாரகமாகிய ப்ரணவமூலமாக உபதேசித்தருளுகிறார் என்பதே சாஸ்திரங்களினுண்மை. அப்படிப்பட்ட முடிவாகிய ப்ரும்ம ஞானத்திற்கு ஏதுவாகிய வேதாந்த தத்வத்தையும் இங்கு விபரமாகக் கூறிவிட்டால் இந்நூல் பூர்த்தியானதெனலாம். ஆதலால் இனி அவ்விஷயத்தையும் இங்கு கூறுவாம். ப்ரும்மஞானம் என்பது ஜீவாத்ம வஸ்துவின் உண்மைஸ்வரூபமே. அதனை உபநிஷதம் பலவாறாக நியாயங்களேயும் அனுபவங்களேயும் எடுத்துக்காட்டி உபதேசிக்கின்றது.

உண்மை நிலேயில் கயிற்றில் அரவம் ஸ்வப்ன உலகம் முதலியவைபோல ஆத்ம வஸ்துவுக்கு அந்நியமாயுள்ள ஸகலமும் அந்த ஆத்மஸ்வரூபத்தில் கல்பிதப்பொருள்களே. இந்திர ஜாலக்காரனிடமுள்ள இந்திர ஜாலசக்தியானது எப்படி இந்திரஜால ஸ்ருஷ்டியைச் செய்கின்றதோ, அப்படியே ப்ரும்மத்தினிடமுள்ள ஜகத்ஸ்ருஷ்டி சக்தியே ஸகல சராசரங்களேயும் உண்டாக்குகின்றது. ஓர் சங்கை இந்திர ஜாலத்தினுல் ஸ்ருஷ்டிக்கப்படும் பொருள்கள் பொய்யே ஆயினும் அவ்விந்திரஜால ஸ்ருஷ்டியும் அப்படி ஸ்ருஷ்டிக்கும் சக்தியும் ஸத்தியமாகவே இருப்பதுபோல ஸகல சராசரங்களும் பொய்யேயாயினும் அவைகளே ஸ்ருஷ்டி செய்கிற ப்ரும்மத்தின் சக்தியும் அதனுலாகும் ப்ரபஞ்சஸ்ருஷ்டியும் ஸத்தியம் என ஏற்படுமே? அப்படியானுல் ப்ரும்மம் ஒன்றே ஸத்தியம் எனும் வசனத்தினுல் போதிக்கப்படுவதான அத்வைதம் கெடுமே? எனும் ஆக்ஷேபம் தோன்றும். த்ருஷ்டாந்தத்தை நன்றாய் ஆராய்ச்சி செய்தால் இவ்வாக்ஷேபத்திற்குச் சிறிது மிடமிராது. அதாவது தேவதத்தன் எனும் பெயரிய ஒருவன் இந்திர ஜாலக்காரன் என வைத்துக்கொள்வோம். தேவதத்தன் எனும் சொல்லுக்கு அர்த்தமாயுள்ளது அவனது தேஹமே யன்றி அவனிடம் இருக்கும் இந்திரஜால சக்தியாவது அதனுல் ஸ்ருஷ்டிக்கப்படும்பொருளாவது அர்த்தமல்ல. எப்படி எனின் தேவதத்தன் என அவனுக்குப் பெயரிடும்போது அவனது தேஹமாத்திரத்திற்கு இட்ட பெயரேயன்றி இந்திரஜால சக்திக்கும் சேர்த்து இடப்பட்ட பெயரல்ல. பெயரிடப்பட்ட பிறகு அந்த தேஹ ஜீவனிடம் இந்திரஜால சக்தி ஸம்பாதிக்கப்பட்டுளது. மரித்த பிறகும் தேவதத்த தேஹத்திற்கு தஹனக்கிரியையேயன்றி இந்திரஜால சக்திக்கு தஹனமில்லே. ஆதலால் தேவதத்தன் எனும் பெயருக்கு இந்திர ஜாலக்காரனது தேஹம் மாத்திரம் அர்த்தமென்பதே உண்மை. ஆதலால் தேவதத்த சப்தத்தின் அர்த்தத்தினிடம் இந்திரஜால சக்தியும் அவன் செய்யும் ஸ்ருஷ்டியும் உண்மையாகாமல் கல்பிதமேயாவதுபோல ப்ரும்மத்தினிடம் ஜகத் ஸ்ருஷ்டி சக்தியும் ஜகத்தும் கல்பிதமேயாம் என்பதறிக.

இவ்வாறு உண்மையற்றதாய் கல்பிதமாயுள்ள ஜகத்ஸ்ருஷ்டி சக்தியையும் ப்ரும்மத்தினிடம் சேர்த்து வியவஹரிக்கும்போது வேதங்கள் அவனுக்குப் பரமாத்மா எனவும் ஈச்வரனெனவும் பெயரிட்டு வழங்குகின்றன. ஒருவனுகப் பிறந்தவனுக்கு அண்ணன் எனும் பெயருக்கிடமில்லை. தம்பி, அல்லது தங்கை பிறந்தால் அண்ணன் எனும் பெயரேற்படும். அதுபோல ஜகத்ஸ்ருஷ்டி சக்தியையும் ஜகத்தையும் ஜீவாத்மாக்களையும் நோக்க ஏகமாகிய ப்ரும்மத்திற்கு ஈச்வரனெனவும் பரமாத்மா எனவும் பெயர் வழங்கப்படுகின்றது. ஆதலால் ஜகத்கர்த்தா, ஈச்வரன், பரமாத்மா என்பது முதலிய பெயர்கள் ஸகலமும் கற்பிதமாயுள்ள மாயாசக்தியோடு கூடிய (அதாவது மாயா விசிஷ்டனெனும்) ஸகுண ப்ரும்மத்தின் பெயரேயாகும். அந்த ஸகுண ப்ரும்மத்தின் உபாஸ்தியே இதுகாறும் இந்நூலில் கூறப்பட்டது. தவிரவும் அந்தர்யாமி, கர்மபலதாதா, கர்மஸாக்ஷி, சிவன், நாராயணன் முதலிய பெயர்கள் ஸகலமும் மாயாசக்தி விசிஷ்ட ப்ரும்மமாகிய இந்த ஸகுணத்தையே ஸாக்ஷாத்தாக அர்த்தமாய்க் கொண்டவை என்றறிக.

## மாயாவிசிஷ்டம் ஸகுணம் என்பதாம்

மாயாசக்தி விசிஷ்டமான ப்ரும்மம் எனும் ஸகுண வஸ்துவின்றி நேரில் நிர்க்குணமாகிய அதாவது மாயாசக்திக்கு அதீதமான அத்வைதப் பொருளை அறிந்துகொள்ள எவராலும் முடியாது. ஆதலால் மாயாசக்தி விசிஷ்ட பரமாத்மாவைக் காட்டியே கேவல அத்வைத வஸ்துவை ச்ருதி உபதேசிக்கின்றது. இங்கு ஓர் த்ருஷ்டாந்தம் கவனிக்கத்தக்கது.

மந்தமான இருளில் சிலர் வழிநடந்துகொண் டிருக்கிறார்கள். அவர்களுள் ஒருவர் நீங்கலாக மற்றவர்க ளெல்லோரும் வழியில் கிடக்கும் கயிற்றைக்கண்டு ஸர்ப்பமென மயங்கிப் பயமடைகின்றனர். அப்படி மயங்குவோர்களை நோக்கி ஸர்ப்பமென மயங்காமல் கயிறே எனக் கண்டுகொண்டுள்ள ஒருவர் ஓ மயக்க அறிவு கொண்டவர்களே! உங்களுக்குத் தோன்றுகின்ற பொய் ஸர்ப்ப மிந்தக் கயிற்றினிடம் கற்பிதப் பொருளேயாதலால் இது ஸர்ப்பத்திற்கு அதிஷ்டானமே யன்றி ஸர்ப்பமல்ல, என உபதேசிப்பதுபோல், ச்ருதிபகவதி யானவள் "ஓ மாந்தர்காள்! மாயா சக்தி விலாஸமாகிய பொய்ப் பொருளான பிரபஞ்சத்தை ஸத்தியமென்று எண்ணுதீர்கள். ப்ரும்மமொன்றே ஸத்தியம். அந்த ப்ரும்மமே உங்களுக்குத் தோன்றும் ஜகத்திற்கு அதிஷ்டான வஸ்து" என ஜீவாத்மாக்களால் ஆரோபிதமான ஜகத்தை அபவாதம் செய்து கல்பித ப்ரபஞ்சத்திற்கு அதிஷ்டான வஸ்து அத்வைதப்பொருள் என உபதேசிக்கின்றனள். உண்மை நிலையை நோக்கின் ஜகத்தே பொய்யாய்ப்

போகும்போது அத்வைதப் பிரும்மம் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமு மல்ல. மாயா சக்தியும் உண்மை நிலையில் அந்த ப்ரும்மத்தினிடம் ஸத்தியமாயுள்ளதல்ல என வேதாந்த வாக்கியங்கள் கூறுகின்றதிலுள்ள கருத்திதுவேயாம். ஆதலால் மாயா சக்திக்கும் ப்ரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமாயுள்ள ஸாக்ஷியாத்மாவையே பரம்பொருள், ஸத்ரூபம், சித்ரூபம், ஆனந்தரூபம் என சாஸ்திரம் கூறுகின்றது.

## ப்ரும்ம லக்ஷணவாக்கியத்தின் அர்த்தம்

தைத்திரீய உபநிஷதத்தில் "ப்ரும்மமானது ஸத்யம் ஞானம் அநந்தம்" என மூன்று சொற்களே கூறப்பட்டிருக்கின்றன. ஆத்மா எனவும் ஆனந்தமெனவும் இரண்டு சொற்கள் கூறப்படவில்லை யாயினும் அங்குள்ள ப்ரும்மம் எனும் சொல்லினர்த்தத்திலேயே ஆத்மா ஆனந்த மென்பதும் லக்ஷ்யார்த்தமாய் அடங்கியுள்ளது என்பதாம்.

இங்கு ஓர் சங்கை யுதிக்கலாம். அதாவது ஸத்தியம் ஞானம் அனந்தம் எனும் மூன்று சொற்களுக்கும் அர்த்தமாயுள்ள பொருள் ஒன்றேயா? அல்லது வெவ்வேறு பொருள்களா? ஒன்றே எனின் ஓர் சொல்லே போதுமானதா யிருக்க வீணில் புநருக்தியாக மூன்று சொற்களைச் கூறியதில் பயனில்லையே எனும் சங்கையாம். இனி மூன்று சொற்களுக்கும் அர்த்தமாகிய பொருள் வெவ்வேறு எனின் ஏகம் ப்ரும்மம் எனும் அத்வைதத்திற்கு ஹாநியே எற்படும்; எனும் சங்கையும் உதிக்கலாம். இனி இவ்வுண்மை இந்நூலில் முன்னரே கூறப்பட்ட தாயினும் இங்கும் ஸங்க்ரஹமாகக் கூறுவாம்.

அதாவது இங்குள்ள ப்ரும்ம லக்ஷணச் சொற்களாகிய ஸத்தியம் ஞானம் அனந்தம் எனும் மூன்றுக்கும் அர்த்தவஸ்து வெவ்வேறல்ல. மூன்றுக்கும் அர்த்தமாயுள்ளது ஒரே வஸ்துவாம். ஆனால் ஒரே வஸ்து மூன்று சொற்களால் எதற்காகக் கூறவேண்டு மெனின் அவ்வுண்மை யிதுவேயாம். அதாவது ஸத்தியமென்பது வியாவஹாரிகம் ப்ராதி பாஸிகம், பாரமார்த்திகம் என மூன்று விதமாயுள்ளது. மாயா சக்தி முதற்கொண்டுள்ள ஸகல சராசரங்களும் வியாவஹாரிகமான ஸத்தியப் பொருள் என்றும், ஸ்வப்ன உலகு கயிற்றரவம் கானனீர் இந்திர ஜாலப் பொருள் முதலியவை ப்ராதிபாஸிக ஸத்தியமென்றும் அறிக. வ்யாவ ஹாரிக ஸத்தியமெனின் உலக வியவஹாரத்தில் மூழ்கியவர்களுக்கு ஸத்தியமாயுள்ளது எனவும், பிராதிபாஸிகம் என்பதற்கு பிரதிபாஸ மாகிய தோற்றகாலம் மாத்திரம் ஸத்தியம்; சற்றுநேரத்திற்கு முன்னும் பின்னும் பொய்யாயுள்ள தாதலால் பிராதிபாஸிக ஸத்திய மென்பதாம்.

இங்கு ப்ரகிருதத்தைக் கவனிப்பாம். "ப்ரும்மம் என்பது ஞானம் அனந்தம்" எனும் இரண்டு சொற்களை மாத்திரம் கூறி ஸத்தியம் என்னும் சொல்லைக் கூருதிருப்பின் ப்ரும்மம் மாயாசக்தி போலவும் ஆகாசாதி ப்ரபஞ்சம் போன்றதுமாயுள்ள தெனத் தோன்றக்கூடும். அச்சங்கை யொழிவதற்காக ப்ரும்மம் ப்ரபஞ்சம் போன்ற வியாவஹாரிக ஸத்தியமல்ல. காலத்ரயத்திலும் மாருத பரமார்த்த ஸத்தியப் பொருளே எனும் உண்மையை நாம் அறிந்துகொள்வதற்காக ஸத்தியம் எனும் சொல் உதஹரிக்கப்பட்டுளது. ஆதலால் ஸத்தியமெனும் சொல்லுக்குப் பரமார்த்த ஸத்தியம் என்பது அர்த்தமாதலால் அந்தச் சொல்லால் வ்யாவஹாரிக பிராதிபாஸிக ஸத்தியம் பொருள்கள் விலக்கப்பட்டன என்றறிக.

அந்த:கரண வ்ருத்திகளும் ஞானமென வழங்கப்படு மாதலால் அதனை விலக்குவதற்காக இங்கு ப்ரும்மம் ஸத்தியம் என மாத்திரம் கூறி நின்றுவிடாமல் ஞானம் எனவும் கூறப்பட்டது. காலவரைக்கும் தேச வரைக்கும் அதீதமானது ஆகாசம் என சாஸ்திரம் கற்றவர் எண்ணக்கூடும். அதனை விலக்குவதற்காக அனந்தமெனக் கூறப்பட்டது. ஸத்தியம் ஞானம் அனந்தம் எனும் ஒவ்வொரு சொல்லும் தனித்தனியாக ப்ரும்மத்தைப் போதிக்காது. மூன்றும் சேர்ந்தே ஒரே லக்ஷணத்தைப் போதிக்கும்.

இங்கிது வறிக: ஸத்தியம் ஞானம் எனும் இவ்விரு சொல்லும் லக்ஷ்யமாயுள்ள ப்ரும்மத்தில் ஸத்தியத்துவத்தையும் ஞானத்வத்தையும் ஸாக்ஷாத்தாகச் சொல்லி அதாவது முன்னருணர்த்திப் பிறகு அஸத்ஜடம் எனும் இருவிதத் தன்மையின் வியாவிருத்தியைப் போதிக்கும். அனந்தமெனும் சொல்லானது பரிச்சின்னத் தன்மையின் வியாவ்ருத்தியை முன்னர் போதித்துப் பிறகு லக்ஷ்யவஸ்துவைக் காட்டுமென ஸுரேச்வராசார்யர் கூறியுள்ளார்.

## இதரவ்யா வ்ருத்தியால் நிகழுவனவாகிய அபாவங்கள் அத்வைதத்திற்கு ஹானியை உண்டாக்குவனவல்ல.

இங்கு மற்றுமோர் சங்கை யேற்படலாம். ப்ரும்மம் சச்சிதாநந்தப் பொருள் என்பதை ஒத்துக்கொள்வோம். அதனிடம் முற்கூறிய நியாயத்தினுல் அஸத்ஜட அனந்தப் பொருள்களின் வியாவ்ருத்தியாகிய மூன்று அபாவங்களும் உள்ளன என ஏற்படுமாதலின் அத்வைதத்திற்கு ஹானி ஏற்படுமே எனும் சங்கையாம். இனி இதன் ஸமாதானத்தைக் கூறுவாம். அதாவது இதரப் பொருள்களின் வியாவ்ருத்தி

ரூபஅபாவங்கள் ப்ரும்மத்தினிடம் உள்ளனவாயினும், அவை ப்ரும்மத்திற்கு அந்நியங்களாயுள்ள வேறு பதார்த்தங்களல்ல. அபாவமென்பது இருக்குமிடமாகிய அதிஷ்டானப் பொருளுக்கு அந்நியங்களல்ல என்பதே நிர்ணயம். ஆதலால் பாவவஸ்துவாகிய ப்ரும்மத்தினிடம் இதரப் பொருள்களின் அபாவங்கள் கோடிக்கணக்காக ஏற்படினும் அத்வைதமாகிய ப்ரும்ம ஸ்வரூபத்தில் ஓர் விசேஷத்தையும் உண்டுபண்ண இயலாது.

சில நூற்றுண்டுகளுக்கு முன் ந்ருஸிம்மாச்ரம ஸ்வாமிகள் என ஓர் மஹான் இருந்தார். அவர் மிகவும் அருமையான அத்வைத நூல் ஒன்று எழுதியுள்ளார். அதனில் இதே விஷயம் சொல்லப்பட்டுளது.

𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌭𑌾𑌵𑌾𑌨𑌾𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌪𑌿 𑌯𑌥𑍇𑌷𑍍𑌟𑌂
𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑌾𑌂 । 𑌭𑌾𑌵𑌰𑍂𑌪𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑍈𑌤𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌯 𑌨𑍈𑌤𑍇
𑌨𑌕𑌾𑌪𑌿𑌹𑌾𑌨𑌿𑌃 ॥

"இந்த ப்ரும்மாத்ம ஸ்வரூபத்தில் அபாவங்கள் ஸஹஸ்ரமாயினும் யதேஷ்டம் இருக்கட்டும். பாவரூபமான அத்வைத தத்வத்திற்கு அவை ஹானியொன்றையும் செய்ய இயலாது" எனக் கூறியுள்ளார். ஆதலால் ஸத்சித் ஆனந்தம் எனும் சொற்கள் மற்ற வஸ்துக்களை வ்யாவ்ருத்தி செய்தலால் ப்ரும்ம லக்ஷணத்திற்கு ஹானி ஏற்படும் எனும் சங்கை முற்றும் தவறேயாம். இனி ப்ரகிருதத்தை நாடுவாம்.

## பஞ்சபூத ஸ்ருஷ்டி

ஸத்திய ஞானாநந்தமான ப்ரும்மரூபனுன ஆத்மாவினிடமிருந்து சப்தமெனும் ஓர் குணத்தையுடைய ஆகாசம் உண்டாச்சுது. ஆகாசத்தினின்றும் சப்தம் ஸ்பர்சமெனும் இருகுணங்களை யுடையதாகிய வாயு உண்டாகியது. அவ்வாயுவினின்றும் சப்தம் ஸ்பர்சம் ரூபம் எனும் முக்குணங்களோடு கூடியதாகிய அக்கினி உண்டாச்சுது. அதனினின்றும் சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் எனும் நான்கு குணங்களை யுடையதாகிய அப்பு எனும் ஜலம் உண்டாகியது. பிறகு அதனினின்றும் கந்தம் அதாவது மணம் எனும் குணமும் முற்கூறிய நான்கு குணங்களையு முடையதாகிய ப்ருதிவி உண்டாகியது.

## ஆத்மாவுக்கு ஸச்சிதானந்தம் குணமல்ல. ஸ்வரூபமே.

ஆகாசத்தினின்றும் உண்டாகிய வாயுவில் காரணமான ஆகாசத்தின் குணமாகிய சப்தமும் தன் சொந்த குணமான ஸ்பரிசமும் ஆக இரண்டு குணங்களாம். இவ்வாறே ஒவ்வொரு பூதத்திலும் காரண

குணம் தன்குணம் எனும் இருவகையாக குணங்கள் ஏற்பட்டிருக்கின் றன. ஆகாசாதி காரணத்தின் குணம் வாயுவாதிகார்ய வஸ்துக்களில் உள்ளதுபோல ஸர்வகாரணமான ப்ரும்மத்தின் குணங்களாகிய ஸச்சிதா நந்தங்கள் ஆகாசாதி ப்ரபஞ்சங்களி லிருக்கின்றன எனச் சொல்லக் கூடாதோ எனின் இது அவிவேகமே. ஏனெனின் ஆகாசாதி பூதங் களுக்கு சப்தாதிகள் குணங்களா யிருப்பதுபோல ஆத்மாவாகிய ப்ரும்மத் திற்கு ஸத்தியம் ஞானம் ஆனந்தம் என்பவை குணங்களல்ல. ஆத்ம ஸ்வ ரூபமே ஸச்சிதாநந்தமென்பதே அறிந்துகொள்ளவேண்டிய உண்மை.

## பரம்பொருள் ஜகத்திற்கு விவர்த்த காரணமே.

தவிரவும் காரணமானது பரிணாமி காரணம் விவர்த்த காரணம் என இருவகைப்படும். ஆகாசாதிகள் வாயுவாதிகளுக்குப் பரிணாமி கார ணம். பரிணாமிகாரண குணங்களே காரியத்தி லிருக்குமன்றி விவர்த்த காரணகுணங்கள் கார்யவஸ்துக்களை யடையா. விவர்த்த காரணத்திற்கு த்ருஷ்டாந்தம்: கயிற்றரவம் முதலிய பொருள்களுக்குக் கயிறு முத லியவைபோன்ற காரணங்களே விவர்த்த காரணங்களென்பவையாம். விவர்த்த காரணத்தின் குணம் ஒருபோதும் அதன் காரியத்திலிராது. கயிற்றின் குணம் அதனில் கற்பிதமாயுள்ள ஸர்ப்பத்திலிராததுபோலவே இங்கு மறிக. ஆகாசாதிப் பிரபஞ்சப் பொருள்களுக்கு ப்ரும்மம் காரண மென்பதானது. விவர்த்த காரணமெனும் அர்த்தத்திலேயே உதஹரிக் கப்பட்டதன்றி பரிணாமி காரணமெனும் கருத்திலல்ல. இங்கு இவ்விரு விஷயங்க ளறியவேண்டும். பரமாத்மா ஞானந்த ஸ்வரூபனேயன்றி அவ்விரு குணங்களோடு கூடியவனல்ல என்பது ஒன்று. மற்றொன்று பரமாத்மா ஆகாசாதி ஜகங்களுக்கு, கல்பித ஸர்ப்பத்திற்கு கயிறுபோல விவர்த்த காரணமேயன்றி குடாதிகளுக்கு மண்போல பரிணாமி காரண மல்ல என்பது மற்றொன்று. இவ்விரு விஷயங்களையும் அறிந்துகொண் டால் எவ்வித சங்கைக்கு மிடமிராது.

## ஜகத் ஸ்ருஷ்டி

இனி ஸ்ருஷ்டியைச் சொல்லுவாம். ப்ருதிவியினின்றும் பலவகை ஒஷதிகள் உண்டாயின. ஒஷதிகளெனும் செடி கொடிகளினின்றும் நெல்கோதுமை கறிகாய்கள் உண்டாயின. அதனைப் புசித்தலின் மூல மாக ஸ்திரீ புருஷர்கள் உண்டாயினர். அவர்களிடம் வீர்யமுண்டாகி யது. ஆகவே இந்த மனிதசரீரம் அன்னரஸமயம் என்பதாம். பசு பக்ஷியாதிகளும் அவ்வாறே உண்டாயிருப்பினும் மனிதசரீரம் சிறந்தது பற்றி உபநிஷத் இங்கு மனித சரீரத்தையே கூறியது.

ஆகவே இப்போது ப்ரும்மமாகிய பரம்பொருள் எந்த ஸ்திதியி
லுள்ளது என்பதைச் சற்று கவனித்தால் பூர்வம் பிரபஞ்சமிராமல்தான்
மாத்திரமாயிருந்த ஆத்மாவானது பிறகு பிரபஞ்ச முண்டானமையால்
ஆகாசவாயுவாதிகள் முதற்கொண்டு மநுஷ்ய பசு பக்ஷியாதி ஈறாகிய ஸகல
சராசரங்களோடும் கூடியதாயுளது. ஆயினும் மனிதசரீரம் சிறந்ததென்
பது, மனித சரீரத்துள்ளிருக்கும் ஜீவாத்மாவே பரமாத்மாவை அறிந்து
கொள்ளக்கூடிய தன்மை வாய்ந்தது என்பது கொண்டே.

மனித சரீரத்தில் எப்படிக் கண்டுகொள்வதெனின் இதனில்
ஐந்து கோசங்களுள்ளன. அவையாவன : அன்னமயம் பிராணமயம்
மனோமயம் விக்ஞானமயம் ஆனந்தமயம் என்பவையாம். இதற்கு மூற்
றும் ஸரியாகாவிடினும் ஏகதேச உவமையொன்று கூறலாம். ஓர்
கத்தியை அதன் உறையாகிய கூடு மறைத்துக்கொண்டிருப்பதுபோல
இங்கு கூறிய ஐந்து கோசங்கள் ஆத்மபரம்பொருளை நன்கு மூடிக்கொண்டு
இவைகளே முன்னிருந்து தோன்றிக்கொண்டு பரம்பொருளை அறிய
விடாமல் செய்துகொண்டிருக்கின்றன. இவ்வைந்து கோசங்களையும்
அறிவினால் ஆத்மாவல்ல என விலக்கி இவைகளைவிட்டு தள்ளிப்பார்த்
தால் ஆத்ம ஸ்வரூபம் விளங்கும். இப்படிப்பட்ட ஏகதேச உவமை
யைக்கொண்டே பஞ்சகோசங்கள் எனச் சொல்லப்படுகின்றன.

## பஞ்ச கோசங்களில் அன்னமய கோசம்

இந்தப் பஞ்சகோசங்களை ஸ்தூல ஸூக்ஷ்மகாரண சரீரங்களென
வறிக. இந்திரியங்களால் கண்டுகொள்ளக் கூடியனவும் கத்தி கண்ணாடி
முதலிய கருவி கரணங்களினால் பரிசோதித்தறியக் கூடியனவுமாயுள்ள
தோல் சதை மாம்ஸம் ரக்தம் நரம்பு எலும்பு முதலியவைகளின் சேர்க்
கையாகிய இந்த ஸ்தூலதேஹமே அன்னமயகோச மெனப்படும். பிதா
புசித்த அன்னஸாரமாகிய சுக்லமே அன்னையின்தேக ஸாரமாகிய சோணி
தத்தோடு கலந்து தோன்றிய திதுவே. ஆதலால் இது அன்னரஸமயம்
எனப்படுகின்றது. அன்னமய கோசமாயுள்ள இச்சடலத்தை ஓர் பக்ஷி
போல உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. பக்ஷிக்கு ரக்கை முதலிய
அவயவங்கள்போல இச்சரீரத்தில் அவயவங்களைக் கற்பனையாக ச்ருதி
கூறுகின்றது. அதாவது மனிதசரீரத்தில் தலை, இரு கைப்பக்கங்கள்,
வயிறு, கால், இவைகள் இவ்வன்னமய கோசத்தின் அவயவங்களாம்.
இங்கு கால்களைப் புச்சம் (வால்) எனக் கூறப்பட்டது. இரண்டு பாதங்
களும் பக்ஷிக்குப் புச்சம்போல நீண்டிருத்தலால் புச்சமெனக் கூறப்பட்
டது. இது கறிகாய் நெல் கோதுமை முதலிய அன்னங்களை நாம் புசிப்
பதுபோல இவ்வன்னமயச் சடலத்தைவிட்டுச் ஜீவாத்மா வெளிப்பட்டு

விட்டால் க்ருமி கீடம் கழுகு காகம் பருந்து நாய் நரி புலி முதலிய ஜந்துக்கள் இதனை வெகு ஆவலோடு புசிக்கும். ஆதலால் இதனை ஸர்வௌஷதி வடிவமான அன்னமெனப்படுகின்றது. ஸகல சரீரங்களும் நாச ஸமயத்தில் ப்ருதிவியோடு சேர்ந்துபோகும். அந்தச் சரீரம் மடிந்து மண்ணாகிய அம்சத்தினின்றுமே காய்கறி தான்யவகைகள் தோன்றும் அவைகளே மீண்டும் மனிதர் முதலியவர்களுக்கே ஆகாரமாகும். ஆதலால் இதனை ஸகல ப்ராணிகளுக்கும் மிகவும் முக்கியமானது (ஜ்யேஷ்டம்) எனச் சுருதி கூறுகின்றது. அவ்வாறே ஸர்வாஹாரமாதலால் ஸர்வௌஷதமெனவும் சொல்லப்படுகின்றது. இச்சரீரம் பிராணிகளுக்கு அன்னம் என்பதை நன்ருய் நிச்சயித்து கொள்ளவேண்டும். இவ்வாறு இந்த தேஹம் ஸகல ப்ராணிகளின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்கு ஹேதுவாக இருத்தலால் இந்த குண ஸாம்யத்தைக்கொண்டு இதனை ப்ரும்ம ஸ்வரூபமாக உபாஸிப்பவன் மனத்திற்கு ருசிகரமான சிறந்த அன்னுஹார ப்ராப்தியாகிய பலம் கிடைக்கப்பெற்றவனுவன். இது ஆத்மாவல்ல. அன்னமயகோசம் ஜடமாதலால் அனுத்மவஸ்துவே என்றறிக.

அன்னமய கோசமாகிய இந்த ஸ்தூல சரீரத்திற்குள் ஸூக்ஷ்ம சரீரம் என வேறொன்றுளது. அதனில் பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம் என மூன்று கோசங்கள் அடங்கியிருக்கின்றன. அன்னமய கோசமாகிய ஸ்தூலசரீரம் சேஷ்டித்தலுக்குக்காரணம் இதற்குள் ஸூக்ஷ்ம சரீர மிருத்தலாலேயாம்.

இந்த ஸ்தூல சரீரத்தினில் நடைபெறும் சேஷ்டையானது மூன்றுவிதமாயுள்ளது. ஸ்தூல சரீராவயவங்களாகிய தலை கை கால் முதலிய அவயவங்களின் சலனுதிக்கிரியை ஒன்று, இதைச் செய்வோமா? அதைச் செய்வோமா? என்பது முதலிய ஸங்கற்பங்களாகிய எண்ணமொன்று, இதுவே உண்மை, இதுவே நல்லது, இது கூடாது, வஸ்துக்கள் இத்தனைவகை, நாம் செய்யக்கூடிய செயல்கள் இத்தனை வகை, இவை நமக்கு ஹிதம், இவை நமக்கு அஹிதம்; இவைகளைச் செய்தால் மீண்டும் பிறவிகளுக்குட்படவேண்டிவரும், இவைகளைச் செய்தால் பிறவி நீங்கப்பெறலாம், என்பது முதலிய நிச்சயமாகிய ஞானமொன்று. ஆக மூன்று விதங்களான வேலைகள் இந்த ஸ்தூல சரீரத்தில் நடைபெறக் காண்கின்ருேம்.

இவைகளுள் கை கால் முதலியவைகளின் சலனுதிகள் பிராணமய கோசத்தின் வேலை. உண்மையறியாமலும் ஹிதாஹிதம் அறியாமலும் உள்ள ஸங்கற்ப விகற்பாதி எண்ணங்கள் மனோமய கோசத்தின்

வேலை. நிச்சயஞானம் விக்ஞானமய கோசத்தின் வேலை என்பது அறிக. பிராணமய கோசத்தில் கிரியா சக்தியும் மனோமய கோசத்தில் இச்சா சக்தியும் விக்ஞானமய கோசத்தில் ஞானசக்தியும் கண்டுகொள்ளத்தகும்.

ஸூக்ஷ்ம சரீரத்தில் அடங்கிய அவயவங்கள் கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, பிராணாபான வியானோதான ஸமானன்கள் எனும் பிராணபேதங்கள் ஐந்து, மனம், புத்தி ஆகிய இப்பதினேழும் ஸூக்ஷ்ம பதார்த்தங்களே.

இவைகளுள் கர்மேந்திரியங்களைந்தும் பிராணாதி பஞ்சகமும் சேர்ந்து பிராணமயகோசம் எனப்படும்; ஞானேந்திரியங்களைந்தும் மனமும் சேர்ந்து மனோமய கோச மெனப்படும். ஞானேந்திரியங்களைந்தும் நிச்சயஞான வடிவமாகிய புத்தி எனப்படும் விக்ஞானமும் சேர்ந்து விக்ஞானமய கோசம் எனப்படும்.

## ப்ராண மய கோசம்

இவைகளுள் பிராணமய கோசமாவது : பிராணமய கோசத்திற்குமைந்து அவயவங்களுள்ளன. கண்டத்திற்குக் கீழ் ஹ்ருதயம் வரையிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் பிராணவாயுவே சிரஸ் எனும் அவயவம். வியானன் எனும் வாயு வலதுபார்ச்வமெனும் தக்ஷிண ரக்கையாம். நாபிக்குக் கீழுள்ள அபானவாயு உத்தரபக்ஷமாம். ஸமான வாயு ப்ராணமயகோசமெனும் பக்ஷிக்கு வயிறு. உதானவாயு புச்சமாகிய ஆதாரமாம். உதானவாயுவோடு கூடியே ஸகலமும் தேஹத்தைவிட்டு வெளிக்கிளம்புமாதலின் உதானவாயுவை புச்சமாகிய ஆதாரமெனச் சொல்லப்பட்டது. ஸகல அன்னமயகோசமாகிய ஸமஷ்டித்யானத்தினால், விரும்பிய அன்னபானதிலாபம் பயனுவதுபோல, ஸமஷ்டி ப்ராணமயகோசத் தியானத்தினால் எற்படும் பயன் தீர்க்காயுளின் ப்ராப்தியாகும். பிராணமயகோசம் ஸர்வ ஜீவர்களுக்கும் ஆயுஸ்வடிவம். பிராணமயகோசம் முற்கூறிய அன்னமயகோசம் முழுவதும் வியாபித்துள்ளதாம்.

## மனோமய கோசம்

பிராணமய கோசத்திற்கும் அந்நியமாய் உள்ளிருப்பது மனோமய கோசம். மனோமயகோசமாகிய பக்ஷிக்கு யஜூர்வேதம் சிரஸ். ருக் வேதம் தக்ஷிணபக்ஷம், ஸாமவேதம் உத்தரபக்ஷம், வேதத்திலுள்ள ப்ராம்மணமெனும் விநியோகபாகம் வயிறு. அதர்வணவேதம் ஆதாரமாகிய புச்சமெனப்படும். வேதமானது அநுஸந்தானம் செய்யப்படுதல் மானஸ வ்ருத்தியாலேயே ஆதலால் வேதங்கள் மனோமயகோசத்திற்கு

அவயவங்கள் எனச் சொல்லப்பட்டது. வேதப்பிரமாண ஞானத்தை மனத்தைக்கொண்டே அடையவேண்டும். வேதப்ரமாண ஞானத்தோடு கூடிய மனமே பரம்பொருளை அறிய ஸாதனமாகும். அவ்விதமின்றி அசுத்த மனத்தால் ஆத்மஸ்வரூபத்தை அறிய இயலாது. இக் காரணம் பற்றியே இருவிதவாக்கியங்கள் மனோவாக்குகளுக்குப் பரம்பொருள் எட்டாததென்றதானது அசுத்த மனத்திற்கு எட்டாததெனும் கருத்துக் கொண்டதே. மனஸ்ஸாலேயே பரம்பொருளை அடையவேண்டுமென்றது வேதப்ரமாண புத்தியோடுகூடியதும் சுத்தமுமாயுள்ள மனத்தினாலேயே அறியப்படுமெனும் கருத்தினாலேயாம். சுத்த மனத்தினால் ஆனந்தஸ்வரூப ஆத்மாவை யறிந்தால் ஸகலபயமும் ஒழிந்து ஆனந்தானுபவம் பெறலாம். கிரியாஸ்வரூபமாகிய பிராணமய கோசத்திற்கு ஆந்தரமாய் பிரமாணரூபமான மனோமயகோச மாவதுபோல, மனோமய கோசத்திற்கும் ஆந்தரமாகவிக்ஞானமய கோசமுள்ளது.

## விக்ஞானமய கோசம்

விக்ஞானமய கோசத்திற்கு அவயவங்களாவன: குருசாஸ்திர வாக்கியங்களில் திடமாயுள்ள ச்ரத்தையே விக்ஞானமயகோசமெனும் பக்ஷிக்கு சிரஸ் என்பது. சாஸ்திரம் விதித்த கர்மாநுஷ்டான விஷய ஞானமாகிய ருதமென்பது தக்ஷிணபக்ஷம். கர்மாநுஷ்டானத்தினால் சுத்திபெற்ற புத்தி ரூபமான ஸத்தியமானது உத்தரபக்ஷம். அத்யாத்ம சாஸ்திரார்த்த நிச்சயமாகிய யோகமானது ஆத்மா எனச் சொல்லத்தக்க உதரமெனும் அவயவம். ஸகல ஸ்தூல ப்ரபஞ்ச காரணமான ஸமஷ்டிஸூக்ஷ்ம சரீர உபாதிக ஹிரண்ய கர்ப்பருடைய புத்தியே ஆதாரமெனும் புச்சமாம். இதனால் இவ்வித மிங்கு அறிக. புத்தியே விக்ஞான மெனப்படும். ஸர்வ வைதிகலௌகிக கர்மங்களைச் செய்வதும் விக்ஞானமே. தேவத் தன்மை பெற்ற ஸகலரும் விக்ஞானத்தை ஸர்வோத்தம மாகிய (ஜ்யேஷ்ட மாகிய) ப்ரும்ம ஸ்வரூபமாக உபாஸிக்கின்றனர். ஸமஷ்டி விக்ஞானத்தை ஆத்ம ஸ்வரூபமாக உபாஸிப்பவன் தேஹாபிமானத்தால் ஸம்பவித்த ஸகல பாபங்களும் நீங்கி விரும்பிய பொருள்கள் ஸித்திக்கப் பெறுவான்.

## ஆனந்தமய கோசம்

விக்ஞாநமய கோசத்திலும் ஆந்தரமாக உள்ளது ஆனந்த மய கோசம். அது அவ்யாகிருதம் எனப்படும். விரும்பிய பொருளின் தரிசனத்தா லேற்படும் ஸுகமாகிய ப்ரியமென்பது ஆனந்தமய கோசமாகிய பக்ஷிக்கு சிரஸ் எனப்படும். விரும்பிய பொருளின் லாபத்தினால்

ஏற்படும் இன்பமாகிய மோதம் என்பது தக்ஷிணபக்ஷம். விரும்பிய பொருளை அனுபவித்தலால் ஏற்படும் ஸுகமாகிய ப்ரமோத மென்பது உத்தரபக்ஷம். ப்ரிய மோதப்ரமோதவ்ருத்திகளில் ஸாமான்யமாக அடங்கியுள்ள ஆனந்தம் ஆத்மஸ்தானமாகிய உதரமெனப்படும். ஸகல ஜகங்களுக்கும் அதிஷ்டானமாயுள்ள ஆனந்த ஸ்வரூபமாகிய ப்ரும்மமே ஆதாரமாகிய புச்சம் என்பதாம். இவ்வாறு பஞ்சகோசங்கள் நிரூபிக்கப் பட்டன. தைத்திரீயாதி உபநிஷதங்களில் பஞ்சகோசங்கள் விபரமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன.

உண்மையில் ஆத்ம ஸ்வரூபத்திற்கு அந்நியங்களாயுள்ள இந்தப் பஞ்சகோசங்களை ஆத்மா வென சுருதி உபதேசித்திருத்தல் உசிதமோ எனும் சங்கை இப்போது ஏற்படக்கூடும். ஆகையால் அவ்விஷயத்தினில் வேதமாதாவின் கருத்தைச் சற்றுக் கூறுவாம்.

## உபநிஷத் கதை

ப்ருஹதாரண்யச்ருதியில் ஓர் விஷயம் சொல்லப்பட் டிருக் கிறது. அதாவது: யாக்ஞவல்கியரைக் குருவாகச் சம்பாதிப்பதற்காக ஞாநஜநகன் ஓர் யக்ஞம் செய்தான். அதற்கு உலகிலுள்ள ஸகல மஹரிஷிகளும் விஜயம் செய்திருந்தனர். அந்தக் கூட்டத்தில் ஜநகன் ஓ ப்ரும்ம நிஷ்டர்களே, உங்களுக்குள் ப்ரும்ம ஞானத்தில் சிறந்த பெரியோர் இப்போது யான் கொடுக்க இருக்கும் ஸ்ஸர்வாலங்காரத் துடன் கூடிய ஆயிரம் கோக்களை ஓட்டிக்கொண்டு போகலாம் எனக் கூறினன். அப்போது அந்தக் கூட்டத்தில் இருந்த ப்ரும்மவேத்தாக் களுள் ஜநகனுடைய புரோஹித ஹோதாவாகிய ஆச்வலர், ஆர்த்தபாகர், புஜ்யு, உஷஸதி கஹோளர், சார்க்கி, உத்தாலகர், விதக்தசாகல்யர் என்ப வர்களின் மத்தியிலிருந்த யாஞ்ஞவல்கியர் தமது சிஷ்யர்களாகிய ஸாமச்ர வஸ் முதலியவர்களை நோக்கி, 'ஓ சிஷ்யர்காள், இந்த ஆயிரம் கோக்களை யும் நமது ஆச்ரமம் கொண்டுபோய்ச் சேருங்கள்' என்றனர். உடனே அங்கு குழுமியிருந்த முற்கூறிய பெரியோர்கள், 'ஓ யாக்ஞவல்கியரே' நீவிர் ப்ரும்ம வேத்தாக்களுள் சிறந்தவரா யிருப்பின் இந்த கோக்களை கிரஹிக்கலாம்; அல்லாவிடில் கூடாது' என ஆரவாரம் செய்தனர். யாக்ஞவல்கியர் அப்போது, ஓ ப்ரும்ம நிஷ்டர்காள்! உங்களை நமஸ்கரிக் கின்றேன். இந்த கோக்களில் எனக்கு ஆசையுளது என்றனர். அதற்கு அவர்கள் ஆசையுள்ளவர்களா யிருத்தலினால்மட்டும் இந்த கோக்கள் கிரஹித்துக்கொள்ளத் தக்கவையாகா. ப்ரும்ம வேத்தாக்களுள் சிறந் தவராயின் இவைகளைக் கிரஹிக்கலாம். ஆதலால் ப்ரும்ம வேத்தாக்க ளுள் நீவிர் பெரியோர் என்பதைத் தெரிந்துகொள்வதற்காக உங்களைச்

சில ப்ரச்னைகள் செய்வோம். அதற்கு உத்தரம் ஸரியாக நீவிர் கூறு விடில் இந்த கோக்களை கிரஹித்துக் கொள்ளத்தக்கவ ராகமாட்டீர் எனக்கூறி ஆர்ப்பரித்தனர். யாக்ஞவல்கியர் ஓ பெரியோர்களே அப்படி யானால் நீங்கள் என்னை ப்ரச்னை செய்யுங்கள் என்றனர். அப்போது அங்கிருந்தவர்களுள் ஜநகனது ஹோதாவாகிய ஆச்வலர் எனும் மஹான் சில கேள்விகளைக் கேட்டனர். அதன்பிறகு ஆர்த்தபாகர் என்பவர் சில கேள்விகளைக் கேட்டனர். அக்கேள்விகளுள் முக்கியமாகிய ஓர் கேள்வி யையும் அதற்குக் கூறிய பதிலையும் சற்றிங்கு சுருக்கமாய்க் கூறுவாம்.

## ஜனகனுடைய ஸபையில் யாக்ஞவல்கியரின் விடை

ஓ யாக்ஞவல்கியரே! க்ரஹங்கள் எத்தனை? அவை யாவை? அதிக்ரஹங்கள் எத்தனை? அவை யாவை? என வினவினர். அதற்கு யாக்ஞவல்கியர், ஓ ஆர்த்தபாகரே! கிரஹங்கள் எட்டு. அவை ச்ரோத் திரம், த்வக்கு, சக்ஷுஸ், ரஸனம், கிராணம், மனம், வாக்கு, ஹஸ்தம் எனும் இவையாம். அதிக்ரஹங்களோவெனின் அவையும் எட்டு. சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், இச்சை, நாமம், கிரியை எனும் இவை களே அதிக்ரஹங்கள் என்பனவாம் என்றனர்.

அங்ஙனம் கூறிய யாக்ஞவல்கியரை நோக்கி ஆர்த்தபாகர் மீண் டும், ஓ ஸ்வாமி! இவைகளுக்கு என் இப்பெயர் வந்துள்ளன என வினவ அப்போது யாக்ஞவல்கியர் கூறியதை இந்த ஸந்தர்ப்பத்தில் கூறுவாம்.

கிரஹம், கிராஹம் எனும் சொற்களுக்கு முதலை என்பது அர்த் தம். ஸமுத்திரத்தில் முதலைகள் வஸிப்பதுபோல ஜீவாத்மாக்களின் ப்ரபஞ்ச வாழ்க்கையில் ச்ரோத்திராதி இந்திரியங்களும், மனமும், வாக் கும், ஹஸ்தமும் புத்தியில் பிரதிபிம்பித்துள்ள பரமாத்ம பிரதிபிம்பங்க ளாகிய ஜீவாத்மாக்களை உறுதியாய்ப் பற்றிக்கொண்டு முதலைகள் ஜலத் திற்குள்போல ஸம்ஸார ஸமுத்திரத்திற்குள் இழுக்கின்றன. ஆகை யால் இவை எட்டும் ஜீவாத்மாவை இழுக்கும் முதலைகள் எனக் கூறப் பட்டன. மனிதர் முதலியவர்களை ஜலத்திற்குள் இழுக்கும் முதலைகளை திமிங்கிலங்கள் பற்றி இழுத்துப் புசித்தல்போல ஜீவாத்மாக்களைப் பற்றிக்கொண்டு இழுக்கும் சுரோத்ராதி இந்திரியங்களையும் மனஸ்ஸை யும் சப்தஸ்பரிசாதி உலக வஸ்துக்கள் இழுக்கின்றன. ஆதலால் வெளிப்பொருள்கள் அதிக்ரஹங்கள் எனும் பெயரால் வழங்கப்படுகின் றன. மனிதர் முதலியவர்களை இழுக்கும் முதலைகளையும் திமிங்கிலாதி கள் இழுத்தலினால் அதிக்ரஹங்கள் என்பதுபோல ஜீவாத்மாக்களை இழுக்

கும் இந்திரியாதிகளையும் வெளிப்பொருள்களான சப்தஸ்பர்சாதிகள் இழுக்கின்றமையால் அதிக்ரஹங்கள் என சுருதி வழங்குகின்றது.

தாஹத்தினால் வழிநடப்போன் வருந்தித் தீர்த்தமருந்த விசாலமான ஓர் ஏரியில் இறங்கலானான். அங்கிருந்த காவல்காரன் ஓ பிராணியே, ஜலத்திலிறங்காதே. இறங்கினால் இங்கு வசிக்கின்ற முதலைகள் பற்றிக்கொண்டு இழுக்கும். ஆதலால் பாத்திரத்தினால் தீர்த்தத்தைக் கரையிலிருந்தே எடுத்து ஸாப்பிடு என்றான். கைகளினாலேயே தீர்த்தத்தை எடுத்து அருந்துவதானால் அது புண்ணியதீர்த்தத்தில் வாய்கொப்பளித்தல், காறி உமிழ்தல் முதலியவைபோல பாபச் செய்கையாதலால் பாத்திரத்தாலேயே மொண்டு அருந்துதல்போல ப்ரகிருதத்தில் ஓர் ஸாதனமுள்ளது. அதனை வைத்துக்கொண்டு ப்ரபஞ்சத்தில் பழகினால் அனர்த்தம் வராது. அதாவது அஸங்கஞாநம் எனும் பாத்திரத்தை வைத்துக்கொண்டு உலகமெனும் ஏரியிலுள்ள தீர்த்தத்தை எடுத்து அருந்தினால் இந்திரியாதிகளாகிய முதலைகளாலும் சப்த ஸ்பரிசாதி வெளி விஷயங்களாகிய திமிங்கிலங்களாலும் பற்றப்படாமல் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளலாம். இனி அஸங்கஞாநமாவது யாதெனின் உலகவஸ்துக்களில் ஸுகலேசமுமில்லை. ஆத்மவஸ்துவாகிய பரம்பொருளே ஸுகஸ்வரூபம். ப்ரபஞ்சப்பொருளை ஸுகவஸ்துவென எண்ணி மயங்கி அதனை யனுபவிக்க உழன்றுகொண்டிருக்கும்போது பூர்வகர்மவசத்தால் அது கிடைத்து அனுபவிக்கும் ஸமயத்தில் ஓர் க்ஷணம் சித்தம் ஓய்ந்து பரமாத்மாவாகிய ஸுக வஸ்துவில் சலனமிராமலிருக்கின்றது. சலித்துக்கொண்டிருக்கும் கண்ணாடியில் எதிரிலுள்ள வஸ்துவின் பிரதிபிம்பம் விளங்குகின்றதில்லை. சலிக்காமல் நிச்சலமாயுள்ள கண்ணாடியில் எதிரிலுள்ள வஸ்து விளங்குகின்றதுபோல, அந்த ஸமயத்தில் எப்போதும் ஸுகஸ்வரூபமாய் எங்கும் வியாபகமாயுள்ள பரம்பொருள் சித்தத்தில் விளக்கமுறுகின்றது. உண்மையில் பரம்பொருளாகிய ஸுகவஸ்துவை ப்ரபஞ்ச வஸ்துக்களாகிய சப்த ஸ்பரிசாதிகளினின்றும் உண்டாகின்றது என அஞ்ஞாந மஹா மோஹத்தினால் எண்ணுகின்றனர். அப்படி எண்ணாமல் உலக வஸ்துக்களில் ஸ்வல்பமேனும் ஸம்பந்தமிராத அஸங்கானந்த வஸ்துவே ஸுகம் எனவும், அதுவே தேஹத்திற்குள்ளும் வெளியிலும் உள்ள பொருள் எனவும், திடமாகிய நிச்சய ஞாநமே இங்கு அஸங்கஞாந மென்பதறிக.

பாத்திரத்தினால் மொண்டு நீரைப் பருகுவது முதலையினிடம் அகப்பட்டுக்கொள்ளாம லிருத்தலுக்கு ஹேதுவாவதுபோல, இந்த அஸங்க ஞானத்தை உறுதியாக வைத்துக்கொண்டு உலக வியவஹாரத்தில் ஈடுபடுதல் ஸம்ஸாரபந்தத்திற்குள் சிக்கிக்கொள்ளாதிருக்கும் ஸாதந

மாம். எனும் கருத்தைக்கொண்டு யாக்ஞவல்கியர் ஆர்த்தபாகரின் ப்ரச்னத்திற்கு உத்தரம் கூறியுள்ளார் எனும் விஷயம் ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் உள்ளது.

## வெளிப்பொருள் ஸுகஹேது எனும் எண்ணம் நீங்க அன்னமயகோசம் ஆத்மா என்பது

இவ்விதம் சப்தஸ்பர்சாதி உலகவஸ்துக்கள் இந்திரிய மனஸுகளை வெளியில் இழுக்க, அவ்விந்திரிய மனங்கள் ஜீவாத்ம வஸ்துவை உள்ளிருந்து வெளியில் ராகத்வேஷாதிகளால் இழுக்கும் நிலைமையிலுள்ள மாந்தர்கள் ஸதா வெளி வஸ்துக்களையே நாடிக்கொண்டு அவைகளிலேயே ஸதா உழன்றுகொண்டிருப்பார்கள். இப்படி வெளி வஸ்துக்களிலேயே ஆத்ம வஸ்துவிடம் இருக்கவேண்டிய விருப்பத்தை வைத்துக்கொண் டிருப்பவர்களாகிய விஷயாஸக்தியுடையோர்களை நோக்கி அவ்வாறுள்ள விஷயாஸக்தியினின்றும் விடுபடட்டுமெனும் கருணையினால் வேதமாகிய அன்னையானவள் ஓ மைந்தா வெளிப்பொருள் ஸுகமல்ல. அவைகளில் உள்ள பற்றை விட்டுவிடு: உனது அன்னமயமாகிய தேஹமே ஆத்மா என உபதேசிக்கின்றனள். இது எதுபோலெனின் அதற்கோர் த்ருஷ்டாந்தம் கூறுவாம்.

அதாவது ரூபயௌவனாதிகளால் சிறப்புற்ற யௌவன புருஷன் அல்லது அவ்வாறே உள்ள யௌவன ஸ்திரீ இவர்கள் தத்தம் சரீரத்தைக்கண்டு இன்புறுகின்றதில்லை. எவ்வளவு அழகாயிருக்கினும் அந்த ஸ்த்ரீயானவள் தனது ஸுக ப்ராப்தியின் நிமித்தம் பிசாசம்போலத் தன் சரீரத்திலும் வேறாகிய புருஷ சரீரத்தையே விரும்புகின்றனள். புருஷனும் தன் சரீரத்திலும் வேறாகிய ஸ்த்ரீயின் சரீரத்தை விரும்புகின்றான். வழி நடப்பவன் வழியில் சிறந்த ஓர் ரத்நத்தைக் கண்டெடுத்தான். அதைச் சிறந்ததெனக் கண்டு மார்க்கத்தில் செல்வோர்களெல்லோரும் ‘உனக்கு அணு கொடுக்கிறேன். இந்தக் கல்லை எனக்குக் கொடு’ என ஒவ்வொருவரும் கேட்கின்றனர். அப்போது அவன் என்ன செய்ய வேண்டும்? ஓஹோ இதனை எல்லோரும் தமக்கு வேண்டுமென விரும்புகின்றனர். ஆதலால் இது சிறந்தது. இதனை நாமே வைத்துக்கொண்டு அனுபவித்து மகிழ்வோம் என்று எண்ணுவது உசிதமன்றோ. அதுபோல ஸ்த்ரீ புருஷர்கள் பிறர் சரீரத்தை விரும்பாமல் தத்தம் சரீரத்தையே கண்டு ஏன் மகிழக்கூடாது. ஆனால் அவ்விதம் உலகில் அனுபவமில்லை. உலகானுபவத்தில் அப்படி யிருத்தலுக்குக் காரணமே மோஹமென்பதாம். அப்படித் தன் தேஹத்திலும் அந்நியமாயுள்ள வெளி வஸ்துக்களைக் கண்டு மோஹிக்கும் மாந்தர்களுக்கு வெளி வஸ்துக்களிலுள்ள

மோஹத்தை நீங்கச் செய்வதற்காகவே வேதமென்னும் அன்னை, ஓ மைந்தர்களே! அன்னமயமாகிய உங்கள் தேஹமே ஆத்மா; வெளி வஸ்துக்களில் பிரியத்தை விட்டுவிடுங்கள். ஆத்ம வஸ்துவைவிட்டு அனாத்மப் பொருள்களில் பிரீதி வைத்துக்கொள்வது உசிதமல்ல என உபதேசிக்கின்றனள்.

இங்கு மற்றுமோர் த்ருஷ்டாந்தம். தேன் வேண்டுமென்று விரும்புவோன் தன் வீட்டுத் தோட்டத்திலேயே தேன் கிடைப்பின் அதற்காக காடு மலை முதலியவைகளுக்குப் போகானன்றோ? உலகப் பிரஸித்தமான மற்றோர் த்ருஷ்டாந்தம் கூறுவாம். தின்பண்டங்களாகிய பக்ஷ்யாதிகளில் ஆசையுற்று பக்ஷ்யக்கடைகளுள்ள இடமெல்லாம் திரிந்துழலும் மைந்தனை நோக்கி அன்னை, ஓ மைந்தா! பக்ஷ்யக்கடைகளிலிருப்பவைகளைக் காட்டிலும் சிறந்த பக்ஷ்யங்களை உனக்குச் செய்துவைத்திருக்கிறேன். அதனைப் புசித்து ஸந்தோஷிப்பாயாக எனக் கூறி அவைகளை அவனுக்குக் கொடுத்தால் அந்த மைந்தன் பக்ஷ்யக்கடைகளுக்குச் செல்லுதலை நிறுத்திவிடுவானன்றோ; அதுபோல வெளி வஸ்துக்களையே ஸதா நாடிக்கொண்டிருக்கும் மாந்தர்களை நோக்கி வேதமாதா கருணையினால், ஓ மைந்தர்களே! இந்த அன்னமயமாகிய தேஹமே ஆத்மா. ஆத்ம வஸ்துவல்லவோ சிறந்தது என உபதேசிக்கின்றனள்.

## அன்னமயகோசம் ஆத்மாவல்ல எனும் ஞானத்திற்காகவே ப்ராணமயம் ஆத்மா என்பது

ஸ்தூலதேஹமாகிய அன்னமயகோசத்தில் ஆத்மபாவனையும் அதுவே ஸுகமெனும் எண்ணமும் திடப்படத்திடப்பட மற்ற வெளிப் பொருள்களை ஸுக வஸ்துக்களெனும் எண்ணம் குறைந்துபோகும். அது அடியோடு நீங்குந் தருணத்தில், அப்பா இவ்வன்னமயகோசமும் ஆத்மாவாகாது. ஏனெனின் ப்ராணனிருந்தால் இவ்வன்னமயகோசம் ஜீவித்திருக்கின்றது. அது சரீரத்தை விட்டு வெளிப்பட்டுவிட்டால் இது அசுத்தமாகிய பிணமாய்ப் போகின்றது. தவிரவும் இந்திரியங்களினாலேயே சரீரத்தில் ஸகல வியவஹாரங்களும் நடக்கின்றன. ஸ்தூலசரீரத்தில் ஸகல சேஷ்டைகளும் வாக், பாணி, பாதம், குஹ்யம், குதம் எனும் கர்மேந்திரியங்களினாலேயே. பேச்சுவார்த்தை முதலியவை வாகிந்திரியத்தாலும், சரீர ஜீவன ஹேதுக்களான தொழில்கள் பாணீந்திரியத்தினாலேயும், செல்லுதல், வருதல் முதலியவை பாதேந்திரியத்தினாலும், ப்ரஜோத்பத்திக்கு ஹேதுவாகிய கிரியை குஹ்ய இந்திரியத்தினாலும், அசுத்தி நீக்கத்தினால் ஜீவன ஹேதுவைச் செய்தல் குதமெனும் அபான ஸ்தானத்திலுள்ள இந்திரியத்தினாலுமே நடைபெறுகின்றன.

ஆதலால் ப்ராணனும் கர்மேந்திரியங்களுமாகிய வஸ்துக்களின் சேர்க்கை யாலேயே இவ்வன்னமயகோசத்தில் வியவஹாரங்கள். இவைகளின் சேர்க்கையே ப்ராணமயகோசம், ஆதலால் பிராணமயகோசமே ஆத்மா என வேதம் உபதேசித்துளது. இந்த பாவனை திடப்படத்திடப்பட அன்னமயகோசம் ஆத்மா எனும் எண்ணம் நீங்கும். இவ்வெண்ணம் முற்றும் நீங்கும்போது ஓ மைந்தா, பிராணமயகோசமும் ஆத்மாவல்ல. ஏனெனின் பிராணமயகோசத்திலடங்கிய பிராணனும் கர்மேந்திரியங் களும் அறிவிராத ஜடங்களே. இவை கிரியை மாத்திரத்தைச் செய்யும். அறிவற்ற பொருள்கள். அறிவல்லவோ ஆத்மா. ஆதலால் சக்ஷுஸ் ச்ரோத்திரம் ஜிஹ்வா க்ராணம் த்வக் எனும் இந்திரியங்களினுலேயே பொருள்கள் அறியப்படுகின்றன. அவையே ஞானேந்திரியங்களெனப் படுகின்றன. அவ்விந்திரியங்களும் மனம் எனும் பொருளோடு கூடியே வஸ்துக்களை அறிகின்றன. மனமே வியவஹாரங்களைச் செய்கின்றது. ஆதலால் மனம் ஞானேந்திரியம் இவைகளின் சேர்க்கையாகிய மனோமய கோசமே ஆத்மா என்றறிவாயாக; என வேதம் உபதேசிக்கின்றது. மனோமயகோசம் ஆத்மா எனும் எண்ணம் திடப்படத்திடப்பட பிராண மயகோசம் ஆத்மா எனும் எண்ணம் குன்றிப்போகும். அத்தருணத்தில் அப்பா மைந்தா, மனோமயகோசமும் ஆத்மாவல்ல. விக்ஞானமய கோசமே ஆத்மா.

## மனோமயம் ஆத்மா என்ற உபதேசத்தால் ப்ராணமயகோசம் ஆத்மா எனும் எண்ணம் நீங்குவதுபோலவே மனோமயமும்

விக்ஞானமயகோசமாவது புத்தியும் ஞானேந்திரியங்களுமாகிய இவைகளின் சேர்க்கையே. மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கியா ளும் பொருள் புத்தியே. புத்தியால் அடக்கியாளப்பட்ட ஞானேந்திரியங் களே உசிதமான காரியங்களைச் செய்யும். புத்தியால் அடங்கியாளாமல் மனம்போன போக்கில் விட்டுவிட்டால் அனர்த்தத்திற்குள்ளாய் அல்லற் படும்படியாகின்றது. புத்தியானது உள்ளதை உள்ளபடி அறியும் இயல் புடையது. சாஸ்திர விதியை யறியும் பொருள் புத்தியே. மனம் என் பது கேவலம் ஸங்கற்ப விகற்பங்களை மாத்திரம் கண்மூடித்தனத்தோடு செய்யும். புத்தியாகிய விக்ஞானமே உலகில் மேன்மைபெறுதற்கு ஹேது. ஆதலால் அதுவே ஸத்காரியங்களைச் செய்வது. ஆகையால் ஞானேந்திரியங்களுடன் கூடியதாகிய மனஸ்ஸை அடக்கியாளுகின்றது மாகிய புத்தி எனும் விக்ஞானமயகோசமே ஆத்மா என்று உபதேசிக்கின் றனர். விக்ஞானமயகோசம் ஆத்மா எனும் இவ்வுபதேசத்தால் இந்த எண்ணம் திடப்படத்திடப்பட மனோமயகோசம் ஆத்மா எனும் எண்ணம்

குறைந்துபோகும். அப்படிக் குன்றிப்போகும் தறுவாயில் வேதமாதா ஓ மைந்தா விக்ஞாநமயகோசம் ஆத்மாவல்ல. ஏனெனின் ஜாக்ரத் ஸ்வப்னம் எனும் இரண்டு அவஸ்தையுமிராத ஸுஷுப்தியில் விக்ஞான மயமாகிய புத்தியாவது ஞாநேந்திரியங்களாவது மனமாவது ஒன்றும் வேலை செய்கின்றதில்லை. அப்போது ஆத்மா கேவலம் ஆனந்தபோகத்தோடு மாத்திர மிருக்கின்றான். விக்ஞாநாதிகள் வேலைசெய்யும் ஜாக்ரத் ஸ்வப்னகாலங்களில் இன்பமும் துன்பமும் கலந்தே அனுபவிக்கப்படுகின்றது. இவைகள் ஒய்வடைந்த ஸுஷுப்தி ஸமயத்தில் ஒரே ஆனந்த மாத்திரமாக இருக்கின்றது. அவ்வானந்தமும் ஜாக்ரத் ஸ்வப்னங்களில் உலகப்பொருள்கள்போல வியக்தமாக விளங்கவில்லை. ஆதலால் ஒன்று மறியாத ஆனந்தமாகவே மாத்திரம் ஆத்மா அப்போது மிஞ்சி இருக்கின்றமையால் அவ்வானந்த மயமே ஆத்மா. அவ்வானந்தமயனாகிய ஆத்மாவே ஜாக்ரத் ஸ்வப்னங்களிலும் ஸுகானுபவகாலத்தில் நன்றாய் விளங்குகின்றான். அதாவது இஷ்டபதார்த்தத்தைக் கண்டதும் ஏற்படுகின்றதாகிய ஸுகஸ்வரூபமாகிய பிரியமும், அப்பொருள் தனக்குக் கிடைத்ததினா லேற்படும் மோதம் எனப்படும் ஸுகமும், அவ்விஷ்ட வஸ்துவின் அனுபவத்தினா லேற்படுவதான ப்ரமோதமெனும் இன்பமும் அவ்வானந்த மயனான ஆத்மாவைச் சேர்ந்ததே. இவை யாதுமிராத உலக வியவஹாரமற்ற ஸுஷுப்தியில் கேவல ஆனந்தமாயிருப்பதும் அவ்வானந்த மயனான ஆத்மப்பொருளே. ஆதலால் ஆனந்த மயமே ஆத்மா. எனவேதமாதா ஆனந்தமய கோசத்தை ஆத்மா என உபதேசிக்கின்றனள்.

## அஞ்ஞானமாகிய ஆனந்தமய கோசமும் ஆத்மாவல்ல

இவ்விதமுள்ள உபதேசத்தினால் ஆனந்தமய கோசத்தில் ஆத்ம பாவனை திடப்பட்டு விக்ஞாந மயாதி கோசங்கள் நான்கும் ஆத்மாவல்ல எனும் எண்ணம் வலுத்த ஸமயத்தில் வேதமாதா 'ஓ மைந்தா! இவ்வானந்தமயமும் கோசமே அன்றி ஆத்மாவல்ல. ஆத்மாவானது யாதெனின் அஞ்ஞானத்தோடு கூடியவனாகிய இவ்வானந்தமயனால் ஸுஷுப்தியிலும் ஜாக்ரத் ஸ்வப்னங்களிலும் அனுபவிக்கப்படுகின்றதாகிய ஆனந்தம் யாதுளதோ அதனுண்மை ஸ்வரூப ஆதாரமாகிய ஆனந்த மாத்திரமே ஆத்மா. அவ்வாதாரமாகிய கேவல ஆனந்த ஆத்ம வஸ்து புச்சமெனும் ப்ரும்ம வஸ்துவாம்' என உண்மையான ஆனந்த ஸ்வரூப ஆத்மாவை உபதேசிக்கின்றனள்.

உண்மையில் ஆனந்தஸ்வரூபமாகிய ஆத்மா அன்னமய ப்ராணமய மனோமய விஞ்ஞானமய ஆனந்த மயங்களான பஞ்சகோசங்களுக்கும் அந்

ஙியமே. அஞ்ஞானத்தோடு கூடிய புத்தியில் பிரதிபிம்பித்துள்ள ஆனந்த வஸ்துவின் பிரதிபிம்பமே ஜீவாத்மா எனும் பொருள். பிரதிபிம்பங்கள் ஸகலமும் உலகில் விசாரணைசெய்து பார்க்குங்கால் ஆதாரமாயுள்ள பிம்பவஸ்துக்களுக்கந்நியமாய் ஸத்தியமாயிராமல் பொய்யாய்ப் போகின்றமையால், உண்மையில் பிம்பப்பொருள் மாத்திரமாக மிஞ்சுகின்றமையால் அவ்வாறு பஞ்சகோசங்களுக்கும் விளக்கமற்ற உண்மை யனுபவ நிலைமையில் ஸர்வாதாரமாயுள்ள அவ்வானந்த ஸ்வரூபனான ஆத்மாவே விளங்குகின்றான். அவனே பரம்பொருள். அதுவே நீ. உனது உண்மை ஸ்வரூபம் அவ்வானந்த வடிவமே. ஓர் பெரிய மண்டபத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் தீபத்தை மூன்று திரைகள் ஆவரணம் செய்துகொண்டிருத்தல்போல ஜாக்ரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி எனும் மூன்று திரைகள் அவ்வானந்த ஸ்வரூபமாயுள்ள பரம்பொருளான உண்மை யான்மப்பொருளை புத்தியிலுள்ள பிரதிபிம்பமாகிய ஜீவாத்மாவுக்கு விளங்கவிடாமல் ஆவரணம் செய்துகொண்டிருக்கின்றன. இரண்டு திரையாவரணங்களை நீக்கி ஒரே ஓர் திரையால் மாத்திரம் ஆவரணம் செய்யப்பட்டிருக்கும்போது தீப பிரகாசம் முன்னிலும் அதிகமாகக் காணப்படுவதுபோல ஜாக்ரத் ஸ்வப்னங்கள் நீங்கி ஸுஷுப்தி மாத்திர ஸமயத்தில் ஆத்மானந்தம் நன்றாய் அனுபவிக்கப்படுகின்றது. அப்போது அஞ்ஞானமெனும் ஓர் ஆவரணம் பாக்கியிருக்கின்றமையால் அவ்வாத்மானந்தம் நன்றாய் விளங்குகின்றதில்லை. மூன்று திரைகளையும் நீக்கி எவ்வாபரணமும் இராதபோது தீபம் தடையின்றி நன்றாய்ப் பிரகாசிக்கக் காண்கின்றோம். அவ்வாறே அவ்வஞ்ஞானத்தையும் ஸத்குருவை யடைந்து செய்யப்படும் ச்ரவண மனன நிதித்யாஸங்களால் துலைத்துவிட்டால், ஸ்வயம் சோதிவடிவமான ஆனந்தாத்ம ஸ்வரூபத்தை அகண்டாகார அபரோக்ஷ ஞானரூபமான புத்தி விருத்தியால் ஸாக்ஷாத்கரிக்கலாம். அபரோக்ஷாத்ம ஸாக்ஷாத்கார ஞானமுதித்தால் மூலாக்ஞானம் அடியோடு நீங்கும். ராகத்வேஷ காமமோஹாதிகள் ஸகலமும் அடியோடு ஒழியும். ஜநநமரணக் கடலினின்றும் கரையேறியவனாகலாம்.

## கோசங்களை ஆத்மா எனும் உபதேசம் ஸ்தூலாருந்ததி நியாயம்

இவ்விதம் ஸர்வாதிஷ்டானமாகிய ஆனந்த ஆத்மஸ்வரூபத்தைப் போதிப்பதற்கெனவே வேதம் ஸ்தூலாருந்ததி நியாயமாகப் பஞ்சகோசங்களை ஆத்மா என உபதேசிக்கின்றது. பக்கத்திலுள்ள நக்ஷத்ரங்களைக் காட்டி அதற்கடுத்தாப்போல் பார் எனக் கூறி முடிவில் அருந்ததி நக்ஷத்திரத்தைக் கண்டுகொள்ளச் செய்யும் உபதேசமே ஸ்தூலாருந்ததிநியாயமென்பதாம்.

ஆகவே பரம்பொருளைப் போதிப்பதற்காக வேதமான்து மாந்தர்களிடம் கருணையினால் பற்பலவாறாகிய வழிகளை எடுத்துக்காட்டி முடிவில் ஒன்றாயுள்ள ஆத்மவஸ்துவை உபதேசிக்கின்றது. ஓரிடத்தில் ஜகத்காரணத்துவத்தை எடுத் துதஹரித்தும், மற்றோரிடம் பஞ்சகோசங்களை விவேசனம் செய்துகாட்டியும், விதிமுக வாக்கியங்களாகிய ஸச்சிதானந்தாதி சொற்களின் அர்த்தத்தை எடுத்துக் காட்டியும், மற்றோரிடம் அஸ்தூலம் அல்லது அசப்தம் அஸ்பரிசம் என்பதாதி நிஷேத முகவாக்கியங்களின் அர்த்த விசாரமூலமாகவும், இவ்வாறு பற்பலவாறாயுள்ள உபாயங்களால் மாந்தர்களின் பரிபாக பேதங்களுக்கேற்ப சிரவணத்தைச் செய்வித்து ஆத்ம வஸ்துவையே போதிக்கின்றது. இப்படிக் கருணையோடு போதிக்கின்றனவாகிய வேதவாக்கியங்களில் திடமான நம்பிக்கையாகிய ச்ரத்தை எனும் ஸாதனமுள்ளவருக்கே இந்த வேதாந்த வித்தை ஸபலமாகும்.

## பக்தியோடு ஸகுண மூர்த்தியின் த்யானம் அவச்யம்

கடைசியில் முடிவாகச் சொல்லவேண்டிய முக்கியமாகிய இரண்டு விஷயங்கள் இந்நூலில் பாக்கியாயிருக்கின்றன. அவைகளுள் ஒன்று மாயாமோஹ வலையில் சிக்கிக்கொண்டிருக்கும் மாந்தர்களை உத்தாரணம் செய்வதற்கெனவே திவ்யமூர்த்தி பேதங்களை எடுத்து அநுக்ரஹிக்கும் ஈச்வரனுடைய ஸகுண மூர்த்திகளில் உறுதியாகிய பக்தியோடு அல்லும் பகலும் அலறி அலறி ஓ இறைவனே, உன்னுடைய திவ்ய சரணாவிந்தங்களுக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரங்களைச் செய்கின்றேன். எந்தையே இனி ஜன்மமிராமல் எனக்கு உனது கைவல்யத்தைத் தந்தருளுவாயாக என அவ்விறைவனது திவ்ய சரணாவிந்தங்களையே மனோவாக்குகாயங்களாகிய திரிகரணங்களாலும் ஸதா வணங்கும் பக்தி யவசியம்.

அதாவது, ஏகாந்தமான ஸ்தலத்தை அடைந்து அதன்மேல் மான் தோலும் அதன்மேல் வஸ்திரத்தையும் விரித்து ஆஸனமாக அமைத்துக் கொண்டு அதன்மேலுட்கார்ந்து சப்பணங்கூட்டிக்கொண்டோ அல்லது பத்மாஸனத்தை அமைத்துக்கொண்டோ அல்லது வேறு ஸுகமான ஸ்திதிக்குத் தக்க ஆஸன மமைத்துக்கொண்டோ உட்கார்ந்துகொண்டு குனியாமலும் விறைப்பாக இராமலும் சாயாமலும் அசையாமலும் இருந்து, அதற்கு முன்னமேயே பாஹ்யம் ஆந்தரமெனும் இருவகை சுத்திகளையும் உடையவனாயிருந்து, முன்னர் தனது புருவ நடுவை நோக்குதலால் இந்திரியாதிகளை வெளிப்பொருள்களில் செல்லவிடாமல் தடுத்து வென்றுபோடவேண்டும். முதன்முதல் தனது நாசியின் நுனியைச் சற்றுத் தன் கண்களால் நோக்கினால் ஞானேந்திரியங்களைந்தும்

தத்தம் விஷயங்களை விடுத்து மந்தமாய் நிற்கும். அப்படியே புருவமத்தியை நோக்குவதுமாம். விஷயங்களை விட்டு ஞானேந்திரியங்கள் அடங்கி நிற்பதற்கு நாசியின் முனையை நோக்குவதும் புருவமத்தியை நோக்குவதும் பிறகு சித்தம் ஏகாக்கிரமாய் நிற்றலுக்கு உபாயமாத்திரமே யன்றி வேறல்ல. அவ்வுபாயத்தால் இந்திரியங்கள் வெளியில் நாடாமல் நிற்கும் போது மனஸ்ஸை பிற்கூறும் வண்ணம் செலுத்தவேண்டும்.

அதாவது, இந்நூலில் கூறிய ஆறு மஹா சக்திகளெனும் பராசக்தி தத்துவமானது ஸம்ஸார ஸமுத்திரத்தில் மூழ்கி அல்லற்படும் ஜீவாத்மாக்களுக்கு அன்னைபோன்றிருத்தலால் அரூபமாய் நிராகாரமாய் இருக்கும் தன் ஸ்வரூபத்திலாவது தன்னைச் சக்தியாய்க் கொண்டுள்ள ஈஸ்வர பரம்பொருளிலாவது சித்தம் செல்ல இயலாத மனத்னதயுடைய மாந்தர்களையும் தன்னியராக்கவேண்டுமெனும் கருணையினுல்தான் ஓர் திவ்விய ஸ்வரூபமாகிய மூர்த்த வடிவத்தோடு தோற்றமுறுகின்றனள். அவ்வடிவம் இவ்வாறுளது. அதாவது,

## ப்ராசக்தியின் உபாஸ்தி

கேனோபநிஷதத்தில் இந்திராதிகளுக்கு ப்ரும்ம வித்தையை அருளுவதற்காக ப்ரும்ம வித்யாஸ்வரூபிணியாய்த் தோற்றமுற்ற வடிவம் கூறப்பட்டிருக்கின்றது. பதினுயிரம் கோடி ஸூர்யர்கள் ஏககாலத்தில் உதித்தால் ஏற்படும் ப்ரகாசமே அம்மூர்த்தியினுடையதாகும். கோடி சந்திரர்கள் சேர்ந்து ஒருருவம் பெற்றுதித்தால் தரிசிக்க எவ்வளவு இன்பமும் குளிர்ச்சியும் ஏற்படுமோ, தரிசனத்தால் அப்படி ஏற்படக்கூடிய மூர்த்தியாம். அம்மூர்த்தியின் மஹிமையாலேயே ப்ரும்ம விஷ்ணு ருத்திரர்கள் தத்தம் கிரியைகளைச் செய்வோர்களாம். தன் சாணுரவிந்தங்களில் பக்தியுடையர்களை அனுக்ரஹிப்பதில் அன்னைபோன்றவள் என்பதைக் குறிப்பதற்கெனவே அகில மாதாவாகிய ஸ்திரீ வடிவத்தோடு தோன்றிய சோதியாம். உபமானமற்ற திவ்ய ஸௌந்தர்யமாய் விளங்கும் உயர் தெய்வமாம். வண்டுக்கூட்டம் போன்று அடர்ந்து கருநிறமுடையதும் அலைபோல வரிசையா யமைந்துளதுமாகிய அழகிய கேசத்தினில் விளங்கும் சந்திரகலையால் சொலிக்கும் திவ்ய கிரீடமணிந்துள்ள மூர்த்தியாம். கர்ணுபரணமாக அணிந்துள்ள வைர ரத்ந தாடாங்காபரணங்கள் கண்ணுடிபோன்றுள்ள கன்னங்களில் பிரதிபலிக்க அதன் சோதியோடு கலந்து அகில புருஷார்த்தங்களையும் தருவதான அருமையான கடைக் கண்பார்வையால் பக்தகோடிகளை அனுக்ரஹிக்கும் இயல்புடைய நீலோத்பலம்போன்ற நேத்ரங்களையுடைய முகமண்டலத்தினுல் சொலிக்கு மூர்த்தியாம். நாநாவகையாயுள்ள ரத்னங்களால் விளங்கும் ஹஸ்தாபர

ணங்களையும் கண்டாபரணங்களையும் அழகுபொருந்தச் செய்யும் அற்புத தேஹமுடைய வடிவமாம். அற்புதமாகிய திவ்ய வஸ்திரந்தரித்து அதன் சோதியோடு கலந்து சொலிக்கும் ரத்னொட்டியாண மணிந்ததாம். ஓர் க்ஷணப்போதாவது பக்தியோடு சித்திக்குமாயின் அந்தச் சித்தத்தினில் இதற்குமுன் ஸம்பவித்திருந்த அனுதி ஜன்மகோடிகளில் ஏற்பட்டேன்றி யுள்ள பாபவினைகளை அந்த க்ஷணத்திலே ஒழியச்செய்யும் மஹிமை வாய்ந்த திவ்ய சரணாரவிந்தமுடையதாம். விஷ்ணு ப்ரும்ம ருத்ரேந்தி ராதிகளாலும் அவர்களின் தேவிகளாலும் வணங்கப்படும் பாதபீடத்தால் விளங்கப்பெற்ற திவ்யாஸனத்தில் வீற்றிருக்கும் பரஞ்சோதியாயுள்ள ராஜராஜேச்வரியைப் பரமபக்தியோடும் வைராக்கியத்தோடும் மனோ வாக்குக் காயங்களால் வணங்கும் மனிதர்களுக்கு மோக்ஷஹேதுவாயுள்ள ப்ரும்மவித்தை இப்பிறவியிலேயே கிடைக்குமென்பது நிச்சயம். எவ்வ ளவுகாலம் சாஸ்திரம் கற்பினும் எவ்வளவு கோடி தவங்களை யியற்றினு லும் எவ்வளவோ கோடிக்கணக்கான புண்ணியங்களைச் செய்யினும், இவ்வீச்வரியின் சரணாரவிந்தங்களில் பக்தியிராவிடில் ஞானத்திற்காவது மோக்ஷத்திற்காவது ஒருபோதும் ஸம்பவமில்லை என்பதை நிச்சயமா யுணர்க.

## பரமேச்வர உபாஸனே

இப்படிப்பட்ட பராசக்தி தன் ஸங்கல்பத்தால் ஸ்திரீவடிவம் பெற்றுள்ளவள் என்பது மாத்திரமல்ல. தனது ஆதார வஸ்துவாகிய சைதன்யத்திற்கு ஓர் புருஷவடிவத்தையும் தந்தவள். அவ்விறைவ னுடைய வடிவமிவ்வாறேயாம். தன்னை த்யானிப்பவர்கள் மஹா பாபி களேயாயினும் ஸகலபாபங்களும் ஒழிந்து பாவனராவர் என்பதைக் குறிக் கவே த்ரிலோக பாவனையாகிய கங்கையைத் தரிக்கும் ஜடையுடையோர். ஞானம் கிரமமாக சொலிக்கப் பெறலாமென்பதைக் குறிக்கும் சந்திரகலை யைத் தரிப்பவர். திருநீறணிந்த திருநெற்றியினர். அழகு சிந்திய அகண்ட நெற்றியின் மூடியநயனத்திலகக் குறியால் பக்தனது பலத்த காமப்பிணியை நீக்கியருளும் நிலைமையைக் குறிப்பவர். திருநீறணிந்த திருநெற்றியினர். ஜகங்கள் ஸகலமும் தன்னறி வொளியால் விளங்குவன வென விளக்கிக்காட்ட ரவிமுழுமதிகளாம் நயனங்களுடையவர். மந்த ஹாஸமுறும் முழுமதிவதனர். இழிய வினையரும் இயல்புறும் பக்த ரேல் பாவனரென யான் பரிவொடு தாங்குவேன் என்பதைச் சொல்லும் கருநிறக்கண்டர். மூன்று ரேகைகள் முனையவிளங்கும் சங்கத்தை யொத்த முன்கழுத்துடையவர். விபூதி பூசிவிளங்கும் மார்பினில் அடர்ந்த ருத் ராக்ஷமாலை அணிந்தவர். முழங்காலளவு முதிர்ந்த கரத்தினர். நாகராஜ ஞம் நயமுடை நூலினர். கஜசர்மாங்க வஸ்திரம் தரித்தவர். வ்யாக்ர சர்

மாம்பர முடுத்திய இடையோர். இணையற்ற அழகுக்கிட மாந்துடை யோர். உலகவாழ்விலுயர்ந்த ஸ்ுகமும் உபநிஷதம் போற்றுமுந்த பதமும் பக்தனுக்கருளும் பாஸுக வடிவர். உலகவன்னை யுமையெனும் தேவியால் ஒளிர்மிகும் பார்ச்வ பதமுடைய பரமர். அற்புத மூர்த்தி யானந்த வடிவர். சுத்த ஸ்படிகச் சோதிநிற உருவர். இவ்வாறுள்ள இறைவனது மூர்த்தியைத் தனது ஹ்ருதய கமலத்திலாவது புருவங் களின் இடையிலாவது மஹா கைலாஸத்திலாவது சூர்யமண்டலத்திலா வது தன்னெதிர் வெளியிலாவது அருள்கொண்டு விளங்கிக் கடைக்கண் பார்வையால் நோக்குங் கடவுளைத் தியானம் செய்யவேண்டும். அப்படி த்யானம் செய்யும்போது அவ்விறைவனைத்தான் ஸாஷ்டாங்கமாக நமஸ் கரிக்கின்றதாகவும் அவர்கருணாம்ருதத்தை வர்ஷிக்கும் கடாக்ஷத்தால் நோக்கிப் பாபங்களெல்லாவற்றையும் விலகச்செய்து சித்தத்தைப் பரமபாவனமாக்கி தர்மார்த்த காமமோக்ஷங்களை அருளுகின்றார் எனவும் நிச்சயித்துக்கொண்டு அவ்விறைவனுடைய சரணாரவிந்தங்களிலேயே தனது சித்தத்தை இறுகக் கட்டிவிடவேண்டும். இவ்விதம் பராசக்தி மூர்த்தியையோ அல்லது பரசிவ மூர்த்தியையோ தியானிக்கவேண்டும். அப்போது இவ்விதம் மூர்த்திகொண்டருளும் வஸ்துவானது தனது உள் ளத்திலும் வெளியிலும் வியாபகமாய் அரூபமாய் ஆகாசம்போல ஒன்றி லும் ஸங்கமிராததாய் கூடஸ்த ஸச்சிதாநந்தமாயுள்ள ஸர்வக்ஞத்துவாதி ஆற்றலுடைய பரம்பொருளே எனவும், விஷ்ணுவிநாயக குஹாதி களாய்த் தோன்றியருளும் பொருளுமிதுவே எனவும் நிச்சயித்துக் கொள்ளவேண்டும். அன்றியும் ஒ இறைவனே உமது ஸச்சிதாநந்த ஸ்வரூபமான நிர்க்குண அத்வைத தத்வஞானத்தை எனக்கருளவேண் டும். உம்மைச் சரண மடைகின்றேன் எனவும் வேண்டவேண்டும்.

## க்ருஷ்ணோபாஸனை ஞாநஸாதநம்

இன்னுமொன்று இங்கு அறியத்தக்கது. அதாவது ஸர்வேச் வராகிய இறைவனுடைய அவதாரங்களுள் ஞாநதானம் செய்வதற் கெனவே ஆசார்ய வடிவமாய்த் தோன்றியது ஸ்ரீ க்ருஷ்ணாவதாரமே. அந்த அவதாரத்தின் பெருமையைச் சற்றுச் சந்தித்தால் சித்தம் ஆனந்த பரவசமாம்.

## கீதோபதேசகப் பரம்பொருளின் உபாஸனை

அர்ஜுனனுக்கு ஸாரதியாக யமைந்திருந்த விஷயமானது அந்த ப்ரபுவுக்கு அஹங்காரம் சிறிதுமில்லை என்பதை விளக்கும். பலரா மாதிகளின் கடூர வசனங்களை ஸஹித்திருந்தது கோபமிராத் தன்மையை குறிக்கின்றது. புத்திரன் தந்தைக்கு அடங்கியிருத்தல் உலகவியல்பி

லும் நீதியாயுள்ளது. ஸ்ரீ க்ருஷ்ணபகவானுக்கு மன்மதனே ப்ரத்யும்ன னெனும் புத்திரனாக ஜனித்த விஷயத்தைச் சற்று கவனித்தால் காமத்தி னால் ஆக்ரமிக்கப்படாதவர் என்பது விளங்கும். மஹரிஷியாகிய ப்ருகு வின் சாப வசனத்தை ஸத்தியமாக்குவதற்காகவே ராமாதி பல அவதா ரங்களை எடுத்துப் பத்நீவியோகாதிகளால் துன்புற்றவன் போல நடித் துக் காட்டியது என்ன? பாரத யுத்தத்தினில் தான் ஆயுதமெடுப்பதில்லை எனச் செய்த தனது பிரதிக்ஞை பொய்யாய்ப் போயினும் உம்மை ஆயுதமெடுக்கச் செய்கிறேனெனச் செய்த பீஷ்மாதி பக்தர்களின் பிரதிக்ஞை பொய்யாய்ப்போகக் கூடாதெனும் நோக்கத்தால் ஆயுத மெடுக்கத் திருவுளம் கொண்டது என்ன? இவை முதலிய விஷயங்களால் பக்தபராதீனர் என்பது இனிது விளங்கும். ஈச்வரபூஜையில் ஜனங்களுக் கிருக்க வேண்டிய உறுதியைக் காட்டுவதற்காகவே கமலத்திற்குப் பதி லாகத் தமது நேத்திரத்தைக்கொண்டு சிவபெருமானை அர்ச்சித்தனர் என் பவை முதலிய விஷயங்களால் பக்தியைத்தந்து பக்தனை ரக்ஷிப்பவர் என் பது விளங்கும். ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தின் ரூபலாவண்ய அமைப்பானது தேவசிற்பியாகிய விச்வகர்மாவின் மனத்திற்கு மெட்டாதது. அவ்விறை வனது அற்புத ஆனந்த அழகு மேனியைக் காமத்தினாலாவது க்ரோதத் தினாலாவது, பயத்தினாலாவது, ஸ்நேஹத்தினாலாவது மற்றும் எவ்வித நிமித்தத்தாலாவது ஏகாக்ரமாகச் சிந்தித்தவரும் பாகதியடைவார் என் பதைக் குறிப்பதற்காக கோபிகள், கம்ஸன், சிசுபாலன் முதலியவர்க ளுக்குப்பாகதியருளிய சரிதங்களாம். மழைபெய்வதற்கு முன் அடிமா னம் கறுத்துள்ள மேகமானது காண்பதற்கு எப்படி அழகாகவும், நேத்தி ரங்களின் தாபத்தை நீக்கி இன்புறச் செய்கின்றதாகவு மிருக்குமோ அவ்வாறே இவ்விறைவனது மூர்த்தியாம். இருண்ட கேசமுடைய சிரஸின் அழகு சிந்திக்க எட்டாதது. மலர்ந்த தாமரை மலர்போன்று காதுவரையில் நீண்ட கண்களுடையவர். பூர்ண சந்திரனைப் பழிக்கும் முகமுடையவர். அவரது அதரம் பவளம்போன்றது. உயர்ந்த நாசி யுடையோர். முகத்தினது அழகு சொரியும் புன்னகையும் கடைக் கண் பார்வையிலுள்ள கருணைப்பெருக்கும் கவிச்ரேஷ்டர்களும் வர் ணிக்க எட்டாததாம். நெற்றியும் செவியும் கன்னங்களும் பார்க்கின்ற வர்களின் கண்களைப் பறிகொண்டு அணைந்து தழுவி அக்கணமே முத்த மிடவேண்டுமென ஆத்ம ஞானிகளாகிய யோகிகளுக்கும் ஆவலை யளிப் பனவாம். அவ்விறைவனது கரங்கள் முழங்கால் வரையில் நீண்டவை. மார்பு விசாலமாகவும் ஸௌந்தர்ய தேவதை வசிக்கும் ஸ்தானமாகவும் உள்ளது. நான்கு புஜங்களை யுடையவர். பலவகையாயுள்ள ரத்நங்கள் பதித்த ஹஸ்தாபரண முடையவர். ஸ்வர்ண ஜரிகையால் ஜ்வலிக்கும் பட்டுபீதாம்பரம் தரித்தவர். ரத்நமோதிரங்களணிந்த விரல்களால் விளங் குவோர். கழுத்தினில் திவ்ய ரத்நமாலைகளோடு கௌஸ்துபமணிந்தவர். வனமாலையால் விளங்கும் மார்பினர். மயில்தோகை விளங்கும் மணிமகுட கிரீடம் தரித்தவர். அடங்காத யௌவன அழகு விம்மிக்கொண்டிருக்கும் அழகிய மேனியர். ஆத்மஞானத்தைத் தந்து அருளும் வள்ளலாயுள்ளவர். நெற்றியில் திவ்யகுங்குமதிலக மணிந்தவர். கைகளில் ஆத்மமுத்ரையும் பிரம்பு, ஜாட்டிக்கொம்பும் உடையவர். ப்ராம்மணர்களைத் தெய்வம்

போலக் கருதுவோர். பக்தர்களிடம் கருணாம்ருத வர்ஷத்தையுடைய வரும் துஷ்டர்களும் உலககண்டகர்களுமாகிய அஸுரமனிதர்களிடம் வஜ்ஜிராயுத தாரைபோன்ற கண்ணோக்கமுடையவருமாவர். த்ருஷ்டி நோக்கத்தினால் திவ்யப்ரபாவம் விம்மப்பெற்றவர். இவ்வாறுள்ள ஸ்ரீ க்ருஷ்ண பரம்பொருள் மூர்த்தியையாவது தியானம் செய்யவேண்டும்.

இவ்விதம் பரசிவப்பொருள் அல்லது பராசக்தி ஞானாம்ருதம் வர்ஷிக்கவென அருளிய ஸ்ரீ கிருஷ்ணவதாரம் ஆகிய இம்மூர்த்திகளுள் யாதேனும் ஓர் மூர்த்தியோடு கூடியுள்ள பரம்பொருளை பக்தியோடு தொழு தொழுகுவோர்களாயிருந்து வேதாந்த சாஸ்திர விசாரம் செய்வோருக்குப் பிரதி பந்தகமின்றி ஞானாப்யாஸம் ஸபலமாகும். ஸகுணனாகிய இறைவனிடம் பக்தி யில்லாமல் வேதாந்த நூல்களையோ மற்றெவ்வித அப்பியாஸங்களையோ செய்யினும் மனிதப் பிறவியை ஸபலமாக்கிக்கொள்ள இயலாது. ஆனால் இங்கு மற்றுமொன்று அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். ஈண்டு கூறியுள்ள ஈச்வரமூர்த்திகள் மூன்றினில் பக்தி எப்படி அவசியமோ! அப்படியே தனது குருவினிடமும் பக்தி யமைந்திருக்கவேண்டும். ஈச்வரனிடம் பக்தியுடையவனாயிருந்து ஸத்குருவினிடம் பக்தியிராதவனாயின் அவனுக்கு க்ஷேமம் கிடைக்காது. ஆதலால் ஈச்வரனிடம் போலவும் அதற்கும் மேற்பட்டதாகவும் உள்ள பக்தி சாஸ்திர உண்மையைப் போதிக்கும் குருவினிடமும் இருக்க வேண்டும். பரசிவத்தை பக்தியோடு உபாஸிப்பவர், இவ்விறைவனே பராசக்தி வடிவத்தோடும் ராமக்ருஷ்ணாதி வடிவங்களோடுமுள்ளவர் எனும் நிச்சயத்தையும், பராசக்தி, ஸ்ரீ க்ருஷ்ணாதிகளில் பக்தி யுடையவர், இவரே மற்றுமுள்ள இரண்டு வடிவங்களோடு கூடியவர் எனும் நிச்சயத்தையும் நன்கு வைத்துக்கொள்ளவேண்டும். அன்றியும் இந்த பரமசிவனோ அல்லது பராசக்தியோ அல்லது கிருஷ்ணனோ கூடஸ்தா ஸங்க சித்ரூபமாய் ஆனந்த ஸ்வரூபமாய் அகில சராசரங்களிலும் வியாபித்துக்கொண்டுள்ள பரப்ரும்ம ஸ்வரூபமே எனும் அபேத உணர்ச்சி அத்தியாவச்யமானது. அதுவே ஆனந்தத்தை அடைவிக்கும் ஸாதநம்.

ப்ரும்ம வித்யா ரஹஸ்யம் ஸம்பூர்ணம்.

ശ്രീവിദ്യായൈ നമഃ

സ്വാത്ഥാവബോധാ സ്സർവ്വാത്മാ കൃതിരാനന്ദി |

ശിവാർദ്ധകാ ശിവകൃതിശ്രീമണോവാഗ്ഘൃദാശ്രയം ||

ശരജ്ജ്യോത്സ്നാനിഭാ ദേവീ ശശിവർണ്ണമുഖസജ്ജടാ |

പ്രസീദതു ദയാമൂർത്തി ബ്രഹ്മവിദ്യാഹ്വയാഽപി ||

— மருவூர் கணேச சாஸ்த்ரியார்.

Printed at the 'Oaxton Press,' Madras.

